உ

# मध्यार्जुनक्षेत्र माहात्म्यम्

# ஸ்ரீ மத்த்யார்ஜுன க்ஷேத்ர மாஹாத்ம்யம்

## स्तुतिमणिमाला

## ஸ்துதிமணிமாலை







உ

ओं नमः शिवाय

स्कान्द-ब्रह्मवैवर्त-लि[illegible]राणगत

# श्रीमध्यार्जुनक्षेत्रमाहात्म्यम्

तिरुविशनल्लूरभिजन

श्रीश्रीधरवेङ्कटेशार्यविरचिता

# स्तुतिमणिमाला च

## ஸ்ரீ மத்யார்ஜுன க்ஷேத்ர மாஹாத்ம்யம்

திருவிசநல்லூர்

ஸ்ரீ ஸ்ரீதர வேங்கடேசார்யர் இயற்றிய

## ஸ்துதிமணிமாலை

தமிழில் கருத்துரையுடன் தொகுத்தவர்

ப்ரஹ்மவித்யா ரத்னம், ராஷ்ட்ரபதி ஸம்மானித

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி

வெளியிடுவோர் :

**V. கிருஷ்ணமூர்த்தி**

*164-27*,**C.1,P.J.** தாமஸ் அவென்யூ

ஈஞ்சம்பாக்கம், சென்னை-600 041

வியய 2006

*1. Sri Madhyaarjuna Kshethra Maahaatmyam and*

*2. Stuti Manimaala of Sri Sridhara Venkatesarya (Ayyaval) of Tiruvasanallur*

*First Edition : 2006*

*Copies : 500*

*Price :*

*Compiled with Tamil Translation by :*

*Brahmavidyaratnam Rashtrapati Sammanita Vaidya .S.V. Radhakrishna Sastri, Srirangam*

*Published by*

*V. Krishnamurthy,*
*164-27, C-1, Dr. P.J. Thomas Avenue*
*Injampakkam,*
*Chennai - 600 041*

*Lasertypeset & Printed at :*
*V.K.N. Enterprises,*
*Old 8/1, New 27, Dr. Ranga Rd., Myalpore,*
*Chennai-4 Cell : 98402-17036*

உ

# முன்னுரை

शुक्लाम्बरधो विष्णुः शशिवर्णश्चतुर्भुजः ।
प्रसन्नवदनो भाति सर्वविघ्नोपशान्तिदः ।।
शिवः शम्भुः शिवकरः शिवात्मैक्यानुभूतिदः ।
शिवाऽऽलिङ्गितवामाङ्गो विभाति हृदये शिवे ।।

### ஸ்தலமாஹாத்ம்யங்களின் தனிச் சிறப்பு

மாஹாத்ம்யம் மான்மியம் என்பது அந்தந்த ஸ்தலத்தின் பெருமையை விளக்க வந்த நூலாகும். ஈசன் எங்குமுள்ளான். ஆன்றோர்கள் தாம் வழிபடுவதற்கென ஈச சக்தியை ஓரிடத்தில் தவத்தால் பாமரனும் பண்டிதனும் கண்டுணரும்படி குவித்து வைத்துள்ளனர். கங்கை யமுனை முதலிய நதிகளிலுள்ள புனிதத்தை அந்தந்த ஸ்தலத்தினுள்ள தடாகங்களில் ஒருங்கே குவித்து வெளிப்படச் செய்துள்ளனர். க்ஷேத்ர யாத்ரையாகச் சென்று தீர்த்தங்களில் நீராடுவதும் அந்தந்த ஸ்தலத்தில் கோயில் கொண்டுள்ள பெருமானைக் கண்டுணர்ந்து வழிபடுவதும் ஆன்றோர்களின் வாழ்க்கையில் பெரும் பங்கைக் கொள்ளும். ஆண்டுதோறும் புனிதமான நாட்களில் இந்த யாத்திரை அமையும். இந்த நோக்கத்தில் தமிழ் நாட்டில் 5-10 கிலோ மீடர்களின் இடையே ஒரு புனித ஸ்தலத்தைக் காணலாம். நம் முன்னோர்கள் செய்து புனிதப் பணிகளின் உருவகமிது.

தெய்வம் என்ற நோக்கில் கைலாஸத்திலிருப்பவரும் மருதூரிலிருப்பவரும் ஸோமநாதத்திலிருப்பவரும் பூரியிலிருப்பவரும் சிவபெருமானே. அங்கு அவரைக் காண்பதிலும் இங்கு காண்பதிலும் வேறுபாடிருக்காது. ஆனால் புனிதம் காக்கப்படுமளவில் அவரது இருக்கையையும் அருகாமையையும் உணர முடியும். காவேரி ஆறும் யமுனை ஆறும் கங்கை ஆறும் மிகப் புனிதமானவையே. எனினும் அவை பெருகும் பாதையில் மிகவும் மலினமடைந்த இடங்களும் உண்டு. அங்கு கால்நடை கூட நீராடவிரும்பாது. அது ஆற்றின் குறையல்ல. ஆற்றின் அருகில் வாழ்பவரின் முறைதவறே.

கோயில்களிலும் இந்நிலை காணப் பெறுகிறது. புனிதத்தை மிக்க கவனத்துடன் காப்பாற்றத் தெய்வத்தின் அருகாமையில் உள்ளோம் என்ற ஆழ்ந்த உள்ளுணர்வு வெளிப்படும்படியான நடைமுறை, அங்கு வருபவர் அனைவரும் கருத்தொற்றுமையும் பாவனை ஒற்றுமையும், தூய்மையும் கொண்டு நடந்து கொள்ளுதல் என்ற சூழ்நிலை நன்கு பாதுகாக்கப்பட எல்லா குட்டையும் திவ்ய நதியாகும். சிறு கோபுரமும் பெரும் க்ஷேத்ரமாகும்.

தூய்மையே தெய்வத்தின் அருகாமையை உணர்த்துகிறது. மாமுனிவர்களும் அந்தத் தூய்மையைத் தேடி வருகின்றனர். அங்கொரு லிங்கம் அவர்களுக்குப் புலப்படுகிறது. கைலாஸத்திலும் கேதாரத்திலும் கண்டுணர்ந்த ஈசனே இந்த லிங்கமாகக் காட்சி தருவதை உணர்ந்து அங்கு அவரருள் பெறக்கடும் தவமியற்றுகின்றனர் என்று ஒவ்வொருத் ஸ்தல வரலாறும் கூறும். அங்குஅவர்கள் நீராட ஒரு தடாகத்தை நாடி 'கங்கே ச யமுநே சைவ கோதாவரி ஸரஸ்வதி ! நர்மதே ஸிந்து காவேரி தீர்த்தேऽஸ்மின் ஸந்நிதிம் குரு என வேண்ட அந்தத் தடாகத்தினுள் அனைத்து நதிகளும் தோன்றி அருள்புரிகிறார்கள். அந்தத் தடாகத்திலும் லிங்கத்திலும் எப்போதும் அருள்புரியும்படி தம் தவ சக்தியால் தெய்வத்தை அன்பால் பக்தியால் கட்டுப்படுத்தியுள்ளனர். மின் சக்தியைப் போல் அந்த தெய்வ சக்தியிடம் தடையின்றி நலம் தருமாறு நமக்கு நலம் புரியுமாறு தூய்மையும், புனிதமும் கெடாதவாறு நடந்து கொள்ள வேண்டும். தவறாக நடந்தால் தெய்வ ஸாந்நித்யம் அங்கிருந்து அகலாது. ஆனால் நன்மை பயக்காது. நன்மை பயக்காததெதுவும் கெடுதி தரும். அந்தக் கண்ணோட்டத்தில் ஊரையும் குளத்தையும் கண்ட முன்னோர் சில நடைமுறைகளை பல்லாயிர ஆண்டு அனுபவத்தால் அறிமுகப்படுத்தி அவற்றை நன்கு பழகிச் சிற்றூரிலுள்ள தெய்வமும் வழிபாட்டால் கைலாஸ யாத்திரையின் பலனைத் தருவதை இந்த மான்மியங்கள் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர். இது கட்டுக் கதையல்ல. பொய்யல்ல. வஞ்சனையல்ல. நேற்றுவரை தனக்கும் மற்றவருக்கும் பாகுபாடின்றி அனுபவத்திற்கு வந்த உண்மை நிலையின் தொகுப்பே மான்மியம்.

தனது ஊரில் உள்ள கோயிலே கைலாஸம் காசி எனில் யாத்ரை தேவையற்றது என்ற எண்ணம் தவறானது. தினமும் உண்ணும் உணவே விருந்திலும் தரப்பட்டாலும் ஒருமனத்தார் பலருடன் இனிய சூழ்நிலையில் உணவேற்பதில் தனித் தொரு ஆனந்தம் உள்ளது. க்ஷேத்ர யாத்ரையும் புனித நீராடலும் அத்தகையதே. சில க்ஷேத்ரங்களில் அடியார்கள் லக்ஷக் கணக்கில் ஒரே சிந்தனையுடனும் பக்தியுடனும் ஒரே ஸமயத்தில் கூடும் போது. உணர்வில் ஓர் அழுத்தமும் இறுக்கமும் உணரப் பெறுகிறது. இந்த உணர்வுடன் ஒரு தைப்பூசத்தன்று திருவிடை மருதூரில் கூடுவோம்.

## திரு-இடை-மருதூர் எனும் மத்ய - அர்ஜுனம்

அருவமான பரம்பொருளைத் தாம்பெற்ற உணர்வுகளுக்கேற்ப உருவகப்படுத்தி அதனை நேரில் காணத் தேடியலைந்த தேவர்களும் முனிவர்களும் பெரும்பாலும் பெருமலைகளிலும் பெருங்காடுகளிலும் கண்டு வழிபட்டுள்ளனர். அருவத்தை உருவகப்படுத்த முனைந்தவர்களின் எதிரே அந்தப் பரம் பொருள் பேரொலி வடிவில் அல்லது பேரொளி வடிவில் காட்சி தந்துள்ளது. ஆதியும் அந்தமுமற்று எங்கும் நீக்கமற நிரம்பியுள்ள அதனைப் ப்ரணவம் என்ற ஒலியாகவும் அடியும் நடுவும் நுனியுமற்று, உள்ளும் புறமும் என்ற வேற்றுமையின்றி திசையாலும் காலத்தாலும் வேறு பொருளாலும் வரையறுக்க முடியாதவாறு, சூடும் கண் கூச்சமுமற்ற பேரொளியாகவும் அவர்கள் உணர்ந்தனர். அந்தப் பேரொலியும் பேரொளியும் ஜ்யோதிர்லிங்க வடிவம் பெற்றன. ஈசனின் கருணைப் பெருக்கால் அந்த இறுக்கம் வலிவு பெற்று அனைவரும் காணத்தக்க லிங்க வடிவும் பெற்றது.

ஆலயத்தின் நடுவில் கண்களுக்குப் புலப்படுவராக உள்ளவரே தன்னைச் சிந்திப்பவரின் இதயத்தின் நடுவில் துலங்குகிறார். இதயத்தின் நடுவில் காணப் பெறுகிற அவர் இங்கும் மருதங் காட்டின் நடுவில், மத்ய-அர்ஜுன ஈசராகத் துலங்குகிறார். அந்தக் காட்டின் நடுவிலிருந்த ஒரு மருது மரம் ஈசன் உறையுமிடமாயிற்று. ஈசனின் நித்திய வாஸஸ்தலமான கைலாஸம் ஈசனுக்குத் தான் செய்கிற ஸேவையில் குறை நேரா

வண்ணம், அந்த மருதமரத்தின்உட்புகுந்தது. கைலாஸமே ஈசனின் உறைவிடமாக ஆக, அந்த மருத மரமாயிற்று. காட்டின் நடுவில் நின்ற கைலாஸம் என்ற மருதின் இருப்பிடமானதால் அவ்விடம் மத்த்யார்ஜுனமாயிற்று.

வஸிஷ்டர் முதலானோர் வேள்வி புரிய இடம்தேடி குருபரனான குமாரன் வழி காட்டலில் இங்கு வந்தனர். உமாதேவி ஈசனை யோக சக்தியால் வழிபட்டாள். பரம் பொருளான ஈசன் ஜ்யோதிலிங்கமாகத் தோன்றி அவளது வழிபாட்டை ஏற்றுத் தனது ஸோமாஸ்கந்த உருவைக் காட்டி ஏகநாயகராக வெளியானார். தேவர்களும் முனிவர்களும்வேண்ட இறைவன் சோதி வடிவினராக, லிங்கவடிவினராக, ஏகநாயகராக அருள் புரிகிறார். ஈசன் தன்னைத் தானே வழிபட்டுத் தனது வழிபாட்டு முறையைக் காட்டினார்.

திருவெண்காட்டில் (ச்வேத வனத்தில்) வசித்த ருஷிகள் அகஸ்த்யரைத் திருவெண்காட்டிற்கு அழைத்துச் சென்றனர். தக்க வழிகாட்டியில்லாததால் மக்கள் தவறான வழியில் செல்வதைத்தடுக்க ஈசனின் ஆணையால் கணேசரே சிவ வழிபாட்டில் ஈடுபட்டு மக்களுக்கு நல்வழி புலப்படச் செய்தார். ஆஜ்ஞா கணேசர், மருதூராண்ட பிள்ளையார், ஆண்ட பிள்ளையார் என்று தனி இடம் பெற்றார். ரோமசர் அங்கு வந்தபோது நந்தி எம்பெருமான் மூலம் ஈசனின் நிலை உணர்ந்து அரசர்கள் மூலம் காட்டை மக்கள் வாழிடமாக ஊரை மாற்றினார்.

ஒவ்வொரு மனிதனும் பிறக்கும் போதே தேவர்கள், ருஷிகள், பித்ருக்கள், மற்றும் மனிதர்கள், உயிரினம் என்ற ஐவருக்குக் கடன்பட்டுள்ளனர். இக்கடன்களைத் தீர்ப்பதற்கென்றே இவன் பிறக்கிறான். ஒவ்வொரு கடனும் தீரத் தனித் தனி வழிமுறைகள் உண்டு. அல்லும் பகலும் அதே சிந்தனையுடன் கடனைத் தீர்ப்பதில் ஈடுபட்டாலும் மிகச் சிலரே அதில் தேறுகிறார்கள். ஈசனை வழிபட்ட தேவி உமை முனிவர் முதலானோர் ஈசனிடம் அருள் வேண்டித் தவமிருந்து இத்தலத்தில் அக்கடன்கள் எளிதில் நீங்குமாறு பல எளிய வழிகளைக் கண்டுள்ளனர். அவற்றின் தொகுப்பாகவே இந்த ஸ்தலமாஹாத்மியம் அமைந்துள்ளது.

அர்ஜுனம் என்ற வெண் மருதமரம் தூய வெண்ணிறம் கொண்டது. வெண்ணிறம் தூய்மையின் அடையாளம். தூய வெண்மைக்கே 'அர்ஜுன' என்ற பெயருண்டு. பாண்டவர்களில் நடுவன் அர்ஜுனன் எனப் பெயரை அவனது வெண்ணிறத்தால் பெற்றான். மருதமரமும் வெண்மைக்கும் தூய்மைக்கும் பெயர் பெற்றது.

முன்னர் சம்பக வனமாயிருந்ததே பின்னர் மருதவனமாயிற்று என்பர். சண்பகம் மென்மைக்கும் நறுமணத்திற்கும் பெயர் பெற்றது. ஈசன் தூய்மை மிக்க காடுகளில் உறை பவன். மருதவனம் போல், கடம் பக்காடு (கதம் வனம் மதுரை) ஆலங்காடு (வடாரண்யம்) வீழ்க் காடு (தேஜிநீவனம்) திருத்தலைச் சங்காடு (சங்கவனம்) நாவற்காடு (ஜம்பூவனம் - திருவானைக்கா) இலந்தங்காடு, (பதரிகாச்ரமம்) என்று ஆயிரக்கணக்கான காடுகள் உண்டு. சில பூக்களிலும் இறைவனுக்கு நாட்டமதிகம். பாதிரி, புன்னை, சண்பகம், நந்தியாவட்டை, அலரி, எருக்கன், தாமரை, செங்கழுநீர் என்ற எட்டும் இறைவன் உவந்து ஏற்பவையாம்.

திருப்பாதிரிப் புலியூர், புன்னையங்கானல், (மயிலை) திருக்கரவீரம், திரு எருக்கத்தம் புலியூர், கமலாலயம் (திருவாரூர்) பூவிருந்தவல்லி, திருவல்லிக்கேணி என்று பூவைக் கொண்டு அறிமுகமாகிற க்ஷேத்ரங்கள் உண்டு. இறைவனுக்கென அப்பூக்களைக் கொய்பவர் அதில் தன் நகமும் கேசமும் படாதவாறு பறிப்பர். இத்தகுதியைப் பெறுவதற்கென தன்கைகளும் கால்களும் புலியுடையதாக ஆகத் தவமிருந்து பெற்றவர் வியாக்ரபாதர். அவர் வழிபட்டத் தலங்களின் பெயர்களில் 'புலி' தொக்கி நிற்கும். திருப்பாதிரிப் புலியூர், பெரும் பற்றப் புலியூர், புலியூர் (சிதம்பரம்) பெரும்புலியூர், ஓமாம்புலியூர், திருவெருக்கத்தம்புலியூர் முதலியவை வியாக்ரபாதரை நினைவில் கொணர்பவை.

அவ்வாறே இறைவனுக்காகவே தோன்றிய மருதமரம் மூன்று இடங்களில் ஈசன் குடிகொண்டுள்ளதைத் தன் அர்ஜுன என்ற பெயரால் உணர்த்துகிறது. புடார்ஜுனம் என்ற திருப்புடை

மருதூர் (திருநெல்வேலிக் கருகே) மல்லிகார்ஜுனம் என்ற ஸ்ரீசைலம். இவ்விருக்ஷேத்ரங்களுக்கிடையே (நடுவில்) இருப்பதால் மத்யார்ஜுனம் இடைமருதூர் என்ற இந்த ஸ்தலம் தனிச் சிறப்பு பெறுகிறது. நடுவில் இருப்பதே பெருமைக்கு எடுத்துக் காட்டு.

உலகம் என்ற அண்ட வட்டத்தின் நடுவே அமைந்துள்ளது என்பர். தமிழ் நாட்டின் நடுவே உள்ளதென்பர். தமிழ் நாட்டையே ஆலயமாகக் கண்டு அதன் மூலஸ்தானத்தில் உள்ள தென்பர். ஈசனது ஆலயத்தின் சுற்றுப் புறத்தில் விருஷபர், தக்ஷிணாமூர்த்தி, கணபதி, ஸ்கந்தர், நவக்ரஹங்கள், நடராஜர் சண்டிகேசர் என்ற பரிவார தேவர்களின் கோஷ்டங்கள் அமைந்திருக்கும். மருதவாணர் என்ற இந்த ஈசனைச் சுற்றி நந்தி துலங்குகிற திருவாவடுதுறை, விநாயகர் துலங்குகிற திருவலஞ் சுழி, ஸ்கந்தர் துலங்குகிற ஸ்வாமி மலை, சண்டிகேசர் துலங்குகிற திருவாப்பாடி, நவக்ரஹங்கள் துலங்குகிற சூர்யனார் கோவில், நடராஜர் துலங்குகிற சிதம்பரம். பைரவர் துலங்குகிற சீர்காழி, மூலவரே ஸோமா ஸ்கந்தராகத் துலங்குகிற திருவாரூர், தக்ஷிணா மூர்த்தி தனித்து அருள் புரிகிற ஆலங்குடி என்ற நாட்டின் பெருவட்டத்தில் சுற்றுத் தெய்வங்கள் சூழ்ந்திருக்கக் கோவில் கொண்ட ஏக நாயகரான ஈசன் நடுவில் (மத்திய) அர்ஜுனேசராகக் காட்சி தருகிறார் என்பர்.

மத்த்யார்ஜுன மாஹாத்ம்யம். மற்றொரு சிறப்பை வெளிப்படுத்துகிறது. உலகின் நடுவில் தோன்றுகிற தூய வெண்ணிற ஒளி - நிர்மலம், நிர்லேபம். அதுவே மத்த்யார்ஜுனம். அகஸ்தியரின் வழி காட்டலில் முனிவர்கள் அவ்விடம் வந்து ஆதி சக்தியின் வெளிப்பாடான ஸரஸ்வதி, லக்ஷ்மி உமா என்ற மூவரையும் தவயோகத்தால் வழிபட்டு ஆதி சக்தியின் அருள் பெற சண்பகவனம் அமைத்தனர். ஆதி சக்தியான உமை தோன்றியதும் அவளிடம் சிவதரிசனம் கிடைக்க அருள் வேண்டினர். தேவி யோக முறையால் புற உலகை மறந்து உள்ளத்தில் சிவப் பரம்பொருளை உருவகப்படுத்தி த்யானித்து மானஸ உபசாரங்களால் வழிபட்டாள். ஹ்ருதய கமலத்தில் நீக்கமற ஒளிவடிவில் நிரம்பி, ஆதியும் அந்தமும் மேலும்

நடுவும், கீழும் உள்ளும் புறமுமின்றி சிவப் பொருள் நின்றது. அவரை இதய கமலத்திலிருந்து ப்ரஹ்மரந்த்ரம் வழியே யோக நிலையால் வெளிக் கொணர்ந்து சோதி உருவினரை முனிவர்கள் காணச் செய்தாள். தூய்மை மிக்க இதய நடுவிலிருந்து வெளிப்பட்டதால் மத்யார்ஜுனேசரானார். அர்ஜுனம் - நிர்மலம். அந்தச் சம்பகவனமே பின்னர் அர்ஜுனவன (மருதவன) மாயிற்று. மருதவனத்தின் நடுவே தோன்றியவரானதாலும் மத்த்யார்ஜுனேசர்.

சம்பகவனம், மருதவனம், ஆதிசக்தி தவம் புரிந்த இடமானதால் சக்திபுரம், அகஸ்த்யர் ரோமசர் முதலான ருஷிகள் தவ மிருந்த இடமானதால் தபோவனம், ஜ்யோதிர்லிங்கம் அமைந்துள்ளதால் ஜ்யோதிர் நகரம். கங்கை முதலிய அனைத்துப் புண்ணிய நதிகளும் இங்குள்ள தீர்த்தங்களில் தங்குவதாலும் முனிவர்கள் தம் தம் தவம் நிறைவுறத் தமக்கெனத் தனித்துத் தீர்த்தமும் தேவதையும் காவல் மரமும் கொண்டு வாழ்ந்ததால் ஸர்வ தீர்த்தபுரம், வீர சோழன் நகரமைத்தமையால் வீரசோழபுரம், பூலோக சிவலோகம், தர்ம விருத்திபுரம், முக்தி நகரம் எனப் பல பெயர்களால் ஸ்தல மாஹாத்ம்யம் இவ்வூரை அறிமுகப் படுத்துகின்றது.

திருவிடைமருதூர்த் திரு அழகு, திருவாரூர்த் தேர் அழகு, திருவிரிஞ்சை மதிலழகு என்பர். சிலர் வாயில் திருவிடை மருதூர்த் தெரு அழகு என்றும் வரும். தெருக்கள் அழகுடன் விளங்குவதும் விளங்காததும் அங்கு வாழ்கின்ற மக்களின் பாங்கைப் பொறுத்தது. திரு (ஸ்ரீ) என்பது இறையருள். ஈசனருள் எங்கும் நிறைந்திருப்பதை உணர ஒரு தனி மனப்பக்குவம் வேண்டும். அழகும் இனிமையும் பெருமையும் அவரவாரல் உணர்ந்து காணத் தக்கவை. சுட்டிக் காட்டுகிற வெளி வேஷம் எதுவும் அவற்றிற்கில்லை. ஈசனின் திருமேனிப் பேரெழில் வேறெங்கும் காண இயலாத பெரு வனப்பு கொண்டது. நந்தியிலிருந்து மூலப் பெருமான் உள்ள இடம் வரை நீண்ட இடைவெளியில் ஆங்காங்குள்ள விளக்கொளியும் ஆன்ம வெளி ஒளியும் கூடத் தரிசிக்கும் போது இனமறியாத பேரானந்தம் தருகிறது. பாமரனுக்கும் அவ்வுணர்வு நினைவிலிருந்து அகல

வெகுநேரமாகிறது.

பாரத தேசத்தில் பன்னிரு ஜ்யோதிர் லிங்கங்கள் உள்ளன. ராமேச்வரம் ஒன்றே அவற்றில் தமிழ் நாட்டில் உள்ளது. திருவிடை மருதூரும் திருவண்ணாமலையும் மற்றும் பல ஸ்தலங்களும் ஜ்யோதிர் லிங்க க்ஷேத்ரங்களே. ஆதி சங்கரர் அத்வைதமே ஸத்யம் என அறிஞர்களிடையே நிலை நாட்டினார். அதனை மஹாலிங்கப் பெருமான் இருகைகளைத் தூக்கி உறுதிப்படுத்தினார் என்று சங்கர விஜயங்கள் கூறும்.

संप्राप्तसन्तोषविनीत शिष्यैः साकं जगत्यां विजयं विधित्सुः ।
अद्वैत सिद्धान्तसरोजसूर्यो मध्यार्जुनेशावसथं ययौ सः ॥
तं पूजयित्वाऽनुचरैः सभायां पप्रच्छ तत्त्वं किमिहेति योगी ।
दृश्याकृति प्रोच्चभुजोऽथ सत्यं अद्वैतमेवेत्यवदत् त्रिरीशः ।

என்று குரு வம்ச காவியம் கூறும். ''மகிழ்ச்சியும் அடக்கமும் கொண்ட சீடர்களுடன் நாடெங்கிலும் தன் அத்வைத ஸித்தாந்த மெனும் தாமரையை மலரச் செய்கிற ஸூர்யனான சங்கரர் அத்வைத ஸித்தாந்தத்தின் வெற்றியைக் காட்டவந்தவராக மருதவாணரின் ஆலயத்திற்குச் சென்றார். அவரை வழிபட்டபின் அங்கு கூடிய பண்டிதர்களின் நடுவில் தன் சீடர்களுடன் நின்ற அவர்'' எது உண்மை நிலை? என ஈசனைக் கேட்டார். ஈசனோ தன் கைகளை உயர்த்திக் காட்டி ஸத்யம் அத்வைதம் என மூன்று தடவை கூறினார்.''

சித்விலாஸீய சங்கர விஜயத்தில் மற்றொரு சிறந்த கருத்து காணப் பெறுகிறது.

तत्क्षेत्रवासिनः सर्वान् प्रातः स्नानपरायणान् ।
पञ्चयज्ञपरान्नित्यं देवतातिथिपूजकान् ॥
उमागणपतीशार्काच्युतांघ्र्यर्चा परायणान् ।
त्यक्त भेदकथानाशु वेदान्त परिनिष्ठितान् ॥
विधाय देशिकेन्द्रोऽसौ प्रसाद्य च महेश्वरम् ।
निर्जगाम ततः शिष्यैः पद्मपादादिभिर्वृतः ॥

''அந்த க்ஷேத்ர வாஸிகளைத் தினம் புண்ய தீர்த்தங்களில் நீராடச் செய்து தேவ - ருஷி - பித்ரு - மநுஷ்ய பூத வேள்விகளைச் செய்து ஈசனையும் அதிதிகளையும் வழிபடச் செய்தார். சிவன் வேறு விஷ்ணு வேறு, இவர் உயர்ந்தவர், அவர் தாழ்ந்தவர் என்று பேத பாவனையை அவர்கள் உள்ளத்திலிருந்து அகற்றி உமை, கணபதி, ஈசன், ஸூர்யன், விஷ்ணு என்ற ஐவரையும் தினமும் பஞ்சாயதனங்களில் வழிபட்டு எல்லாம் அந்தப் பரம் பொருள் ஒன்றே என்று தினமும் அநுஸந்தானம் செய்பவர்களாக்கினார். மஹாலிங்கரின் அருள் பெற்று அங்கிருந்து சிஷ்யர்களுடன் புறப்பட்டார்.'' இதிலிருந்து சங்கர பகவத் பாதர் ஸத்யம் அத்வைதம் என்று நிலைநிறுத்தி, சிறிதும் பேதபாவனையின்றி, கணேசர், ஸ்கந்தர், சிவபெருமான், உமாதேவி, நாராயணன், ஸூர்யர் என்றிவர்களில் நிறைந்து நிற்கிற பரம் பொருளுணர்வு சிறிதும் குன்றாமல் இறை வழிபாட்டையும் ஸம்ப்ரதாயமாக உலகினருக்குப் புகட்டி அதனைப் பின்பற்றச் செய்தார் என்பது தெளிகிறது. இங்குள்ள காஞ்சீ காமகோடி பீடத்து மண்டபத்தில் இந்நிகழ்ச்சி சித்திரிக்கப்பட்டுள்ளது.

ப்ருஹத் ஸுந்தர குசாம்பிகா ஸமேத ஜ்யோதிர்மயமஹாலிங்கேச்வரர் என்ற இவரை அழைப்பர். பெரு நலமாமுலையாள் என்ற ப்ருஹத்ஸுந்தர குசாம்பிகை ஈசனை மணம் செய்து கொண்ட வரலாறும் சிறப்பு மிக்கது. வைகாசியில் வஸந்தோத்ஸவத்தில் இது இன்றும் இடம் பெறுகிறது. ஈசனைக் காணவந்த அகஸ்த்யர் முதலானோர் ஈசனையும் தேவியையும் திருமணக் கோலத்தில் காண விரும்பினர். பராசக்தி உடன் குழந்தையாகி வாணியர் இல்லத்தில் வளர்ந்தாள். பருவடைந்த அவளிடம் ஸரஸ்வதி குறத்தி வேடம் பூண்டு சிவனை மணப்பாய் எனக் குறி கூற, தேவி காவிரிக் கரையில் அமர்ந்து தவம்செய்ய, ஈசன் அதனை ஏற்றார். தவக் கோலம் கொண்ட தேவியைக் கண்டதும் சிவன் அவளிடம் மோஹம் கொண்டதால் மோஹாம்பிகையாகிச் சிவனை மணக்கிறாள். திருக்கல்யாணம் நடந்ததும் மஞ்சள் நீராடலில் குறத்தியான ஸரஸ்வதி தன் குறி நிறைவுற்றதற்கான ஸன்மானம் பெற்று மறைகிறாள். வெள்ளி ரதத்தில் இருவரும் ஊர்வலமாக வருவதை இன்றும் மக்கள்

கண்டுகளிக்கின்றனர்.

**தீர்த்தங்கள் :-** முனிவர்கள் வேள்வி புரிய ஏற்ற இடத்தைச் சொல்லுமாறு ஸ்கந்தரிடம் கேட்க அவர் திருவிடை மருதூரைக் காட்டுகிறுர். தன் அன்னே கங்கையை எல்லோரும் நீராட, நீர் நிலேயாக இங்கு தங்க வேண்டினுர். கங்கை ஈசனே நீராட்டி வழிபடக் கிணற்று வடிவில் உள்ளாள். இவ்வாறு ஒவ்வொரு முனிவரும் தன் தவத்திற்கு ஏற்ற குடிலை அமைத்து அதன் எதிரில் ஒரு தீர்த்தத்தையும் ஈசவழிபாட்டிற்கென அமைத்துக் கொள்கிறுர்கள். வழிபடு தெய்வமும் காவல் தெய்வமும் ஸ்தல விருக்ஷமும் ஒவ்வொன்றுக்கும் தனியே உண்டு. அந்தந்த முனிவரே அதற்கு ருஷி. காருண்ய தீர்த்தம், பாண தீர்த்தம், பராசர தீர்த்தம், ஸோம தீர்த்தம் (2) ருத்ர தீர்த்தம், பாண்டவ தீர்த்தங்கள் (5) திக்பால தீர்த்தங்கள் (8) க்ருஷ்ண கூபம், கனக தீர்த்தம், சூர்ய தீர்த்தம், மருத தீர்த்தம், நந்தி தீர்த்தம், த்ரோண தீர்த்தம், கௌதம தீர்த்தம், கல்யாண தீர்த்தம் சேஷ தீர்த்தம் ஸ்கந்த தீர்த்தம், ஐராவத தீர்த்தம் என முப்பத்தைந்து புகழ் பெற்றவை. காவிரியின் இறங்கு துறையாக பூசத் துறையே கல்யாண தீர்த்தம். கச்யப தீர்த்தம் மற்ருெரு காவிரித் துறை. இவற்றில் நீராடுவது பற்றிய விவரம் மாஹாத்ம்யத்தில் காணப் பெறுகிறது. பூசத் துறையில் தைப் பூச உற்வத்தின் நீராட்டல் நடைபெறுகிறது. திருமணமும் இங்குதான் கொண்டாடப் பெறுகிறது.

விச்வகர்மா என்ற தேவ சிற்பியும் பராந்தக சோழன், வரகுண பாண்டியர், ஹம்ஸத் த்வஜர், வீரஸேனன்,, சித்திர கீர்த்திப் பாண்டியன் முதலான பண்டைய சோழ சேரப் பாண்டிய அரசர்களும் ஆலயத்தை நிர்மாணித்துப் புதுப்பித்தவர்கள். அவ்வழியில் இன்றுவரை ஆலயம் சீர் குலேயாமல் புதுப்பித்தவர்கள் பலர். அவர்களே இன்றைய மக்களும் இவர்களது ஸந்ததியினரும் வாழ்நாள் முழுவதும் நினேவு கூர்ந்து வணங்கத் கடமைப்பட்டவர்கள். இவர்களின் வரலாறு மிக மிக நீண்டது.

**திருக்கோயில் அமைப்பு :-** கிழக்கே பாணுபுரத்தையும் தெற்கே திருநீலக்குடியையும் மேற்கே த்ரிபுவனத்தையும்

வடக்கே காவேரியையும் அதன் பிரிவான வீர சோழன் ஆற்றையும் எல்லையாகக் கொண்ட ஊரின் நடுவே ஏறக் குறைய இருபது ஏக்கர் நிலப்பரப்பில் திருக்கோயிலும் அதன் வடகிழக்கில் புண்ய தீர்த்தமான காருண்யாம்ருதமும் இடம் பெற்றுள்ளன. பல நல்லரசர்கள் தாம் பெற்ற இன்பத்தின் வெளிப்பாடாக கோயிலைச் சிறப்பான முறையில் க்ஷேத்ரத்தின் முழுப்பெருமையும் துலங்கும்படி கட்டிக் காத்துப் பின் ஸந்ததியினரிடம் ஒப்படைத்துள்ளனர். திருவாவடு துறை ஆதீனத்தார் மிக மிகச் சிறப்புடன் இந்தச் சிவப் பணியைப் பேரார்வத்துடனும் திறமையுடனும் நடத்தி வருகின்றனர். சுற்றிலும் மடவிளாகங்கள், தேரோடு வீதிகள் சூழ ஐந்து கோபுரங்களும் பெருமதிற் சுவர்களும் காக்கின்றன. மேற்கு கோபுரம் மிகப் பெரிது. கிழக்கில் பாண்டிய கோபுரம் தனித்து அழகுடன் காண்கிறது.

ஆஜ்ஞா கணபதி எனும் ஆண்ட கணபதி, பெரு நலமாமுலையம்மன் என்ற ப்ருஹத் ஸுந்தர குசாம்பிகை, மருதவாணன் மருதீசன், மத்த்யார்ஜுனேச்வரர் என்ற ஸ்தல நாயகரான ஜ்யோதிர் மஹாலிங்கேசர், ஸாம்ப தக்ஷிணா மூர்த்தி, ஏகநாயகரான ஸோமாஸ்கந்தர், அர்த்த நாரீச்வரர், கைலாஸமே உருவான ஸ்தல விருக்ஷமான மருதமரம், அதன் அடியில் கச்யபருக்குக் காட்சிதந்த பால க்ருஷ்ணன் எனப் பல மூர்த்திகளாக இறைவனை இங்கு தரிசிக்கிறோம். மத்த்யார்ஜுன க்ஷேத்ர மாஹாத்ம்யம் இவர்களுது பெருமையை நமக்கு உணர்த்தும்.

கோயிலின் வெளியே அதனை ஒட்டி வடகிழக்கில் கிழக்கு கோபுரத்தினருகில் உள்ள காருண்யாம்ருத தீர்த்தத்தில் நீராடி பாப மலங்கள் அகன்று விட்ட நினைவுடன் கோயிலினுள் செல்கிறோம். கிழக்குக் கோபுர வாயிலின் தென்புறம் அமைந்த விநாயகர், வட புறம் அமைந்த ஸ்கந்தர், கோபுரத்தின் தெற்குச் சுவரில் பட்டினத்து அடிகள், இவர்களை வணங்கி அச்வமேத ப்ராகாரத்தில் வலம் வருகிறோம். கோயிலுள்ள அனைத்துத் தேவர்களையும் வலம் வந்த திருப்தியுடன் கோபுர வாயில்

வருகிறோம். முன்னர் பூசத் துறையில் அமர்ந்திருந்த விநாயகர் இப்போது கோபுர வாசலில் படித்துறை விநாயகராகக் காட்சி தருகிறார். பலி பீடம் நந்தி ஸ்தல வரலாறு காட்டுகிற வண்ணச் சித்ரங்கள், வரலாற்றில் ஓர்அரசரைப் பிடித்த ப்ரஹ்மஹத்தி, அரசனைப் பின் தொடர்ந்து இதுகாறும் வந்தது, கோயிலினுள் நுழைய இயலாததால் கோபுரச் சுவற்றில் பதுங்கி நிற்பது. இவற்றைத் தாண்டி உள்ளே செல்ல கொடுமுடிப் ப்ராகாரம். கைலை மலையை வலம் வந்த புண்யம் தருவது. கைலை மலை பற்றிய சித்திரங்கள் மிக அழகானவை. அதன் வட கிழக்கில் மழைச் சொக்கர், மழை வேண்டி வழி படத்தவறாது உடன் மழைபொழியச்செய்பவர். பாண்டிய கோபுரம் அதன் தென்புறம் வரகுண பாண்டியன் தன் மனைவி காந்திமதியை ஈசனிடம் அர்ப்பணம் செய்வது, கோபுரத்தினுள் அதிகார நந்தி, இடையே நக்ஷத்திரலிங்கங்கள் ஸித்த லிங்கங்கள் இவர்களின் காட்சி, பிரணவப்பிராகாரம். இது மருதீசனைச் சூழ்ந்துள்ள வெளிப் பிராகாரம். இதன் இருபுறச் சுவர்களும் உயர்ந்து நடைபாதை குறுகியிருப்பதால் எந்த ஒலியும் எதிரொலியாகத் திரும்புகிறது. தென்மேற்கு மூலையில் அது அதிகம். ஓங்காரம் நன்கு எதிரொலிப்பதால் இந்தப் பெயர், வடபுறத்தில் வேம்படி முருகன், ஸ்தல விருக்ஷமான மருதீசனின் மற்றோர் வடிவமான மருதமரம். அதன் அடியில் காச்யப முனிவருக்குப் பால க்ருஷ்ணனாக தரிசனம் தந்த பெருமான், பைரவர், சிங்க முகத் தீர்த்தம் இவற்றைக் கடந்து மூலஸ்தான தரிசனத்திற்காக உட்ப்ரகாரம் வருகிறோம்.

அங்கு தெற்கில் வடக்கு நோக்கிய ஆஜ்ஞா கணபதி எனும் ஆண்டகணபதி, மருதாண்டகணபதி. தினமும், ஆறுகாலங்களிலும் ஈசனை வழிபடுபவர், ஏழு மாதாக்கள், தக்ஷிணாமூர்த்தி, இத்தலத்தின் ஸோமாஸ்கந்தரான ஏகநாயகர், முருகப் பெருமான், கைலாஸத்தில் அமர்ந்த கோலத்தில் மருதவாணரும் அம்பிகையும், லக்ஷ்மீ, சிலா ரூபமான மருதமரம், பஞ்ச லிங்கங்கள், காந்திமதியம்மன், ஜ்வரஹர பைரவர், ஐயனார், அர்த்த நாரீச்வரர், துர்க்கை, சண்டிகேச்வரர், அர்த்த மண்டபத்தில் ஸாம்ப தக்ஷிணா மூர்த்தி (உமைக்கு சிவ தத்துவம்

போதித்தவர்) நடராஜர், இவர்களைத் தரிசித்து மஹாலிங்கப் பெரும் ஜோதியைத் தரிசிக்கிறோம்.

வெளியே வந்து நவக்ரஹங்களை வழிபட்டு வலம் வந்து தெற்கு கோபுரத்தின் வழியே வெளிப்பட்டு ப்ருஹத் ஸுந்தர குசாம்பிகையை தரிசிக்கிறோம். சனி, சட்ட நாதர், சண்டிகேச்வரி முதலானோரைத் தரிசித்து வெளிவந்து வல்லப விநாயகர், ஷண்முகர், மூகாம்பிகை, ஸ்ரீ சக்ரேச்வரி முதலானவரைத் தரிசிக்கிறோம். கோயிலிருந்து வெளிப்படுகிறோம்.

கோயிலினுட் செல்லும் போது சென்ற வழியாகவே திரும்பாமல் வழியை மாற்றி அம்பிகை கோயில் வழியே வெளி வருவர். நம்மைப் பிடித்த பாபங்கள் அந்தச் சோழ ப்ரஹ்ம ஹத்திபோல் கோயிலினுள் நுழைய இயலாததால் சிவ கோபுர வாசலில் கட்டுண்டுள்ளன. மறுபடி அவ்வழி வந்தால் அவை நம்மைப் பின் தொடரக் கூடும் என்ற நம்பிக்கையே சென்ற வழியிலேயே திரும்பாததற்குக் காரணம் என்பர்.

அம்பிகை இங்கு ஈசனின் வலப் புறத்தில் அமர்ந்துள்ளாள். கல்யாணக் கோலத்தில் வலப்புறம் அமர்வது வழக்கம். மத்த்யார்ஜுன சிவனாக இறைவன் தோன்றியதும் அம்பிகையே முதலில் வழிபடுகிறாள். அதனால் வலப் புறத்தில் அமர்வதும் முறையே. பொதுவாக ஈசனின் இடப் புறத்தில் அம்பிகை இடம் பெறுவாள். தேவியே சிவபெருமானிடம் வேண்டி வலப்புறத்தில் அமர்கிறாள் என மாஹாத்யம் கூறும்.

மாஹாத்ம்யத்தில் பல தீர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. காருண்யாம்ருத தீர்த்தம் கோயிலின் வாயினுள்ளது. ஊரின் வடகிழக்கில் பாணபுரத்தில் பாண தீர்த்தம் உள்ளது. காவிரியின் கரையில் கல்யாண தீர்த்தம். கச்யப தீர்த்தம் கௌதம தீர்த்தம், சேஷ தீர்த்தம், ஐராவத தீர்த்தம் முதலியவை உள்ளன. பெரும்பாலான தீர்த்தங்கள் கிணறுகளாகி காலப் போக்கில் மறைந்து விட்டதாகக் கூறுகின்றனர். காடு அழிவது போல் நாடும் அடிக்கடி அழிவதும் மறுபடி தோன்றி முழு வளர்ச்சி பெறுவதும் நடைமுறையில் காணப் பெறுவதே. சென்ற இருதலை முறைகளிலிருந்து நம்முன்னோர்கள் காது வழி கூறிய

செய்திகளைக் கேட்டவர்கள் சிலர் இன்று வாழக் கூடும். பெரும் ஆர்வத்துடன் ஒரு சிலராவது இவற்றை ஆராய்ந்து வரை வடிவம் தந்து தேடினால் இறையருள் அதற்கு உதவினால் வரும் ஸந்ததியினர் க்ஷேத்ரத்தின் முழு வடிவத்தையும் காணும் வாய்ப்பு பெறலாம். ஈசன் அதற்கு வழி காட்டி, நம்மை அவனருளால் அவன் தாள் பற்றச் செய்ய திருவடித் தாமரையைகளைக் காட்டி அருள வேண்டுவோம்.

இந்த க்ஷேத்ரத்தின் பெருமை பற்றி ஸ்கந்த புராணமும் லிங்க புராணமும் ப்ரஹ்மவை(கை)வர்த்த புராணமும் விளக்கமாகக் கூறுகின்றன. விஷ்ணுபுரம் ஸா. ராமசந்த்ர சாஸ்த்ரி என்பவர் தொகுத்து 1916ல் க்ரந்த லிபியில் வெளியிட்ட நூல் இன்று நாகர லிபியில் வெளியிடப் பெறுகிறது. ஒவ்வொரு அத்யாயத்தின் இறுதியில் அவ்வத்யாயத்தில் கூறப்பட்டதை எளிய நடையில் தமிழில் சுருக்கித் தரப்படுகிறது. நமது முன்னோர் பெரும் பொக்கிஷமெனக் கருதி ஓலை முதலியவற்றில் எழுதச் செய்து சுவடியாகக் காப்பாற்றி வந்ததை நம்முன்னிருந்த பெரியோர்கள் மிகக் குறைந்த வாய்ப்பும் வசதியும் கொண்ட நாட்களில் மிகவும் முயன்று அச்சேற்றித் தந்துள்ளனர். கோயில் என்பது ஒரு கண் காட்சிப் பொருளல்ல. தெய்வத்தை நேரில் காணமுயன்று வெற்றி பெற்ற வரலாற்றின் உருவகம் அது. இன்றும் இது அவர்கள் சென்ற பாதையில் சென்று அவர்கள் பெற்றப் பேருணர்வைப் பெறலாம் என்பதை உள்ளத்தில் பதித்துக் கொள்ள உதவுகிற அருமையான ஸாதனமும் ஸாத்யமுமாகும். இந்த வரலாற்றின் அடிப்படையில் பெருநலனைப் பெற்ற முன்னோர்கள் தம் தம் அனுபவத்தை வடித்துத் தந்த இடமே கோயில். அதன் வரலாற்றுப் பெருமையை உணர்ந்த நால்வர் திருமூலர், சேக்கிழார், அருணகிரிநாதர், பட்டினத்தார் முதல் நேற்றைய திரு.உ.வே. சாமிநாத அய்யர் அவர்கள் வரை க்ஷேத்ரத்தையும் அதில் உறைகின்ற ஈசனைப் பற்றியும் பாடிப் பரவி வழிபட்டு மெய் நிலை உணர்ந்து அவரிடம் கலந்துள்ளனர் என்பதும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளது.

காசியில் மரணத்தால் முக்தி, சிதம்பரத்தில் தர்சனத்தால் முக்தி, திருவண்ணமலையில் சிந்திப்பதால் முக்தி, திருவாரூரில் பிறப்பதால் முக்தி, திருவிடை மருதூரில் இவை ஒவ்வொன்றாலும் முக்தி என்பது பெரியோரின் அனுபவ பூர்வமான வாக்கு. தேவியின் இதயத்தின் நடுவிலும், மருத வனத்தின் நடுவிலும் யோகியின் த்வாதசாந்தம் என்ற புருவ நடுப் பகுதி சுட்டிக் காட்டுகிற ஸஹஸ்ராரத்திலும் இரு மருத வனங்களின் நடுவிலும், தமிழ் நாட்டின் நடுவிலும் உலகமெனும் அண்டத்தின் நடுவிலும் மூலப் பொருளாக விளங்கிய ஜோதியே மத்த்யார்ஜுனேசர்என்ற இந்த மஹாலிங்க மூர்த்தி என்று ஸித்த புருஷர்கள் கண்ட தத்துவம். அதனை இந்த மாஹாத்ம்யம் விளக்குகிறது.

நமக்குப் பின்வருகிற ஸந்ததியினர் நம்மை விடச் சிறப்பாக ஆராய்ந்து சிவ நிலை உணர்வைப் பெற இந்நூலறிவு பெரிதும் பயன்படக் கூடும். நம் முன்னோர் பாதுகாத்துத் தந்த நிதியை நமது ஸந்ததியினரும் பெற்றுப் பயன்படுத வாய்ப்பு உண்டு. இதற்கு உதவிய புண்ணியம் இந்தத் தொகுப்பாளனுக்கும் வெளியிட்டவருக்கும் உண்டு. இந்தத் தொகுப்பாளனை இவ்வழியில் ஆழ்ந்து ஈடுபடும்படி அருளாணை புரிந்த காஞ்சீ காமகோடி பீடத்ததிபர்களின் ஸ்ரீ சரணங்களில் நன்றி கலந்த வணக்கம் ஸமர்பிக்கப்படுகிறது. இதற்கு வாய்ப்பளித்த வெளியீட்டாளருக்கு நன்றி உரித்தாகும்.

**S.V. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி**

22, வீரேச்வரம் அப்ரோச் ரோட்
ஸ்ரீரங்கம், திருச்சி-600 006
தொலைபேசி : 2432546.
21.3.2006

# श्री मध्यार्जुनक्षेत्रमाहात्म्यम्

## विषयानुक्रमणिका

अध्यायः पूर्वभागः (स्कन्दपुराणतः) पृष्ठानि


1. शिवक्षेत्रप्रशंसा ........ 1
2. मध्यार्जुनमाहात्म्यम् ........ 11
3. क्षेत्रचरितम् ........ 19
4. ब्रह्मतत्वविचारः ........ 25
5. मायास्वरूपम् ........ 37
6. विद्यास्वरूपम् ........ 43
7. ईशलीलाः ........ 48
8. ईशस्यैव कर्मफलदातृत्वम् ........ 56
9. ईशदर्शनोपायः ईशशक्तयः -सरस्वती ........ 63
10. लक्ष्मीः ........ 70
11. भवानी ........ 74
12. ऋषीणां तपश्चरणं ........ 81
13. परदेवताया आविर्भावः ........ 91
14. ऋषिकन्या प्रार्थना-देव्या भगवतो ध्यानं ........ 99
15. ज्योतिर्लिङ्गाविर्भावः ........ 109
16. उमाशिवयोः योगावस्था ........ 115
17. ईशेन ज्योतिर्लिङ्गपूजा ........ 122

18-19. ऋषिभ्यस्तत्वोपदेशः ........ 129

20. विश्वकर्मणा आलयनिर्माणम् ........ 154

21. रोमश-स्वर्णकाकसंवादः ........................ 161
22. क्षपणकमतनिरासः ........................ 170
23. आज्ञागणेशकृता शिवपूजा ........................ 179
24. रोमशस्य तपः ........................ 185
25. वीरचोलेन आलय निर्माणं-पुष्योत्सवः ........................ 195
26. मार्कण्डेय चरितम् ........................ 204
27-28 सुकीर्त्यगस्त्यसंवादः, पितृयज्ञः, सन्तानवृद्धिः ........................ 211
29. काश्यपेन कृष्णदर्शनम् ........................ 229
30. क्षेत्रतत्वम् ........................ 236

## उत्तरभागः

31. तीर्थमाहात्म्यम् ........................ 244
32-35. कारुण्यामृततीर्थम् ........................ 251
36. बाणतीर्थम् ........................ 281
37. पराशरसोमतीर्थे ........................ 288
38. रुद्रतीर्थम् ........................ 295
39. चन्द्र-पद्म-पाण्डव तीर्थानि ........................ 304
40-41. दिक्पालतीर्थानि मार्कण्डेयकृतमृत्युञ्जयस्तोत्रम् ........................ 311
42. कश्यप-गौतम-शेष-स्कन्द-गणेश-चण्डिकेशतीर्थानि ........................ 330
43. नन्दिकेश-द्रोण-नरसिंह-कृष्णतीर्थानि ........................ 340
44. शुक्रस्य दृष्टिहानिः पुनः प्राप्तिश्च ........................ 346
45. पातालगङ्गा-राम-अष्टवसुतीर्थानि ........................ 357
46. सूर्य-मरुत्-देव-जटा-सप्तर्षितीर्थानि ........................ 363

47-48. कनककारुण्यामृत-कल्याणतीर्थम् ........................ 368

49. कनकतीर्थम् ........................................ 383

50. कल्याणतीर्थम् ...................................... 390

51. तीर्थमाहात्म्यम् ...................................... 397

52. मध्यार्जुनक्षेत्रमाहात्म्यम् .............................. 407

## ब्रह्मवैवर्तपुराणतः—

53. मध्यार्जुनक्षेत्रमाहात्म्यम् .............................. 416

54-55. देवव्रत चरितम् .................................... 422

56. नन्दकचरितम् ........................................ 433

57. पुण्यस्नानविधिः ...................................... 440

58. अश्वमेधप्रदक्षिणविधिः ................................ 447

## लिङ्गपुराणतः -

59. युवनाश्वमान्धातृचरितम् .............................. 455

60. महाश्वमेधिकप्रदक्षिणविधिः ........................... 461

61-62. हंसध्वजोपाख्यानम् ................................ 471

# மத்த்யார்ஜுந க்ஷேத்ர மாஹாத்ம்யம்

## பூர்வபாகம் - ஸ்காந்த புராணத்திலிருந்து

## பொருளடக்கம்


| அத்யாயம் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1. | சிவக்ஷேத்ரங்களின் பெருமை | 1 |
| 2. | திருவிடை மருதூரின் பெருமை | 11 |
| 3. | க்ஷேத்திர வரலாறு | 19 |
| 4. | ப்ரஹ்மம் பற்றிய ஆராய்ச்சி | 25 |
| 5. | மாயையின் நிலே | 37 |
| 6. | வித்யையின் நிலே | 43 |
| 7. | ஈசனின் லீலேகள் | 48 |
| 8. | ஈசனே வினேப் பயன் தருபவர் | 56 |
| 9. | ஈசனேக் காண உபாயம், ஈச சக்தியின் மூன்று வடிவங்கள் ஸரஸ்வதீ | 63 |
| 10. | லக்ஷ்மீ | 70 |
| 11. | பவானீ | 74 |
| 12. | ருஷிகள் வழிபடுதல் | 81 |
| 13. | பரதேவதை தோன்றுதல் | 91 |
| 14. | ருஷி கன்னிகைகளின் கோரிக்கை தேவி ஈசனேத் த்யானித்தல் | 99 |
| 15. | ஜ்யோதிலிங்கம் தோன்றுதல் | 109 |
| 16. | உமை சிவன் இவர்களின் யோக நிலே | 115 |
| 17. | ஈசன் ஜ்யோதிலிங்கத்தை வழிபடுதல் | 122 |
| 18-19 | முனிவர்களுக்குத் தத்துவோபதேசம் | 129 |
| 20. | விச்வகர்மா ஆலயம் அமைத்தது | 154 |
| 21. | ரோமசர்-தங்கக் காக்கை ஸம்வாதம் | 161 |
| 22. | சமணரை வெல்லுதல் | 170 |

பக்கம்

23. ஆஜ்ஞாகணேசரின் சிவபூஜை ........................ 179

24. ரோமசரின் தவம் ........................................ 185

25. வீரசோழன் ஆலயம் அமைத்தது புஷ்யோத்ஸவம்..195

26. மார்கண்டேயர் வரலாறு ................................ 204

27-28. ஸுகீர்த்தி அகஸ்த்யர் ஸம்வாதம்
பித்ரு பூஜை-பிள்ளைப்பேறு ............................ 211

29. காச்யபர் க்ருஷ்ணரை தரிசித்தல் ..................... 229

30. க்ஷேத்திரத்தின் உண்மை நிலை ........................ 236

## உத்தரபாகம்

31. தீர்த்தங்களின் பெருமை ................................ 244

32-35. காருண்யாம்ருத தீர்த்தம் ............................... 251

36. பாண தீர்த்தம் ............................................ 281

37. பராசர ஸோம தீர்த்தங்கள் ............................. 288

38. ருத்ர தீர்த்தம் ............................................ 295

39. சந்த்ர-பத்ம பாண்டவ தீர்த்தங்கள் ..................... 304

40-41. திக்பால தீர்த்தங்கள்
மார்க்கண்டேயரின் ம்ருத்யுஞ்ஜய ஸ்தோத்ரம் ...... 311

42. கச்யப-கௌதம-சேஷ-ஸ்கந்த-கணேச
சண்டிகேச தீர்த்தங்கள். .................................. 330

43. நந்திகேச-த்ரோண-நரஸிம்ஹ
க்ருஷ்ண தீர்த்தங்கள். .................................... 340

44. சுக்ரர் கண் பார்வை பெறுதல் .......................... 346

45. பாதாள கங்கை, ராம-அஷ்டவஸு தீர்த்தங்கள் .... 357

46. ஸூர்ய-மருத்-தேவ-ஜடா-ஸப்தர்ஷி தீர்த்தங்கள் . 363

47-48 கநக-காருண்யாம்ருத-கல்யாண தீர்த்தங்கள். ....... 368

பக்கம்

49. கநக தீர்த்தம் ........................................ 383
50. கல்யாண தீர்த்தம் ........................................ 390
51. தீர்த்தங்களின் பெருமை ........................................ 397
52. மத்த்யார்ஜுன க்ஷேத்ரப் பெருமை ........................................ 407

## பிரும்ம வைவர்த்த புராணத்திலிருந்து

53. மத்த்யார்ஜுன க்ஷேத்ர மாஹாத்ம்யம் ........................................ 416
54-55 தேவவ்ரதன் வரலாறு ........................................ 422
56. நந்தகன் வரலாறு ........................................ 433
57. புஷ்ய ஸ்நான முறை ........................................ 440
58. அச்வமேதப் ப்ரதக்ஷிணமுறை ........................................ 447

## லிங்க புராணத்திலிருந்து

59. யுவநாச்வர் - மாந்தாதா வரலாறு ........................................ 455
60.61 மஹாச்வமேத ப்ரதக்ஷிண முறை ........................................ 461
62. ஹம்ஸத்வஜன் வரலாறு ........................................ 471

ஸ்ரீ மத்த்யார்ஜுன க்ஷேத்ர மாஹாத்ம்யம்

ஸ்காந்த - ப்ரஹ்ம வைவர்த்த - லிங்கபுராணங்களிலிருந்து

தொகுத்தது

ஸ்ரீ ஸ்ரீதர அய்யாவாளின்

ஸ்துதிமணிமாலா

## ஸமர்ப்பணம்

ஸ்ரீமத்த்யார்ஜுன மஹாக்ஷேத்ரம் எனும்

திருவிடை மருதூரில் கோயில் கொண்டுள்ள

அருள்மிகு ஸ்ரீ ப்ருஹத் ஸுந்தர குசாம்பா ஸமேத

ஸ்ரீ ஜ்யோதிர் மஹாலிங்கேச்வர ஸ்வாமியின்

பாதத் தாமரைகளில்

இந்த க்ரந்தம்

ஸமர்ப்பிக்கப்படுகிறது.

॥ शुभमस्तु ॥

बृहत्कुचाम्बासहित मध्यार्जुनेश्वराय नमः

# मध्यार्जुनक्षेत्रमाहात्म्यम्

## प्रथमोऽध्यायः ।

### शिवक्षेत्रप्रशंसा

शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् (वन्दे) सर्वविघ्नोपशान्तये ॥

अद्वैतदन्तमहिराजकृतोपवीतं
आखण्डलादिविबुधैरभिवन्दिताङ्घ्रिम् ।
आपन्नकल्पतरुमादृतहस्तिरूपं
आनन्दवर्धनमहं शिवयोर्नमामि ॥

श्रीकण्ठं वरदं वन्दे श्रीधराद्यमरेडितम् ।
धारयन्तं वियन्नद्या समं मूर्ध्नि सुधाकरम् ॥ १

सुप्रसन्नमुखाम्भोजं सुवर्णद्युतिविग्रहम् ।
गौरीसखमनाद्यन्तं भजेऽहं जगदीश्वरम् ॥ २

ऋषयः—

श्रुतानि पुण्यस्थानानि तीर्थानि विविधानि च ।
पुण्याश्च सरितश्शैला वनानि विविधानि च ॥ ३

नगराणि सुपुण्यानि देवतायतनानि च।
पुण्याश्रमाणि चित्राणि बदरीप्रभृतीनि च॥ ४

श्रुतानि निखिलेनाद्य भवन्मुखसरोरुहात्।
रागद्वेषाभितप्तानि मनांसि मुनिसत्तम॥ ५

आह्लादितानि सुतरां वाङ्मयामृतधारया।
निर्मथ्य निखिलेनाथ वेदवेदाङ्गसागरम्॥ ६

सारभूतं हि यत्तत्र स्वधियाऽऽलोच्य कृत्स्नशः।
उपदिष्टं त्वयेदानीमस्माकं कृपया सकृत्॥ ७

को नु मर्त्यो विरम्येत भवतो वाङ्मयं मधु।
जुषन् रसज्ञः कृतधीर्जन्मदुःखामयापहम्॥ ८

भूयोऽपि श्रोतुमिच्छामो मनःपूर्तिकरं सदा।
भुक्तिमुक्तिप्रदं स्थानं नृणां श्रेयोवहं महत्॥ ९

यत्रावस्थानमात्रेण विन्दतेऽभीष्टमंजसा।
चेतः प्रसन्नतामेति रागादिकलुषीकृतम्॥ १०

तादृशं नः शिवस्थानं पृच्छतां ब्रूहि सत्तम।
सूतः—
धन्योऽस्म्यनुगृहीतोऽस्मि वेदवेदाङ्गपारगैः॥ ११

यन्नियुक्तोऽस्मि वक्तृत्वे तीर्थभूतैर्महात्मभिः।
प्रणम्य मनसा वाचा कायेन च महेश्वरम्॥ १२

वामभागस्थया नित्यं प्रज्ञादेव्या स्वकान्तया।
सेव्यमानं स्वभक्तानां वरदानोद्यतं सदा॥ १३

ध्यायन् धिया प्रवक्ष्यामि शङ्करं धीप्रचोदकम्।
प्रणम्य तत्सुतौ मान्यौ गजाननषडाननौ॥ १४

देवीं सरस्वतीं ध्यायन् द्विजेन्द्रानपि सुव्रतान्।
द्वैपायनं गुरुं श्रेष्ठं तच्छिष्यानपि सत्तमान्॥ १५

नमस्कृत्वा प्रवक्ष्यामि यथामति यथाश्रुतम्।
स्कन्देनैतत् पुरा प्रोक्तं मुनीनां पुण्यकर्मणाम्॥ १६

तदिदानीं प्रवक्ष्यामि स्थानमाहात्म्यमुत्तमम्।
आसीत्पुरा मुनीन्द्राणां समवायो महात्मनाम्॥ १७

श्रीसह्याद्रितटे पुण्ये मुनिदेवनिषेविते।
वसिष्ठो वामदेवोऽत्रिर्विश्वामित्रोऽथ गौतमः॥ १८

भार्गवश्च्यवनोऽगस्त्यो मुद्गलो हरितः क्रतुः।
सुमंतुर्गालवः कुत्सो मानवेयो महातपाः॥ १९

तेषां शिष्यप्रशिष्याश्च बहवो ब्रह्मवित्तमाः।
यज्ञोत्सवनिमित्तेन समीयुस्सङ्घशः क्वचित्॥ २०

पुण्यस्थानान्यनेकानि प्रशशंसुः परस्परम्।
स्वस्वप्रज्ञानुरोधेन यज्ञस्थानमकल्पयन्॥ २१

एतस्मिन्नन्तरे तत्र तस्मात्सह्याद्रिकन्दरात्।
मुनीन्द्राणां तपोभाग्यात् प्रादुरासीत् षडाननः॥ २२
तमागतं समालोक्य मुनयः शङ्करात्मजम्।
सकौतुकं समुत्थाय प्रणेमुर्भक्तिसंयुताः॥ २३

तपःप्रभावोपनते हेमचित्रविचित्रिते।
सिंहासने तमावेश्य पूजयामासुरुत्सकाः॥ २४

वर्धयित्वा सुविश्रान्तं कुशलोक्त्या सविस्तरम्।
प्रसादसुमुखं दृष्ट्वा तं पप्रच्छुर्महर्षयः॥ २५

मुनयः—

भवान् पूर्णप्रबोधात्मा जगत्पित्रोरुमेशयोः ।
सर्वं हि ते जगज्जालं विदितं सकृदीक्षणात् ।। २६

भगवन् ब्रूहि सुस्थानं यज्ञस्यायतनं महत् ।
यत्र वै यजतां पुंसां विघ्नलेशोऽपि नापतेत् ।। २७

सत्यपि स्खलने यत्र यजतां वा प्रमादजे ।
रक्षांसि न विलुम्पेयुर्यज्ञं यत्स्थानवैभवात् ।। २८

तादृशं ब्रूहि नः स्थानं यज्ञदीक्षाप्रवृत्तये ।
इति पृष्टा वसिष्ठाद्यैर्मुनीन्द्रैस्स शिवात्मजः ।। २९

पुण्यस्थानानि सर्वाणि बुद्ध्याऽऽलोच्य सहेतुकम् ।
सुनिश्चितमथोवाच स्थानमेकमनुत्तमम् ।। ३०

श्रीस्कन्दः—

शिवमुद्दिश्य यत्पृष्टं प्रज्ञामूर्त्या ममाम्बया ।
तत्प्रश्नोत्तरविस्तारे यदुक्तं गुरुणाऽपि मे ।। ३१ ।।

तत्संवादप्रसङ्गे तु यन्मयाऽवगतं पुरा ।
सम्प्रत्यनुस्मृतं तन्मे प्रश्नेन भवतामिह ।। ३२

भवानीं परिपृच्छन्तीं पुण्यापुण्यपरीप्सया ।
तामब्रवीत्स भगवान् पुण्यस्थानानि सर्वशः ।। ३३

तदा स्थानेषु पुण्येषु कीर्त्यमानेषु शम्भुना ।
श्रुत्वा तदम्बिका देवी श्रीगुरोर्वदनाम्बुजात् ।। ३४

तेष्वेकमधिकं स्थानं बह्वमन्यत पार्वती ।
समीपवर्तिना पित्रोस्तदा विहरता मया ।। ३५

कथामृतरसज्ञेन श्री गुरोर्वदनाच्छ्रुतम् ।
तदिदानीं प्रवक्ष्यामि भवतां मुनिसत्तमाः ।। ३६

स्थानानि सन्त्यनेकानि विस्तृतानि महीतले ।
अधुनाऽनुक्रमिष्यामि पुण्यस्थानानि कानिचित् ।। ३७

सह्याद्रिजातटस्थानि सन्ति पुण्यान्यनेकशः ।
तेष्वेकमधिकं शस्तं पुण्यस्थानं मुनीश्वराः ।। ३८

तिष्ठत्यस्मिन्विशेषेण भगवान् स जगत्पतिः ।
इति स्थानविदः प्राज्ञाः सदर्थज्ञा मुनीश्वराः ।। ३९

तथाविधान्युमेशस्य स्थानान्याहुरनेकशः ।
तैजसानि च भौमानि सन्ति स्थानान्युपासताम् ।। ४०

तत्र मुख्यानि शृण्वन्तु स्थानानि कतिचिद् द्विजाः ।
मूलस्थानं हि जगतां शाश्वतं गिरिजापतेः ।। ४१

तदाधेये जगज्जाले स्थानं तस्योपचारतः ।
तथाऽपि मुनिदेवानामुपास्त्यर्थमुपासताम् ।। ४२

स्थाने क्वचिदिवाभाति सर्वात्मा तपसाऽर्चितः ।
सर्वाधारोऽपि भगवानात्माधेये क्वचिद्विभुः ।। ४३

यत्रोपलभ्यते व्यक्तं तत् स्थानं तस्य कल्प्यते ।
तत्रास्य प्रथमं स्थानं स्वयम्भूर्निगमः परः ।। ४४

तदर्थदर्शिनां पुंसां तत्र तिष्ठन् फलत्यसौ ।
ब्रह्मविष्ण्वादयो देवा निगमप्रतिपादिताः ।। ४५

निगमेषूपलभ्यन्ते भजतां फलहेतवः ।
भगवान्निगमाधीशस्तदर्थस्तत्प्रकाशकः ।। ४६

येनाभिव्यज्यते यस्मात्तत् स्थानं निगमो महान्।
तथा च भगवान् भानुः स्थानमीशस्य गद्यते ।। ४७

तद्बिम्बस्थः सदा भाति भजतां कामधुक्प्रभुः ।
तथा स्थानं महेशस्य भगवान् हव्यवाहनः ।। ४८

तत्रार्च्चितो ददातीशः स्वार्चकेभ्योऽर्थसम्पदः ।
तथान्यदुत्तमं स्थानं देवस्य गुरुविग्रहः ।। ४९

तेन सन्तारिता ज्ञानाद्यत्साक्षात् क्रियते शिवः ।
योगिहृत्पङ्कजं स्थानं महेशस्य मतं महत् ।। ५०

तथा स्थानं महेशस्य वेदविद्ब्राह्मणोत्तमाः ।
तद्वाक्यनिलये तिष्ठन्ननुगृह्णात्युपासकान् ।। ५१

प्रणवादिस्तथा मन्त्रः स्थानमीशस्य कीर्त्यते ।
तत्र तिष्ठन् फलत्येष साधकानां यथेप्सितम् ।। ५२

स्मृतयश्च पुराणानि धर्मशास्त्रागमादिकाः ।
ईशोपलब्धिस्थानानि तत्र तिष्ठन् फलत्यसौ ।। ५३

एवमादिषु पुण्येषु यत्र यस्य मनोरुचिः ।
तत्र विष्णुं शिवं वाऽपि तथान्यानमरानपि ।। ५४

यथाविधि समाराध्य स्वेप्सितं फलमश्नुते ।
अथ भौमानि वक्ष्यामि स्थानानि मुनिसत्तमाः ।। ५५

तपःफलैः प्रसिद्धानि मुनीनां दीप्ततेजसाम् ।
कैलासशिखरं रम्यं नित्यस्थानमुमापतेः ।। ५६

तत्र तिष्ठन् जगत्स्वामी मुनिदेवैरुपास्यते ।
केदाराख्यं महास्थानं तत्र तिष्ठत्यसौ सदा ।। ५७

महाकालमिति ख्यातं शिवस्थानं महत्तरम् ।
काशी विश्वेश्वरस्थानं शिवप्रीतिकरं सदा ।। ५८

यस्य दर्शनमात्रेण मनुष्यो मुक्तिभाग्भवेत् ।
गोकर्णं च महास्थानं सुरासुरनमस्कृतम् ।। ५९

श्रीशैलं च महास्थानं शिवस्थानोत्तमोत्तमम् ।
श्रीमद्दक्षिणकैलासं स्थानं सर्वशुभावहम् ।। ६०

काञ्चीपुरं च विख्यातं पुण्यस्थानेषु चोत्तमम् ।
शोणाचलं च विख्यातं श्रीमद्वृद्धाचलं तथा ।। ६१

श्रीमद्व्याघ्रपुरं नाम स्थानमस्ति महत्तमम् ।
यत्रात्मानुभवानन्दनृत्तमूर्तिः प्रकाशते ।। ६२

श्रीमद्ब्रह्मपुरं नाम स्थानमस्ति महत्तरम् ।
वल्मीकाख्यं महास्थानं यत्रास्ते कमलाऽनिशम् ।। ६३

श्रीमद्रामेश्वरं नाम स्थानमस्ति महत्तरम् ।
श्रीमता रामचन्द्रेण दृष्टमभ्यर्चितं पुरा ।। ६४

ब्रह्महत्यादयो दोषा नृणां तदवलोकनात् ।
क्षणाददृश्यतां यान्ति तमस्सूर्योदये यथा ।। ६५

सह्यजातीरसंस्थानि सन्ति स्थानान्यनेकशः ।
तत्राप्युदाहरिष्यामि प्रख्यातानि च कानिचित् ।। ६६

त्रिशिराख्यं महास्थानं गजारण्यं महत्तरम् ।
श्रीमत्पञ्चनदं नाम स्थानमस्ति पुरातनम् ।। ६७

तथा श्रीदक्षिणावर्तं स्थानमस्ति महत्तरम् ।
साक्षाद्गणपतिर्यत्र श्वेतो गणपतिर्महान् ।। ६८

स्वामीश्वरमिति ख्यातं पुण्यस्थानमनुत्तमम् ।
गुरुं चाकल्पयद्यो मां स्वातन्त्र्यादात्मजं शिवः ।। ६९

स्थानं श्रीकुम्भघोणाख्यं लोकपूज्यं यशस्करम् ।
मुनिदेवगणैः पूज्यं देवलोकसमं महत् ।। ७०

श्रीमन्मध्यार्जुनं नाम त्रिषु लोकेषु पूजितम् ।
यस्य स्मरणमात्रेण मुच्यते सर्वकिल्बिषैः ।। ७१

श्रीमदग्नीश्वरं नाम स्थानमस्ति गुणोत्तमम् ।
श्रीमद्गोवटसंज्ञं च शिवस्थानमनुत्तमम् ।। ७२

श्री कोटिहाख्यं विमलं शिवस्थानोत्तमोत्तमम् ।
गौरीमायूरसंज्ञं च स्थानमस्ति शुभास्पदम् ।। ७३

तेजिनीवनसंज्ञं च स्थानमस्ति महत्तरम् ।
श्रीमच्छ्वेतवनं नाम स्थानमस्ति महत्तरम् ।। ७४

छायावनमिति ख्यातमस्ति स्थानं द्विजोत्तमाः ।
एवंविधानि चान्यानि सन्ति स्थानान्यनेकशः ।। ७५

एतेषु पुण्यस्थानेषु सदा सन्निहितः शिवः ।
माहात्म्यमपि चैतेषां सहेतु च सविस्तरम् ।। ७६

वर्णितं च महाप्राज्ञैः श्रद्धावद्भिः श्रुतं तथा ।
एतेषु पुण्यस्थानेषु मध्यार्जुनमनुत्तमम् ।। ७७

यत्र प्रवेशमात्रेण महापापैः प्रमुच्यते ।
अयत्नात् प्राप्यतेऽभीष्टं पुंसां यन्मनसेप्सितम् ।। ७८ ।।

*इति श्रीस्कान्दे मध्यार्जुनमाहात्म्ये प्रथमोऽध्यायः*



ஸ்ரீ ஜ்யோதிர் மஹாலிங்கம்

௳

# மத்தியார்ஜுந க்ஷேத்ரமாஹாத்ம்யம்

## அத்தியாயம்–1

### சிவக்ஷேத்திரங்களின் பெருமை

வெண்ணிற ஆடையுடுத்தியவர், எங்கும் நிறைந்தவர். நான்கு கைகள் உள்ளவர், அருள்மிக்க யானைமுகமுள்ளவர். அவரை (விநாயகரை) எல்லா இடையூறுகளும் நீங்க வணங்குகிறேன். ஒரு தந்தமுள்ளவரும் பாம்பரசனை உபவீதமாகக் கொண்டவரும், இந்த்ரன் முதலிய தேவர்களால் வணங்கப் பெற்றவரும் சரணடைந்தவருக்குக் கற்பகமரமானவரும், யானை வடிவேற்றவரும், சிவைக்கும் சிவனுக்கும் ஆனந்தத்தைப் பெருக்குபவருமான அவரை வணங்குகிறேன்.

அருள்மிகுந்த தாமரை போன்ற முகமுள்ளவரும், தங்க ஒளி கொண்ட உடலுடையவரும், கௌரியின் அன்பரும், ஆதியும் அந்தமுமற்றவருமான அந்த உலகின் ஈசனை வழிபடுகிறேன். (2)

ருஷிகள் ஸூதரிடம் கேட்டனர் – ''புனிதமிக்க க்ஷேத்திரங்கள், நதிகள், மலைகள், நகரங்கள், ஆச்ரமங்கள் முதலியவை பற்றி உம்மிடம் கேட்டறிந்தோம். அவற்றில் சிறந்தவை பற்றி ஸாரமான உபதேசம் பெற்று மனம் நிறையப் பெற்றோம். ஆசை முதலியவற்றால் மலினமுற்ற சித்தத்தைத் தெளியச் செய்கிற சிவக்ஷேத்திரங்களைப் பற்றி மேலும் கேட்க விரும்புகிறோம்''. (10)

ஸூதர் கூறுகிறார் :– சித்சக்தியான தேவியுடனுள்ள மஹேசனை மனத்தாலும், வாயாலும், உடலாலும் வணங்குகிறேன். அவர்களது குமாரர்களான ஆனைமுகத்தோனையும், ஆறுமுகனையும் ஸரஸ்வதியையும் பெரியோர்களையும் குருவான வ்யாஸரையும் வணங்கி, முன்னர் ஸ்கந்தரால் முனிவர்களுக்கு விளக்கப் பெற்ற க்ஷேத்திரப் பெருமையை விளக்குகிறேன். (15)

முன் ஒரு ஸமயம் புனிதமான காவேரிக் கரையில் வாழ்ந்த வசிஷ்டர் முதலிய முனிவர்கள் வேள்வி புரியக் கூடினர். அவரவரறிந்த புனித க்ஷேத்திரங்களைப் பற்றி விளக்கினர். அங்கு தோன்றிய ஸ்கந்தரை ஆஸனத்தில் அமர்த்தி, இடையூறுகள் நேராதவாறு வேள்விகள் புரிவதற்கேற்ற புனித ஸ்தலங்களைப் பற்றிக் கேட்டனர். ஸ்கந்தரும், தன் அன்னை சிவபெருமானிடம் வினவப் பெருமானும் க்ஷேத்திரங்களைப் பற்றி விளக்கியதை அருகில் விளையாடிக் கொண்டிருந்த தான் கேட்டதைக் கூறத் தொடங்கினார். (37)

பூமியில் பல புனித ஸ்தலங்கள் உள்ளன. அவற்றில் காவேரியின் கரையில் அமைந்தவை பல. சோதி வடிவிலும், லிங்க வடிவிலுமமைந்தவை பல. எங்கும் நிறைந்துள்ள ஈசன் முனிவரும் தேவரும் வழிபடுவதற்கென சில ஸ்தலங்களில் நன்கு வெளிப்பட்டுள்ளார். வேதங்களில் ப்ரஹ்மா முதலிய தேவர்கள் மந்த்ர வடிவில் உள்ளனர். ஈசனும் வேதங்களின் உட்பொருளாகிப் பலவிடங்களில் வெளிப்படுகிறார். அவற்றில் சிறந்தது ஸௌர்ய மண்டலமாகும். ஸௌர்ய பிம்பத்தில் ஈசன் துலங்குகிறார். (48)

ஈசன் வெளிப்படுகிற மற்றோர் இடம் அக்கினியாகும். அவ்வாறே குருவும் வேதமோதுகிற அந்தணர்களும், ஓங்காரம் முதலிய மந்த்ரங்களும் ஸ்ம்ருதி, புராணம், தர்ம சாஸ்த்ரம் முதலிய அறவழி காட்டுகிற நூல்களும் சிவனின் வடிவங்களே. அவற்றில் ஈசனைக் கண்டு வழிபடலாம். பூமியில் பல ஸ்தலங்கள் உள்ளன. கைலாஸத்தின் கொடுமுடி, கேதாரம், விச்வேச்வரரின் உறைவிடமான காசி, கோகர்ணம், ஸ்ரீசைலம், காஞ்சீபுரம், திருவண்ணாமலை, விருத்தாசலம், ஈசன் நடனமாடுகிற புலியூர் (சிதம்பரம்), ப்ருஹ்மபுரம் (சீர்காழி), வல்மீகபுரம் (திருவாரூர்), ராமேச்வரம், காவிரியின் கரையில் அமைந்த திருசிரபுரம், (திருசிராப் பள்ளி), பஞ்சநதம் (திருவையாறு), தக்ஷிணாவர்தம் (திருவலஞ்சுழி), ஸ்வாமீசுவரம் (ஸ்வாமிமலை), அங்குதான் என்னை ஈசன் குருவாக்கினார். கும்பகோணம், மத்தியார்ஜுனம் (திருவிடைமருதூர்), அக்னீச்வரம் (கஞ்சனூர்), கோவடம் (திருவாவடுதுறை), திருக்கோடிக்கா, மாயூரம், தேஜினீ வனம்

(திருவீழிமிழலை), ச்வேதவநம் (திருவெண்காடு), சாயாவநம் (சாய்க்காடு), மற்றும் இத்தகைய புனித ஸ்தலங்கள் மக்களை உய்விக்க சிவபெருமான் வெளிப்பட்ட ஸ்தலங்கள். அவற்றில் மத்யார்ஜுநம் புகழ் பெற்றது. அங்கு சென்றவுடனேயே கோருகிற பலன்களை மனிதன் பெறுகிறான்.



## द्वितीयोऽध्यायः

## मध्यार्जुनमाहात्म्यम्

**मुनयः—**

श्रीमध्यार्जुनमाहात्म्यं सहेतु च सविस्तरम्।
सादरं पृच्छतामेतद् ब्रूहि नः कृपया मुदा ॥ १

**श्रीस्कन्दः—**

भूयोऽप्युदाहरिष्यामि श्रीमध्यार्जुनवैभवम्।
अचिरादश्नुते कामान् यश्च सङ्कीर्तयेत्पुमान् ॥ २

शम्भुना चोदितः पूर्वं क्षेत्रपालः प्रतापवान्।
चक्रे तदाज्ञया रक्षां प्राणिनामभयंकरीम् ॥ ३

आज्ञा रक्षां ततो ज्ञात्वा भूतवेतालपूतनाः।
रक्षांसि वा न हि घ्नन्ति ग्रहरोगादयस्तथा ॥ ४

भवद्भिरिज्यतां प्राज्ञैर्निर्बाधेऽस्मिन् यथारुचि।
मन्त्रलोपे क्रियालोपे सत्यप्यस्मिन् प्रमादजे ॥ ५

ईशाज्ञारक्षया किञ्चिन्न यज्ञः परिभूयते।
तपःफलं दानफलमिष्टापूर्तं च यत्फलम् ॥ ६

तत्सर्वं प्राप्यते स्थाने वासमात्रेण मानवैः।
विना तपो विना यज्ञं विनैव नियमान् यमान् ॥ ७

शोधकं सर्वपापानां प्रापकं सर्वसम्पदाम् ।
श्रद्धयाऽश्रद्धया डम्भाद्येन केनापि हेतुना ।। ८

वसन्मध्यार्जुने स्थाने मुच्यतेऽखिलपातकैः ।
योगार्थमथ कामार्थं धर्मार्थं वाऽथ मुक्तये ।। ९

वसन्मध्यार्जुने मर्त्यो न पश्यति यमक्षयम् ।
तत्र दत्तं हुतं जप्तमधीतमपि किञ्चन ।। १०

तदनन्तफलं ज्ञेयमिह लोके परत्र च ।
अस्मिन् मध्यार्जुने विप्रान् स्वशक्त्या यस्तु पोषयेत् ।। ११

देवाश्च पितरस्तेन तर्पिताश्च महर्षयः ।
आयुर्वृद्धिं यशोवृद्धिं श्रीवृद्धिं च तदाऽस्य तु ।। १२

प्राणाधीशो महादेवस्तस्य प्रीतो हि दास्यति ।
सुवर्णं राजतं वाऽपि द्विजेभ्योऽत्र ददाति यः ।। १३

पूर्णैश्वर्यं स लभते पुत्रान् भोगांश्च पुष्कलान् ।
रोगातुरं जडं वापि दुःखशोकभयाकुलम् ।। १४

अस्मिन्मध्यार्जुने स्थाने पोषयेदीशतुष्टये ।
दीनादीन् कृपणान् वृद्धान् स्वशक्त्या यस्तु पोषयेत् ।। १५

लोकपूज्यो भवेदत्र लोकाधीशो भवेत्परम् ।
अत्र मध्यार्जुने पुण्ये दद्याद्धर्मफलेच्छया ।। १६

शाकं मूलं फलं वाऽपि प्रसूनमनुलेपनम् ।
ताम्बूलं तैलमाज्यं वा भक्ष्यं भोज्यं पयो दधि ।। १७

सोऽश्नुते सकलान् कामानिह क्षेत्रमहत्तया ।
आसनं शयनं वस्त्रं पादुकां यः प्रयच्छति ।। १८

आधिपत्यं महत्प्राप्य सोऽश्नुते सम्पदं महीम्।
अस्मिन् मध्यार्जुने पुण्ये सर्वसम्पत्समुच्छ्रिते ।। १९

यः प्रतिष्ठापयेद्विप्रान् श्रोत्रियान्धर्मरक्षिणः ।
स साम्राज्यपदं प्राप्य लोकपालसमो भवेत् ।। २०

गृहं क्षेत्रं तथाऽऽरामं ब्राह्मणेभ्यो ददाति यः ।
आरोग्यं दीर्घमायुश्च पुत्रान् भोगान् स विन्दति ।। २१

दत्तं मध्यार्जुने स्वल्पमपि क्षेत्रमहत्तया।
तदनन्तफलं ज्ञेयमिह लोके परत्र च ।। २२

यद्यदात्महितं वस्तु स्वशक्त्या यः प्रयच्छति।
सोऽश्नुते सकलान् भोगानिह क्षेत्रमहत्तया ।। २३

अत्र मध्यार्जुने स्थाने दानाशक्तोऽप्यकिञ्चनः ।
अज्ञातज्ञातपापानां प्रायश्चित्तं यदीच्छति ।। २४

गायत्रीमयुतं जप्त्वा तिलैर्हुत्वा विशुध्यति।
यद्वा पापविशुद्ध्यर्थमस्मिन्मध्यार्जुने पुमान् ।। २५

उपोष्य दिनमेकान्ते पठेत्स्वाध्यायमात्मवान्।
ऋचो यजूंषि सामानि स्वशक्त्याऽऽवृत्य शुध्यति ।। २६

यद्वा पापविशुद्ध्यर्थं पञ्चवर्णात्मकं मनुम्।
उपोष्यायुतमावृत्य महापापैः प्रमुच्यते ।। २७

श्रीमन्मध्यार्जुनं प्राप्य संस्मरन्नात्मदुष्कृतम्।
गायत्रीं वेदजननीं श्रद्धयाऽऽवर्तयन्व्रती ।।२८

दिनं दिनत्रयं वाऽपि मुच्यतेऽखिलकिल्बिषैः ।
सौरमष्टाक्षरं मन्त्रमन्यं वाऽऽवर्तयन् व्रती ।। २९

तेजसा भानुसदृशः सद्भावेनानुभावितः ।
किं वर्णितेन बहुना श्रीमध्यार्जुनवैभवम् ।। ३०

संशोधनाय पापानामभीष्टानामवाप्तये ।। ३१

शम्भुना दर्शितं स्थानं श्रीमन्मध्यार्जुनं महत् ।
तस्मात् स्थानमिदं प्राप्य न दुःखी न च पातकी ।। ३२

न शोकोपहतो वापि न भवेद्व्याधिपीडितः ।
श्रीमन्मध्यार्जुनं स्थानं सम्प्राप्तानां शुभावहम् ।। ३३

ग्रहपीडा राजपीडा रोगपीडा च शाम्यति ।
दुर्वृत्तो वाऽतिमूर्खो वा दुर्भगो व्याधिपीडितः ।। ३४

योऽर्जुनेशं भजेदत्र सुखितस्स्याच्चिराद्धि सः ।
ब्राह्म्या शक्त्या परिभ्रष्टो ब्राह्मणोऽत्र समागतः ।। ३५

नियमेन वसन् स्थाने पुनर्भानुसमो भवेत् ।
शत्रुभिर्भ्रंशितो राजा निर्धनोऽत्र समागतः ।। ३६

शक्त्याऽऽराध्यार्जुनाधीशं स समृद्धधनो भवेत् ।
सिद्ध्यर्थमीप्सितार्थानां शुद्ध्यर्थं पापकर्मणाम् ।। ३७

शक्त्याऽऽराध्यार्जुनाधीशं स्वराष्ट्रमधिगच्छति ।
वाणिज्याद्भ्रंशितो वैश्यः स्वयमागत्य दुर्गतः ।। ३८

शक्त्याराध्यार्जुनाधीशं स समृद्धधनो भवेत् ।
मध्यार्जुनेशं मनसा भजन्शूद्रो विशुद्ध्यति ।। ३९

स्वमनोरथसिद्ध्यर्थं अर्जुनेशं प्रणम्य यः ।
शक्त्या च रत्ननिचयैः भूषयन्निष्टमाप्नुयात् ।। ४०

प्रीत्यर्थमर्जुनेशस्य शक्त्या यद्यद्ददाति यः ।
इहैव स बहून् भोगान् भुक्त्वा शैवं पदं व्रजेत् ।। ४१

श्रीमन्मध्यार्जुनेशस्य गन्धान्सुमनसोऽपि वा।
धूपं दीपं फलं वाऽन्यन्नैवेद्यं भक्ष्यसंयुतम्॥ ४२

दधिक्षीराज्यसंमिश्रं व्यञ्जनैरुपशोभितम्।
निवेदयति यो भक्त्या स भोगान् लभतेऽक्षयान्॥ ४३

य इच्छेद्दीर्घमायुर्वा यशः कीर्तिं श्रियं महीम्।
प्रीत्यर्थमर्जुनेशस्य दद्याद्दीपावलिं घृतैः॥ ४४

श्रियं च महतीं प्राप्य दीर्घमायुः स विन्दति।
निरस्यते तमःपुञ्जं यथा दीपावलिस्त्विषा॥ ४५

ईशप्रीत्या तथा दीपं दातुर्दुःखं निरस्यते।
ज्वरादिरोगशान्त्यर्थं गुग्गुल्वगरुचन्दनैः॥ ४६

धूपयन्नर्जुनेशस्य प्रीत्यर्थमगदो भवेत्।
यो यजेदिष्टकामार्थं नियमेनार्जुनेश्वरम्॥ ४७

द्विजानपि स तद्बुद्ध्या पूजयेदिष्टसिद्धये।
द्विजा महेश्वरस्यांशा महेश्वरमुखोद्भवाः॥ ४८

महेश्वरस्वरूपज्ञा महेशाज्ञाप्रवर्तकाः।
महेशाग्र्यपदाभिज्ञा महेशार्पितमानसाः॥ ४९

महेशयाजिनो नित्यं महेशस्यातिदुर्लभाः।
यां काञ्चिदाशिषं विप्राः स्वार्चकेषु प्रयुञ्जते॥ ५०

सफला सा भवेत्तेषां तस्मादत्र प्रपूजयेत्।
वाचि तिष्ठति विप्राणां लक्ष्मीर्लोकवरप्रदा॥ ५१

तया समर्प्यतेऽभीष्टं तस्मात्तानर्चयेत्सुधीः।
अधनोऽप्यर्जुनेशस्य प्रीतिमुद्दिश्य मानवः॥ ५२

पुष्पं फलं वा यत्किञ्चिद्दत्वा देवं समाश्रयेत् ।
अदानात्फलहीनः स्यादाश्रयन्नपि सर्वदा ॥ ५३

तस्मात्प्रदाय यत्किञ्चिद्भजन्निदमवाप्नुयात् ।
प्रदक्षिणनमस्कारैः स्तोत्रैर्वा तोषयेत्प्रभुम् ॥ ५४

अभीष्टं भजतस्सर्वं सन्तुष्टः सम्प्रयच्छति ।
यत्किञ्चिदर्थमत्रैव लोके यः कामयेन्नरः ॥ ५५

मासं वाऽप्यत्र षण्मासान्वत्सरं वा समाश्रयेत् ।
सेवमानं नरं शम्भुर्यदा सदयमीक्षते ॥ ५६

तं कालं कोऽभिजानाति जानातीशः सुहृत्पतिः ।
सुनिश्चितमतिर्देवं शरणं योऽधिगच्छति ॥ ५७

न तं मुञ्चति सद्भक्तमीशोऽभीष्टेन योजयेत् ।
अपरो यस्तु विश्वस्तस्स कामान् दोग्ध्यमायिनाम् ॥ ५८

नॄणां चपलचित्तानां विश्वासोऽतीव दुर्लभः ।
भक्तस्यान्तर्गतं वृत्तं चित्ताधीशस्स वेत्ति हि ॥ ५९

तस्मादमायया देवमाश्रयन्निष्टमाप्नुयात् ।
मध्यार्जुनेशमाश्रित्य मनसा योऽधिगच्छति ॥ ६०

तत्सर्वमचिरादेव तत्प्रसादादवाप्यते ।
स्थानं प्रवेष्टुमिच्छन्तः प्राक् प्रवेशाद्गतैनसः ॥ ६१

प्रविशन्ति पुनः स्थानं लभन्ते सर्वमीप्सितम् ।
किं वर्णितेन बहुना यजन्ते यत्र धार्मिकाः ॥ ६२

नाहमीशः परिच्छेत्तुं तेषां फलमियत्तया ।
पुंसां यज्ञाधिकारो वा श्रीमध्यार्जुनसंश्रयात् ॥ ६३

विना कृच्छ्रादिनियमैः स्वयं संपत्स्यतेऽञ्जसा ।
प्रशंसाकूर्णं ह्येतत्तस्य स्थानस्य सुव्रताः ॥ ६४

ज्योतिर्लिंगं महत्तत्र यस्माद्धाविष्कृतं पुरा ।
अमेयाद्यन्तममृतमवाङ्मनसगोचरम् ॥ ६५

तपसः फलमन्वाथा ज्योतिर्लिंगमनुत्तमम् ।
लीनं शिवस्वरूपं यद्भ्रमयेन्निजतेजसा ॥ ६६

लिङ्गं तदुच्यते तस्मादखण्डानन्दचिद्घनम् ।
लिङ्गस्य यस्य सान्निध्यात् सह्यजासलिलं शुभम् ॥ ६७

पुनाति स्नानमात्रेण मनुजान् बहुपातकान् ।
यस्य दर्शनमात्रेण सद्य एव विशुद्ध्यति ॥ ६८

यत्र पूतो नरो लिङ्गं दृष्ट्वा विज्ञानभास्वरम् ।
विमुच्यतेऽचिराद्दोषात् ब्रह्महाऽपि यदृच्छया ॥ ६९

तस्मिन् लीने महद्धाम्नि भासमानेऽक्षिगोचरे ।
पुण्यानि विलयं यान्त्येव तत्किञ्चिन्नमनन्नं वै ॥ ७०

साक्षात्कर्तुमशक्यं यद्दर्शनदानादिभिर्नरैः ।
तद्ब्रह्म लक्ष्यते यत्र ज्योतिर्लिङ्गात्मना द्विजाः ॥ ७१

तदादिलिङ्गं यत्रास्ते स्थानं तदपि तत्समम् ।
भोगिनामपि भोगश्रीर्धर्मश्रीर्धर्मिणामपि ॥ ७२

मुमुक्षूणां च मोक्षश्रीस्तत्रास्ते शिवधामनि ।
यत्स्थानमीश्वरादीशः परोक्षमहिमाऽपि सन् ॥ ७३

ज्योतिर्लिङ्गात्मना साक्षादाविरासीत्तपस्विनाम् ।
लिङ्गाज्ज्योतिर्मयात्तस्मात्तदा तेजश्शरीरवान् ।
प्रादुरासीत् प्रसन्नात्मा भगवानेकनायकः ॥ ७४

*इति श्रीस्कान्दे मध्यार्जुनमाहात्म्ये द्वितीयोऽध्यायः*



## அத்தியாயம்-2

### திருவிடைமருதூரின் பெருமை

இரு மருதூர்களுக்கு இடையே அமைந்த க்ஷேத்திரமிது. சிவபெருமானின் ஆணையை மேற்கொண்டு க்ஷேத்திர பால பைரவர் இதனைக் காக்கிறார். அதனால் இங்கு பூதம், வேதாளம், க்ரஹங்கள், நோய்கள் முதலியவற்றால் பீடைகள் உண்டாகாது. இங்கு தொடங்கிய வேள்விகள் முழுமையடைந்து பலன்தரும். இங்கு செய்யப்பட்ட தவமோ, தானமோ பெரும் பலன் தரும். பாபம் நீங்கும். ஜபம், வேதம் ஓதுதல், பெரியோர்களைக் காப்பாற்றுதல், நல்லோருக்குத் தான மளித்தல், முதலியவை நற்பயனை விளைவிக்கும். நோயுற்றவன் இந்த ஸ்தலத்தில் வசிக்க நோயகலும். சிறிதளவு நற்பணியும் எல்லையற்ற நன்மையைத் தரும். பெரும் பாபம் நீங்கப் பத்தாயிரம் தடவை காயத்திரியை ஜபித்து எள்ளை ஹோமம் செய்தல் நலம். காயத்ரீயையோ ஸூர்யனது அஷ்டாக்ஷர மந்த்ரத்தையோ ச்ரத்தையுடன் மூன்று நாட்கள் தொடர்ந்து ஜபித்துவர நோயும் ஏழ்மையும் பாபமும் நீங்கிச் சிறப்புடன் வாழ்வான். (37)

வாணிபம் புரிந்து நஷ்டமடைந்து வாழ்க்கை கெட்டவனும் மருதீசனை வழிபட்டுச் சிறப்புறுவான். மருதீசரை பதினாறு உபசாரங்களைச் செய்து வழிபடுபவன் வாழ்வின் நிறைவும், நீண்ட ஆயுளும் பெறுவான். வேதத்தை நியமத்துடன் ஓதி அதனால் ஈசனை உணர்ந்து தன் வாழ்வை ஈசனது ஆணைக்கு ஆட்பட்டதாக உணர்ந்து அவரைக் குறித்து வேள்வியும் வழிபாடும் செய்பவர்கள் மஹேசனாகவே மாறுகின்றனர். அவர்களது வாக்கு ஸத்தியமாகும். வாக்கில் லக்ஷ்மி விளையாடுவாள். மஹேசனாகவே மாறிவிட்ட அந்தப் பெரியோர்களை வழிபடுபவனும், ஈசனை உபாசித்ததற்கான பலனைப் பெறுவான். இந்த ஈசனை வழிபடுவதால் உண்டாகிற நலனை அளவிடமுடியாது. (63)

ஸ்தலத்துப் பெருமை வளர ஈசன் தேவியின் தவத்தின் பயனாக, இங்கு ஜ்யோதிர்லிங்கமாக வெளிப்பட்டுள்ளார். எல்லையற்ற பேரானந்தமும் பேரறிவும் பேராற்றலும்

சிவனது இயல்பு, தனித்தன்மை, வடிவழகு, குணச் சிறப்பு என்று பல தரங்கள் மூலமாக சிவனை முழுமையுடன் குறிப்பிடுவதால் நாம என்ற பொதுச் சொல்லால் குறிப்பிடாமல் பொருள் பொதிந்தது, பொருள் பொருந்தியது என்ற ஆக்க்யா-என்ற சொல் லால் முழுப்பொருளையும் விரிவுடன் உண்மையாகக் கூறுவதென்ற கருத்துடன் இங்கு தரப்பட்டுள்ளது. (ख्या-प्रकथने, आ-समन्तात्-अभिव्याप्य ख्यायते अनया ) ஸம்ஸ்கிருத்தில் இது ஸ்திரீலிங்கச் சொல். அதனுல் எல்லா விடங்களிலும் அதனைத் தாயே! எனப் பெண்பாலில் விளிக்கிருர்.

शिवाख्ये नो जाने शिवमितरदेवानपि जन-
न्यये कामी कासावहमहह दिष्ट्या तु भवतीम्।
समीक्षे मत्सर्वश्रममुषमिहामूकसुलभां
स्वलब्धृस्वाधीनाखिलभुवनसाम्राज्यविभवाम्॥ २

சிவ பெருமானது திருநாமமே! தாயே! நான் சிவபெருமானையோ மற்ற தேவர்களையோ அறியேன். அவர்கள் எங்கே? இந்த நான் எங்கே? ஆஹா! அதிருஷ்டவசமாக உன்னைக் காண்கிறேன். இங்கே எனது எல்லா சிரமங்களையும் அகற்றிவிட்டாய். ஊமையாய் பிறக்காதவனுக்கு உன்னை அடைவது எளிது. உன்னை அடைந்தவனுக்கு (திருநாமமாகிய உன்னைச் சொல்பவனுக்கு) உலகங்களின் பேராட்சியும் வசப்படுகின்றது. ஆச்சரியமல்லவா? (2)

स्वकीयैः स्रोतोभिर्जगदखिलमाक्रामति कलौ
निमग्नास्ते वर्णाश्रमनियमधर्माः स्फुटमिदम्।
प्रलीना ध्यानादिर्भजनसृतिरेका पुनरये
परित्रातुं विश्वं पुरभिदभिधे त्वं विजयसे॥ ३

கலியானது தனது வெள்ளத்தால் உலகனைத்தையும் விழுங்கியதும் வர்ண தர்மங்களும் ஆசிரம தர்மங்களும் அதில்

மூழ்கிவிட்டன என்பது எல்லோருமறிந்ததே. இதுகாறும் மறைந்திருந்த தியானம் முதலிய பஜன முறையொன்று மட்டுமே உலகைக் காக்க இயலும். முப்புரத்தை வென்றவரின் திருநாமமே! நீ வெற்றி கொள்கிறுய். (3)

शिवाख्ये वाच्योऽर्थस्तव हि पुरभिद्वाऽस्तु मुरभित्
स लोकानामीष्टां-अवतु च सुखेन श्रितजनम्।
अलं नाहं तस्यानुसृतिषु स मा भूदपि च मे
श्रितोऽहं त्वां यत्त्वद्भवति मम कल्याणि तदलम्॥ ४

சிவபெருமானது திரு நாமமே! உன்னுல் (சிவ என்ற பெயரால்) அழைக்கப் பெறுபவர் முப்புரத்தை வென்றவராகவோ (சிவனே) முரனை வென்றவராகவோ (விஷ்ணுவோ) ஆகட்டும். அவர்களில் ஒருவரே உலகை ஆளட்டும். தன்னை அண்டிய மக்களைக் காக்கட்டும். அவரை அண்டியிருக்க என்னுல் ஆகாது. அவரும் எனக்கு உதவ இயலாது. நான் உன்னை அண்டினவனுனேன். மங்களச் சொல்லே! உன்னிடமிருந்து கிடைப்பதே எனக்குப் போதுமானது. (4)

स्वयंभूदैत्यारित्रिपुरमथनानीरितकृतः
त्रिलोकीसाम्राज्यं तदपि नयनादेशवशगम्।
विधातुं त्वद्भाजस्त्वमलमलघुस्ते हि महिमा
महेशाख्ये वाचामतिसरणिमाचामतितराम्॥ ५

பிரும்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரும் நீ சொன்னதைச் செய்பவராவர். அந்த மூவுலகப் பேராளுமையும் உன் கண்ணுல் இட்ட குறிப்பிற்கு வசமாகும். அவ்வாறு செய்ய உன்னை அடைந்தவருக்கே இயலும். மஹேசனின் நாமமே! உன் பெருமை லேசானதல்ல. வாக்கிற்கும் புத்திக்கும் உள்ள எல்லையை அது விழுங்கி விடுகிறது. (5)

करालाद्यत् क्ष्वेळाज्जगदवितवानिन्दुमकुटः
कृतान्ताद्दुर्दान्ताद्यदपि मुनिचूडामणिसुतम् ।
अनल्पैः किं जल्पैः तदिदमिदमवनीयस्य रसना-
कृतत्वत्सेवायाश्चरितमभिधे मन्मथरिपोः ॥ ६

*பிறை சூடியான சிவபெருமான் மிகக் கொடும் விஷத்திலிருந்து உலகைக் காப்பாற்றினார். அடக்க இயலாத யமனிடமிருந்து சிறந்த முனிவரான மிருகண்டுவின் புதல்வரைக் காப்பாற்றினார். நிறைய வம்பளப்பதால் என்ன பயன்? மன்மதனின் எதிரியின் நாமமே! அவரால் காப்பாற்றப்பட வேண்டியவனாயிருந்தவன் வாயால் உன்னைப் பாடினான். அதன் விளைவு இது (6)*

शतं सन्त्वाम्नायाश्शतमपि पुराणागमगणाः
विहाय त्वामेते वितरितुमलं किं शिवधियम् ।
अशेषग्लानिं या हरति भवती तु श्रममृते
शिवाख्ये मातस्तामितरनिरपेक्षा वितरति ॥ ७

*வேதங்கள் நூற்றுக்கணக்கில் இருக்கட்டும்! புராணங்களும் ஆகமங்களும் நூற்றுக்கணக்கில் இருக்கட்டும்! நீ இல்லாவிடில் அவற்றால் சிவனைப்பற்றிய உணர்வைத் தரமுடியுமா? சிவனது நாமமே! தாயே! சிவனைப்பற்றிய உணர்வு எல்லா களைப்புகளையும் மீதமின்றி அகற்றும். நீ அதனைப் பிற உபசாரங்களை எதிர்பாராமல் தருகிறாய். (7)*

त्रिणेत्रस्य ग्लानिस्त्रिपुरदनुजादीन् मुररिपोः
दशग्रीवप्रष्ठानपि दलयितुं हन्त कियती ।
नियन्त्री या तेषां निखिलजगतोऽप्याशु दळय-
स्यविद्यां निर्यत्नं निटिलनयनाख्ये जननि ताम् ॥ ८

*நெற்றிக்கண்ணனின் திருநாமமே! தாயே! முக்கண்ணனுக்குத் திரிபுராஸுரனை அழிப்பதிலும் முரனின்*

எதிரியான விஷ்ணுவிற்கு ராவணன் முதலானோரை அழிப்பதிலும் எவ்வளவு சிரமமிருந்தது? அவர்களையும் மூவுலகையும் ஆட்டுவித்தது அவித்யை எனும் அறியாமை. அதனை முயற்சியின்றி எளிதில் அழிக்கிறாய் (8)

भवत्याः पन्थानश्शातमखमुखश्रीभिरभितः
सुधासारैस्सिक्ताः कुसुमसमवायैश्च निचिताः ।
क्रियन्ते निर्याहि स्मरभिदभिधे दीयत इतः
करालम्बो जाग्रद्विनयभरया मुक्तिरमया ।। ९

மன்மதனை வென்றவரின் நாமமே! நீ செல்கிற நடைபாதைகள் இந்திரன் முதலான தேவர்களின் தேவியரால் அமுத நீர்தெளிக்கப் பெற்று பூக்குவியலால் நிரப்பப்பட்டுள்ளன. நீ வெளியே வருவாய்! இதோ மிகவும் வினயத்துடனும் கவனத்துடனுமுள்ள முக்திலக்ஷ்மியால் கைத்தாங்கல் தரப்படுகிறது. (9)

शिवाख्ये जिह्वायां वहति भवतीं यस्तमखिलं
शरद्राकाचन्द्रद्युतिमसितकण्ठं त्रिणयनम् ।
विधून्मीलन्मौळिं विरचयसि केयं व्यसनिता
विहन्तुं ते जीवेष्वहह शिवभावासुलभताम् ।। १०

சிவனது திருநாமமே! எவன் உன்னைத் தன் நாவில் தாங்குகிறானோ, அவனைச் சரத்காலத்துச் சந்திரன் போன்ற ஒளி கொண்டவரும் கழுத்து கறுத்தவரும் முக்கண்ணரும் சந்திரனைச் சிரஸில் அணிந்தவருமான சிவனாக ஆக்கிவிடுகிறாய். சிவத்தன்மை எளிதில் ஜீவனுக்குச் கிட்டாதிருந்த நிலையைப் போக்க உனக்கு ஏன் இவ்வளவு அக்கறை? (10)

समाचक्षाणस्य स्मरभिदभिधे देवि भवतीं
अहो यस्यां यस्यां हरिति नयनान्तोऽवतरति ।
हरास्तस्यां तस्यामळिकनयनाश्चन्द्रमकुटाः
शरज्ज्योत्स्नागौरास्सह गिरिजयोद्यन्ति शतशः ।।११

*தேவி! மன்தனையழித்தவரின் திருநாமமே! உன்னை வாயாரக் கூறுபவனின் கடைக்கண்கள் எந்த எந்த திசையில் இறங்குகின்றனவோ, அந்தந்தத் திசையில் நெற்றிக்கண்கள் கொண்ட- சந்திரனைச் சிரஸில் அணிந்த- சரத்காலத்துச் சந்திரன் போல் ஒளிர்கின்ற சிவனது வடிவங்கள் மலைமகளுடன் நூற்றுக்கணக்கில் தோன்றுகின்றன. (நாம ஜபம் செய்பவனுக்கு சிவதரிசனம் எளிதாகிறது.) (11)*

शिवः कामं क्रोधाकुलमतिरजैषीत् त्वदनुगैः
जितः कामः क्रोधोऽप्यथ मुनिकुमारं यमभयात्।
शिवोऽरक्षीदेकं सयतनमिमे तद्भयहृतो-
ऽखिलस्येक्षामात्राज्जितमिह शिवाख्ये त्वदनुगैः ॥ २

*சிவனது திருநாமமே! கோபத்தால் அறிவு குழப்பமடைந்த சிவன் காமனை வென்றார். உன்னை அண்டியவர்களால் காமமும் கோபமும் அடக்கப்பட்டன. முனிவரின் குமாரன் ஒருவனை சிவன் பெருமுயற்சியால் யமபயத்திலிருந்து மீட்டார். சிவநாமம் கூறுபவர்களோ பார்வையாலேயே எல்லோருக்கும் யமபயத்தை அகற்றுகின்றனர். உன்னைப் பின்பற்றுபவரே வெற்றியடைகின்றனர். (12)*

चरन्तीं त्वच्छायां शशिवदुपवाराशि वसती-
त्यदोमुख्यासूक्तिष्वपि रसनया सङ्कलयतः।
परागं ब्रह्माद्याः पदकलितमञ्चन्ति शिरसा
शिवाख्ये त्वन्निष्ठैर्जितमिति किमम्बाद्भुतमिदम् ॥ १३

*கடற்கரையருகே வசிக்கிறான் என்பதை ஸம்ஸ்கிருதத்தில்* उपवाराशि वसति- *உபவாராசி வஸதி எனக்கூறுவர். அதில் இணைந்த சிவ என இரண்டு எழுத்துக்களில் உன் பிரதிபிம்பம் தெரிகிறது. இரு தனிபதங்களில் உள்ள சிவ என்ற இரு எழுத்துக்களை நாவால் கூட்டிப்படிப்பவனது திருவடிகளிலுள்ள தூசியை பிரும்மா முதலியுவர் தலையில் சூடிக்கொள்கின்றனர்.*

உன்னிடம் நிலைத்தவர்களுக்கே வெற்றி. தாயே! இதில் வியப்பதற்கேது இடம்? (13)

भवत्यां स्पृष्टायां बत पुरहराख्ये रसनया
करालेन ग्रीवा भवति गरलेनास्य कलिता।
हुताशेनाश्लिष्टो भवति च करोऽङ्गानि भुजगैः
भवन्ति क्रान्तानि श्रितकुशलदा त्वं तु विदिता ॥ १४

முப்புரம் எரித்தவரின் நாமமே! நாக்கால் உன்னைத் தொட்டவனின் கழுத்து உடன் கொடும் விஷத்தால் அழகு படுத்தப்படுகிறது. கை அக்கினியால் இறுக அணைக்கப்பெறுகிறது. உடலவயவங்கள் பாம்புகளால் தழுவப்படுகின்றன. அண்டினவருக்கு நலம் புரிபவள் என நீ புகழ் பெற்றவள். (நாமம் சொல்பவன் சிவனாகிறான்.) (14)

दशायामन्त्यायां दलितबलदीनेन्द्रियततौ
महेशाख्ये जिह्वां श्रवणमपि वा संश्रितवती।
भवत्येकैवास्य प्रतिभवति भद्राय महते
तदा केनान्येनोन्मिषतु कणिका वाप्युपकृतेः ॥ १५

மகேசனின் நாமமே! உயிர் நீங்குகிற கடைநிலையில் இந்திரிய வரிசை வலிவிழந்து ஓய்ந்துள்ள போது (சிவநாமத்தைக் கூறியதும் காதால் கேட்டதும்) நீ அவனது நாக்கையோ காதையோ அடைந்து அவனது பெரு நிலைக்கு நீ ஒருவளே பொறுப்புடன் பிணை நிற்கிறாய். அந்நிலையில் வேறு எவரால் துளியும் உதவமுடியும்? (15)

मनागप्यस्पृष्टा गहनदहनेनेह विषया-
भिधानेनानेन क्षितिधरसुतानेतुरभिधे।
रमन्ते कामं ते कतिचिदधिकल्लोलितसुधा-
झरायां धारायां शिशिरशिशिरायां सुकृतिनः ॥ १६

*மலைமகளின் கணவனின் திருநாமமே! பொருளாசை எனும் கடுந்தீயால் சிறிதும் தீண்டப்பெருமல் (நாவார உன்னைக் கூறுகிற) சில புண்யவான்கள், பனியைப் போன்று குளிர்ந்த அமுத நீர் வீழ்ச்சியில் விரும்பியவாறு நீந்தி இன்பம் துய்க்கின்றனர். (16)*

वधूटीपुत्रादीन् वसुविसरमानम्रनृपति-
च्छटाचूडारत्नच्छविकवचिताशां श्रियमपि ।
जहत्येके धन्या जगति मदनद्रोग्धुरभिधे
विहारे सोत्कण्ठा विहतिरहिते त्वल्लहरिषु ॥ १७

*மன்மதன் எதிரியின் திருநாமமே! உன்னைக் கூறுபவன் பெரும் பாக்யசாலி. மனைவி மக்கள் முதலானவரையும், செல்வக்குவியலையும் தன்னை வணங்குகிற அரசர்களின் கிரீட ஒளியால் திசைகளை ஒளிர வைக்கிற பெருமையையும் துறந்து, உன் அலைவரிசையில் தடையுறாதபடி விளையாடுவதில் சிலர் ஆர்வம் கொள்கிருர்கள். (17)*

अजस्रं तन्वानाः श्वसितुमपि मामक्षममिमं
कदा वा क्रामन्तु प्रतिहतकराळोपहतयः ।
पुरारातेराख्ये पुरभिदनुभूत्यूर्मिळसुख-
प्रतीपेभध्वंसप्रबलहरयस्त्वल्लहरयः ॥ १८

*முப்புரங்களின் எதிரியின் திருநாமமே! சிவனது அனுபூதி எனும் அலைமோதுகிற ஸுக உணர்விற்கு எதிரியான (விஷய சுகம் எனும்)யானையை அழிப்பதில் வலிவுமிக்க சிங்கம் போன்ற உனது (நாம) ஜபவரிசை விஷத்தாக்குதலை எதிர்த்து அடக்கி, மூச்சுவிடக் கூடச் சக்தியற்று ஏங்குகிற இந்த என்னைத் தாங்கி ஆட்கொள்வது எப்போது? (18)*

शिवाख्ये त्वत्स्रोतस्ततिषु विहृतिं बाधिषत मा
ममाशक्त्यालस्यारतिगदनिहत्याद्यभिभवाः ।

प्रकामं बाधन्तामितरमखिलं तेऽभित इमे
प्रणामास्ते सन्तु प्रविरचय मत्काङ्क्षितमिदम् ।। १९

*சிவனது நாமமே! உனக்கு என் அனேக நமஸ்காரங்கள். எனது இந்த விருப்பத்தை நன்கு நிறைவேற்றுவாய். உனது ஜபமாகிற நீராடலில் எனது அசக்தி, சோம்பல், ஆர்வமின்மை, நோய் தாக்கல் என்ற இடையூறுகள், தடை செய்யாதிருக்கட்டும். அவை எனது மற்ற நடைமுறைகளை விருப்பப்படி தாக்கட்டும். (19)*

किमन्यन्मन्यन्ते जगति न तृणायापि कतिचित्
पदं मातश्शातक्रतवमपि वैरिञ्चमपि वा ।
प्रधावन्ति त्यक्त्वा दहनमिव तत् प्रत्युत मनो-
भवारातेराख्ये त्वदमृतरसास्वादरसिकाः ।। २०

*மன்மதனின் எதிரியின் நாமமே! தாயே! உனது அமுதச் சுவையை ரஸிப்பவர்கள். இந்திரனின் உயர்ந்த பதவியையும் பிரும்மாவின் பதவியையும் புல்லுக்குச் சமமாகக் கூட நினைக்கமாட்டாக்கள். அவை கிட்டினாலும் நெருப்பாக எண்ணி அவற்றைத் துறந்து வேகத்துடன் ஓடிவிடுவார்கள். (20)*

दिवं क्षोणीं क्षोणीं दिवमपि निरिन्द्रं जगदिदं
तथाऽन्येन्द्रं वीतद्रुहिणमपि वान्यद्रुहिणकम् ।
प्रगल्भन्ते कर्तुं प्रसवविशिखद्रोग्धुरभिधे
प्रपन्नास्त्वां शान्त्याऽपि तु सहजयोदासत इमे ।। २१

*மலரம்பு கொண்ட மன்மதனின் எதிரியின் திருநாமமே! உன்னை அண்டியவர் ஆகாயத்தைப் பூமியாக, பூமியை ஆகாயமாக மாற்ற வல்லவர். இப்போதுள்ள இந்திரனை நீக்கிப் புது இந்திரனையும், பிரும்மனை அகற்றிவிட்டு வேறுப் பிரும்மனையும் அமர்த்தவும் திறமையுள்ளவர். இயல்பாக அமைந்த அமைதியால் இதில் இவர்கள் உதாஸீனமாக உள்ளனர். (21)*

घनाः केऽपीशाख्ये त्वदमृतरसासारविसरैः
जगत्कल्युद्दामज्वलदनलशान्त्या शिशिरताम्।
नयन्तस्तन्वन्तस्समुचितफलस्याप्युपचितिं
क्षमाभूषा भान्ति क्षपितहरिदुद्वेलतिमिराः ॥ २२

*ஈசனின் திருநாமமே! சிலர் மேகங்களாகி, உன் அமுத நீர் பெருக்கால் உலகில் கலியின் கட்டுக்கடங்காது எரிகிற தீயை அணைத்துக் குளிர்வித்து, தக்க பலனைத் தருகிற பயிர்களை விளைவித்து, திசைகளில் பரவிய எல்லையற்ற இருட்டைக் குறைத்துப் பொறுமையை அணிகலன்களாகப் பூண்டு விளங்குகிறார்கள். (22)*

शिवाख्ये त्वद्वर्णद्वितयपरमाद्वैतरसिकाः
प्रियप्राप्तौ शर्माप्रियसमुपलंभे शुचमपि।
भयं वा कस्माच्चित् भयजनकतां कस्य च तथा
न विन्दन्ते ब्रह्माद्यसुलभपरानन्दभरिताः ॥ २३

*சிவ நாமமே! சிலர் உன் இரண்டெழுத்துகளின் வேற்றுமையற்ற பொருத்தத்தின் சிறப்பை ரஸிப்பவர்களாக விரும்பியது கிட்டிடின் மகிழ்ச்சியையும், விரும்பாதது கிட்டிடின் துயரத்தையும், வெளிப்பொருளிடமிருந்து பயத்தையும், பிறருக்குப் பயம் விளைவித்தலையும் அடைவதில்லை. ஏனெனில் அவர்கள் பிரும்மா முதலானவருக்கும் கிட்டாத பேரானந்தம் நிரம்பி யுள்ளார்கள். (23)*

जनो धत्ते यो मां जगति रसनायां श्रवसि वा
दिगीशा धाता वा दिशमपि तदीयां परुषया।
दृशा जातु द्रष्टुं किमलमिति कामधुगभिधे
त्वदीयप्रस्थानध्वनिभरमिषाद् गर्जसि मुहुः॥ २४

*காமனின் விரோதியின் திருநாமமே! "உலகில் என்னை எவன் நாவிலோ காதிலோ கொள்கிறனே, அவனிருக்கும் திசையைக் கூட திக்பாலகர்களோ, பிரும்மாவோ குரூரமிக்க கண்ணுல் எக்காலும் பார்க்க முடியாது" என உனது விஜய யாத்திரையின் கோஷம் என்ற போக்கில் அடிக்கடி கர்ஜிக்கிருய்! (24)*

**निबन्धारस्तेऽमी मम नियतमात्मीयरसना-**
**भुवीति त्वं त्रासादिव कुसुमचापध्रुगभिधे।**
**तृणं मेरुं मेरुं तृणमिति विलासव्यवहृती-**
**रपि द्रागेतेषामयि सफलयन्ती विहरसे ॥२५**

*பூ அம்பு உள்ளவனின் எதிரியின் திருநாமமே! தனது நாக்காகிற இடத்தில் இவர்கள் என்னை கட்டாயம் அடைத்து வைப்பார்கள் என்ற திகில் காரணமாக, புல்லை மேருவாகவும் மேருவைப் புல்லாகவும் ஆக்குகிற நடைமுறையை இவர்களிடம் பயனுள்ளதாக்கி விளையாடுகிருய். (நாமம் கூறுபவர் புல்லை மேருவாக்குவர். மேருவைப் புல்லாக்குவர். (25)*

**परित्यज्याशेषं जननि भवतीमेव भजतां**
**त्वमेवेशानाख्ये यदभिलषितं दैवतवरम्।**
**दृशं तत्तन्मूर्त्या श्रुतिमपि तदुक्त्या सफलतां**
**नयन्ती धत्से नन्ववधिविधुरां निर्वृतिधुराम्॥ २६**

*ஈசனின் திருநாமமே! தாயே! எல்லாவற்றையும் துறந்து உன்னையே அணுகுபவருக்கு நீயே விருப்பிற்குரிய சிறந்த தெய்வமாகிருய். அந்தந்த வடிவால் கண்ணையும் அதனைப்பற்றிய பேச்சால் காதையும் பயனுள்ளதாக்கி எல்லையற்ற மன அமைதியைத் தருகிருய். (26)*

**श्रुता ये स्वर्धेनुत्रिदशतरुमुख्यास्त्वदनुगा-**
**नुगानां भ्रूवल्लीवलनवशगास्ते जगति तान्।**

तवौदार्ये मातर्धरणिधरजानेतुरभिधे
कथङ्कारं तुल्यान् कथयतु सलज्जो यदि जनः ।। २७

*மலைமகளின் கணவரின் நாமமே! தாயே! புகழ்பெற்ற காமதேனு, கற்பகமரம் முதலியவை உலகில் உன்னை அணுகுபவரை அணுகுபவருக்கும் புருவ அசைப்பிற்கு வசமாகுபவையே. உனது வள்ளல்தன்மைக்கு அவற்றை ஈடான தாகவெட்கமுள்ள மனிதன் எவனுவது கூறுவானு? (27)*

विधातुं सन्त्रातुं विलयमपि नेतुं जगदलं-
भवन्तोऽपीशाख्ये प्रशमसमुपेतास्त्वदनुगाः ।
उपेक्ष्या लोकस्यावमतसकलास्सन्ति जगति
त्वयैवैके तुष्टास्तव खलु त एते रसविदः।। २८

*ஈசனின் திருநாமமே! உலகைப்படைக்கவும் நன்கு காக்கவும், லயமடையச் செய்யவும் ஆற்றல் பெற்றவராயினும் உன்னடியார்களில் சிலர் பேரமைதி கொண்டவர்கள். எல்லாவற்றையும் பொருட்படுத்தாத அவர்களை உலக மக்கள் பொருட்படுத்தமாட்டார்கள். உன்னைப் பெற்றதாலேயே அவர்கள் நிறைவுற்றவர்கள். உனது சுவை அறிந்தவர்கள். (28)*

शिवाख्ये त्वद्वर्णद्वितयमयि धत्ते श्रितवतां
मुखे धर्मब्रह्मप्रमितिकरसर्वाक्षरगणम् ।
पदे धत्ते वेधःप्रभृतिविभवान्नात्र तु रतिः
विनैषां त्वद्वर्णद्वितयमिह कोऽयं मधुरिमा ।। २९

*சிவ நாமமே! உனது இரு எழுத்துகளும் தன்னை அண்டியவர்களின் வாயில் தர்மத்தையும் பிரும்ஹத்தையும் பற்றிய உண்மையறிவைத் தருகிற எல்லா அக்ஷரக்கூட்டத்தையும் (நூல்களையும்) வைத்துவிடுகின்றன. அவர்களது கால்களில் பிரும்மா முதலியவர்களின் சிறப்பை வைக்கின்றன. ஆனுல் உன் இரு எழுத்துக்களைத் தவிர இவற்றில் சிறிதும் அவர்களுக்கு ஆர்வமில்லையெனில் உன் இனிமை எத்தகையது? (29)*

महेशाख्ये जिह्वाञ्चलकलनमात्रात्तनुभृतां
समस्ताघच्छेत्रीं सकलसुखदात्रीं च भवतीम्।
अवष्टभ्यैवाहुर्भगवति महाकारुणिकतां
शिवस्य त्वां हित्वा कथय कतमो निर्वहतु ताम्।। ३०

*மஹேசனின் நாமமே! பகவதி! நாக்கின் நுனியில் விளையாடுவதாலேயே உயிரினத்தின் எல்லா பாபங்களையும் போக்குபவளும் எல்லா இன்பத்தையும் தருபவளுமான உன்னைப் பிடிப்பாகக் கொண்டே சிவனைப் பெருங்கருணை கொண்டவன் எனப் புகழ்வர். நீயின்றி வேறு எவர் அந்தக் கருணையைக் காட்ட வல்லவர்? (30)*

शिवाख्ये स्वाख्यासु त्रिपुरमथनः कैटभरिपुः
तदीयान्या मूर्ती रघुपतिरपि त्वां समदधुः।
अमीष्वाद्यस्यैव प्रभवति भवत्या व्यवहृतिः
तदीयस्तादृक्षस्सुकृतपरिपाको विजयते।। ३१

*சிவநாமமே! அவரவரது பெயர்களில் (ஸஹஸ்ரநாமம் முதலியவற்றில்) திரிபுரமழித்தவரும் (சிவனும்) கைடபனது எதிரியும் (விஷ்ணுவும்) அவரது வேறொரு வடிவான ரகுபதியும் (ராமனும்) உன்னை (சிவன் என்ற பெயரை) கொண்டுள்ளனர். (விஷ்ணு ஸஹஸ்ர நாமங்களில்* **ஸா்வ: சா்வ: சிவ: ஸ்தாணு:** *என்றவாறு) ஆனால் இவர்களில் முதலாமவரான சிவனை மட்டுமே நீ குறிப்பிடுகிறாய். அவருக்கு மட்டுமே அத்தகைய புண்ணியம் பழுத்துப் பயன் தந்து விளங்குகிறது. (31)*

अशेषब्रह्माण्डाविरतचरिताशेषदुरिता-
न्यलं ते सन्तृप्तिं न हि घटयितुं तां घटयितुम्।
मदीयैरेनोभिर्मदनमथनाख्ये बत यते
ममागस्सोढव्यं तदिदमयि तुभ्यं नम इदम्।। ३२

மன்மதனை அழித்தவரின் பெயரே! அனைத்துப் பிரும்மாண்டங்களும் இடைவிடாமல் செய்த அனைத்துப் பாபங்களும் உனக்குப் போதுமானதாகாது. அந்தக் குறையை என் பாபங்களால் நிரப்ப முயல்கிறேன். இந்தத் தவறு பொறுத்துக் கொள்ளத்தக்கது. உனக்கு வணக்கம். (32)

अये जिह्वापीठे जननि समवस्थाप्य भवतीं
ममाघौघं तुभ्यं मयि समुपहर्तुं व्यवसिते।
तव स्मृत्यैवासौ बत कबळितः किन्नु करवै
क्षमस्वेमं मन्तुं भगवति पुरां भेत्तुरभिधे॥ ३३

தாயே! திரிபுரமழித்தவரின் நாமமே! உன்னை என் நாக்காகிற பீடத்தின் மீது அமர்த்தி, எனது பாபக்கூட்டத்தை உன்னிடம் ஸமர்ப்பணம் செய்ய முற்பட்டபோது, உன் நினைவே அதனை விழுங்கி விட்டதே! என்ன செய்வேன்? இந்தத் தவற்றையும் பொறுத்துக் கொள்வாய். (33)

निवेशो जिह्वायां निरवधिकपुण्योच्चयजुषां
निसर्गप्राप्तस्ते निटिलनयनाख्ये भवतु तत्।
निवेशं जिह्वायां मम यदि न धत्से जननि ते
नितान्तं पापिष्ठोऽवित इति न सिद्ध्येन्ननु यशः॥ ३४

நெற்றிக் கண்ணனின் பெயரே! எல்லையற்ற புண்ணியக்குவியலையுடையவரின் நாக்கில் நுழைவது உனக்கு இயல்பால் எளிது. அது அவ்வாறே இருக்கட்டும். என் நாக்கில் நீ கால் பதிக்காதிருந்தால் மிகமிகச் சிறந்த பாபி உன்னால் காப்பாற்றப்பட்டான் என்ற புகழ் கிட்டாதே! (34)

शिवाख्ये मातस्त्वं ननु शशिवदित्यादिफणिति-
च्छलादप्याविश्य श्रमभरमकस्मात्तनुभृताम्।
हरस्येवं कर्तुं हरिरथ हरो वा स किमलं
तदीयं माहात्म्यान्तरमपलपामस्तु न वयम्॥ ३५

சிவனது நாமமே! தாயே! நீ சந்திரனைப் போன்றவள் என்ற பேச்சைச் சாக்காகக் கொண்டு (त्वं शशिवत् என்று சொல்லும் போது) இடையே சிவ என்று எழுத்து அமைவதைக் கொண்டு கூட மனிதர்களின் துயரச் சுமையை நீ அகற்றுகிறாய். (நேரிடையாக உன்னைக் குறிப்பிடாவிடினும் பேச்சின் இடையே உன் இரு எழுத்துக்கள் எவ்வகையிலாவது இணைந்திருந்தாலும் அதில் திருப்தி அடைகிறாய்.) இவ்வாறு கருணை புரிய ஹரியாலோ ஹரனாலோ முடியுமா? ஆனால் அவர்களிருவரது மற்ற பெருமைகளை நாங்கள் மறுக்கவில்லை. (35)

पितृभ्यां त्यक्तोऽसावहमतिदुरात्मेति गिरिजा-
गिरीशाभ्यां त्यक्तो ननु जननि लोकेन च तथा।
ममास्त्यन्या काचिज्जगति न गतिर्यामि शरणं
शिवाख्ये त्वामेकामयि जहिहि वा मां बिभृहि वा॥ ३६

இந்த நான் தாய்தந்தையரான மலைமகளாலும் மலைவாழீசனான சிவனாலும் இவன் கெட்ட மனிதன் எனக் கைவிடப்பட்டவன். தாயே! சிவ நாமமே! உலகில் எனக்கு வேறு போக்கிடமில்லை. உன் ஒருவளையே சரணடைகிறேன். என்னைக் கைவிடுவாய், அல்லது தாங்குவாய். (அது உன் விருப்பம்) (36)

परित्याज्यं सर्वेऽप्यभिदधति पापिष्ठमयि ते
शिवाख्ये सङ्ग्राह्यस्स जयति तवैतत् समुचितम्।
प्रपन्ना त्वं किन्नोदयिनि गरले चामृतरसे
पयोधेस्तत्राद्यग्रहणरसिकं तं प्रभुमणिम्॥ ३७

சிவ நாமமே! மிகுந்த பாபம் செய்தவன் கைவிடத்தக்கவன் என எல்லோரும் கூறுவர். ஆனால் உனக்கு அவன் ஏற்கத்தக்கவன். அதனால் அவன் மேனிலை பெறுகிறான். உனக்கு இதுவே ஏற்றது. விஷமும் அமுதமும் கடலிலிருந்து தோன்றிய போது அவற்றில்

முதலான விஷத்தை ஏற்பதில் ஆர்வம் காட்டிய பிரபுக்களில் சிறந்தவரை(சிவனை) நீ அடைந்தவள் அல்லவா? (37)

ममाजस्रं दोषान् समुपघटयन्तोऽन्तररयो
जयन्तीशः पश्यन् हृदि वसति मद्दौस्थ्यमखिलम्।
अथैवं सत्यागोऽखिलमपलपन्त्यम्ब बिभृषे
कथं मामीशाख्ये कथय तव कः स्तौतु विभवम्॥ ३८

ஈசனின் நாமமே! என்னுள் குடியிருக்கும் எதிரிகள் (காமம், கோபம் முதலியவை) எப்போதும் எனது குறைகளைக் கூட்டி வளர்த்துக் கொண்டே என்னைத் தோற்கடிக்கின்றன. எனது இந்த அவல நிலையை பார்த்துக் கொண்டே ஈசன் என் இதயத்தில் வசிக்கிறான். இவ்வாறு இருக்கும் போது என் பாபமனைத்தையும் மறைத்து என்னைத் தாங்குகிறாயே! அதன் பெருமையை துதிக்கட்டுமா? சொல்வாய்! (38)

स्फुटायां द्वारीशेतरमितरया साधु नयते
यथा प्राप्य स्थानं सुहृदिह मनोजध्रुगभिधे।
स्वकर्मादावीशेतरमिममखेदं शिवपदं
तथा कल्याणि त्वं ननु कलयसि त्वत्कलनया॥ ३९

மன்மதனின் எதிரியின் நாமமே! இனிது பேசுபவளே! (மங்கள வடிவினளே!) வாசல் தெளிவாகத் தெரிந்திருந்தும் அவ்வழி செல்ல இயலாதவனை வேறுவாசல் வழியே, வாசல் அருகே நிற்கிற நண்பன் சேரவேண்டிய இடத்திற்கு அழைத்துச் செல்வான். அவ்வாறு தனக்குரிய சடங்குகளை (கடமைகளை)ச் செய்ய இயலாதவனை சிரமமின்றி சிவ நிலையை உனது செயலாற்றலால் அடையச் செய்கிறாயே! ? (39)

स्वकर्मादावीशं जनमपि भवत्येव बिभृते
विना त्वां तस्यापि स्वविरचितसाद्गुण्यविरहात्।
बुभूषोस्सर्वस्य त्वमसि तदुपास्या किमपरं
त्वयाऽऽस्ते लब्धात्मा भगवति शिवाख्ये स च शिवः॥४०

சிவ நாமமே! பகவதி! தனக்குரிய சடங்குகளைச் செய்யச் சக்தி உள்ளவனையும் நீயே தான் தாங்கி நிற்கிறாய். நீ இன்றி அவரவர் புரிகிற கருமங்கள் நற்பயனைத் தரமுடியாததை உணர்ந்து எல்லோரும் நற்பயனைப் பெற நீயே வழிபடுகிற தைவமாகிறாய். வேறென்ன? உன்னாலேயே அவன் முழுமை அடைந்து சிவனாகிவிடுகிறான்.

நல்வாழ்வு வாழ்வதற்குரிய புண்ணிய கருமங்களைச் செய்ய இயலாதவனுக்கும் நண்பன் போல் நாமம் வழிகாட்டுகிறது. நற்கருமங்களைப் புரிபவனுக்கும் அவை நற்பயனைத் தரச் செய்கிறது. கருமங்கள் பயன் தராத போதும் நாமமே வழிபாட்டுத் தெய்வமாகி பயன் பெறச் செய்து நிறைவுணர்வைத் தந்து சிவனாகவே மாற்றுகிறது. (40)

**न कर्माध्वन्योऽहं भगवति न वा भक्तिपथिको-**
**ऽस्म्युपादेयः कोऽपि स्फुरति गुणलेशोऽपि न मयि ।**
**असङ्ख्याता दोषाः किमत इह दौरात्म्यमितरत्**
**तदम्ब त्वत्तोऽन्या न जगति शिवाख्ये मम गतिः ॥ ४१**

சிவ நாமமே! பகவதி! நான் கர்மயோகவழியில் செல்பவனல்ல. பக்தி வழியில் செல்பவனுமல்ல, என்னிடம் உன்னால் ஏற்கத்தக்க குணச் சிறப்பின் லேசமும் இல்லை. குறைகளும் எண்ணற்றவை. இதைவிட முறைகேடு வேறு என்ன உள்ளது? இருந்தும் எனக்கு உன்னைவிட்டால் வேறு கதி இல்லை. (41)

**सुतस्याख्यां नारायणगिरमुपादत्त यदजा-**
**मिळस्तं तद्भीतास्तपनसुतदूताः प्रविजहुः ।**
**त्वमीशाख्ये भीतिं नयसि विमतांस्ते मुदमथा-**
**नुगान्कारुण्यार्द्रास्त्वहह निखिले ते त्वदनुगाः ॥ ४२**

ஈசனின் நாமமே! அஜாமிளன் தன் மகனுக்கு நாராயணன் என்ற சொல்லைப் பெயராக வைத்தான். அதில் பயந்த ஸூரியனின் மகனான யமனின் தூதர்கள் அஜாமிளனைப்

பிடியிலிருந்து விடுவித்தனர். நீ மனமொத்துப் போகாதவருக்குப் பயம் தருகிறுய். உன்னைத் தொடர்பவர்களுக்கு மகிழ்ச்சி தருகிறுய். உன்னை அண்டியவர் அனைவரும் உன் கருணையில் நனைந்தவர்களே. (42)

सुरभिशरभिदाख्ये सुन्दरे त्वज्झरेऽस्मिन्
निरुपहति विहर्तुं नित्यमुद्ग्रीविताशम्।
अपनयसि किमेवं हन्त मामन्तरायैः
मनसि न कुरु मातर्मामकान् देवि मन्तून्।। ४३

பூ அம்புகளைக் கொண்டவனின் எதிரியின் நாமமே! அழகிய இந்த உன் பிரவாகத்தில் தடையின்றி நீந்தி விளையாடக் கழுத்து வரை எதிர்பார்ப்பு கொண்ட என்னை ஏன் தடைகளால் இவ்வாறு விலக்குகிறுய்? தேவி! என் தவறுகளை மனத்தில் கொள்ளாதே. (43)

किमकुरुत मुदे मे कर्म वर्णाश्रमार्हं
किमभजत मदङ्घ्री किं व्यधादेष को वा।
इति निजसमितौ मामीक्षमाणे गिरीशे
मदनुग इति मातर्गर्ज धीरं शिवाख्ये।। ४४

சிவ நாமமே! தாயே! ''இவன் என் மகிழ்ச்சிக்காக (பரமேச்வர ப்ரீத்யர்த்தம்) இவனது வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் ஏற்ற கருமத்தை செய்தாஞ? என் திருவடிகளை வழிபட்டாஞ? இவன் யார் எனத் தனது ஸபையரங்கில் என்னை சிவன் நோக்கும்போது இவன் என்னைச் சார்ந்தவன் என உரத்து முழங்குவாயாக (44)

जगति वशिगिरा त्वद्व्यत्ययेनोल्लसन्त्या
जननि परिगृहीतांस्त्वं स्वकर्मादिनिष्ठान्।
न किमवसि शिवाख्ये हा तयाऽनादृतं मां
अवितुमिह विळम्बः कस्त्वदेकावलम्बम्।। ४५।।

சிவ நாமமே! உலகில் உனக்கு நேர்மாறுன (சிவ என்பதன்

மாறுபாடு-வசி) புலன்களை வென்றவர்களின் (வேதத்தின்) வாக்கால் - வேதத்தால் ஈர்க்கப்பட்டு தன் தன் கடமையான சடங்குகளில் ஆர்வத்துடன் ஈடுபடுவர்களை நீ காப்பதில்லையா? அந்த வேதவாக்கால் ஆதரிக்கப்படாதவனும் உன்னையே நம்பியிருப்பவனுமான என்னைக் காப்பதில் ஏன் இந்தத் தாமதம்? (45)

**अम्ब त्वदीयमहिमाम्बुधिशीकराणु-**
**वेदी सुधीस्त्वयि निरन्तरवृत्त्यलाभे।**
**ईशाभिधे भुवि समेतु न किं पिपासोः**
**अभ्यर्णगेऽम्भसि निरुद्धगतेरवस्थाम्॥४६॥**

தாயே! சிவ நாமமே! உனது பெருமையாகிய கடலின் அணு போன்ற ஒரு திவிலையை மட்டும் அறிந்த அறிவாளி, உன்னிடம் இடைவிடாதபடி மனத்தைப் பதிக்க முடியாவிடில், நாவரட்சியுள்ளவன் அருகிலுள்ள நீரைக்குடிக்க முடியாதபடி தடைப்பட்டவனின் நிலையை அவன் அடையமாட்டானு?

உன் நாம ருசியைச் சிறிதளவேனும் பெற்றவனுக்கு உன்னை இடைவிடாது ஜபிக்கத்தடை ஏற்படுமாகில் அவனது வேதனைக்கு அளவேது? தாகத்தால் வருந்துபவன் அருகில் நீர் நிலையிருந்தும் நீரைக்குடிக்க முடியாதபடி தடுக்கப்பெற்ருல் எவ்வளவு வேதனைப்படுவான்? அது போன்று தானே இதுவும்? (46)

**इतो रोगाः कामादय इत इतः स्त्रीसुतमुखाः**
**कृतान्तास्सर्वत्रेत्ययमनवधिः क्लेशजलधिः।**
**तमेतं चाह्नाय त्वदनुगदयोल्लासघटभूः**
**निपीयेशाख्ये मामभिरमयतु त्वत्परिसरे॥ ४७॥**

ஈசனின் நாமமே! இங்கே காமம் முதலியநோய்கள்; அங்கே மனைவி மக்கள் முதலியவர்கள், எல்லா திசையிலும் யமர்கள், என் துயரக்கடல் கரை காணுதது. அந்தக் கடலை

*உன்னைத் தொடர்கிற கருணை வீச்சாகிற அகஸ்தியர் குடித்து என்னை உன்னருகிலேயே களிக்கச் செய்யட்டும் (47)*

**अम्ब प्रसीद कुरु मामनघं बलात्त्वं**
**अङ्के च ते कुरु निषण्णममुं शिवाख्ये ।**
**जम्बालसक्तममलं कुरुते न माता**
**किं बालकं न कुरुतेऽङ्कजुषञ्च हृष्टा ॥ ४८ ॥**

*சிவநாமமாகிய தாயே! அருள் புரிவாய்! இவனை வலிவில், உன் மடி மீதமர்த்திப் பாபமற்றவனுக்குவாய்? சேறு பூசிக் கொண்ட தன் சிசுவைத் தாயானவள் மடிமீதமர்த்தி மகிழ்ச்சியுடன் அழுக்கு நீக்கமாட்டாளா? (48)*

**आविर्भवस्ययि नृणां त्वमयत्नतोऽग्रे**
**ग्लानिं धुनोषि घटयस्यपि मङ्गलानि ।**
**ईशाभिधे तव यशो न किमुज्जिहीतां**
**ईर्ष्याकुलत्वममरा न किमश्नुवीरन् ॥ ४९ ॥**

*ஈசனின் நாமமே! யத்தினம் ஏதுமின்றி மக்களின் முன் தோன்றுகிறாய். அவர்களது வாட்டத்தை நீக்குகிறாய். மங்கள நிகழ்ச்சிகளைக் கூட்டுவிக்கிறாய். இதனால் உன் பெருமை அதிகப்படவில்லையா? தேவர்கள் உன்னிடம் அஸூயை கொள்ளமாட்டார்களா? (49)*

**मदनहन्त्रभिधे तव निर्झराः**
**मधुसुधालहरीरतिशेरते ।**
**कृतधियो विहरन्ति च तेष्वमी-**
**ष्वरसिकोऽत्र हतोऽस्म्यहमेककः ॥ ५० ॥**

*மன்மதனின் எதிரியின் திருநாமமே! உனது நீர் வீழ்ச்சிகள் தேனும், அமுதமும் அலைமோதிப் பெருகுவதை விஞ்சுகின்றன. ஆர்வமுள்ளவர் அவற்றில் நீந்தி*

விளையாடுகின்றனர். அதில் ஈடுபடாத அரஸிகனுன நான் மட்டும் வீணுனேன். (50)

शिवाख्ये मा भैषीः पदममरनेतुर्ननु भवेत्
अमुष्मै दातव्यं सरसिजभुवो वा पदमिति।
समीहे नाहं तत् किमपि सहसाऽभ्येहि रसनां
ममेमां मा हासीस्समभिलषितं मे पुनरिदम्॥ ५१॥

சிவ நாமமே! பயப்படாதே! இந்திர பதவியையோ பிரும்மனின் பதவியையோ இவனுக்கு தரும்படி நேராது. அது எதனையும் நான் விரும்பவில்லை. உடன் எனது இந்த நாக்கின் மீது அமர்வாய்! இது ஒன்றே என் விருப்பம். இதனை மறுக்காதே! (51)

प्रदाय त्रैलोक्यश्रियमथ विमुक्तिश्रियमपि
त्वमन्तर्लज्जार्ता भवसि किममुष्मै कृतमिति।
व्यथैषा दिष्ट्या त्वद्रसिकतिलकैस्ते परिहृता
विना त्वामीशाख्ये न किमपि यदेषां रतिपदम्॥ ५२॥

மூவுலகின் சீரையும் முக்திலக்ஷ்மியையும் வழங்கிய நீ ''இவனுக்கு நான் என்ன செய்தேன்'' என உள்ளத்தினுள் வெட்கிவருந்தாதே. இந்த உன் உள்ளத்து வேதனையை நாம ருசியை ரசிக்கின்ற பெரியோர்கள் நல்ல வேளையாக நீக்கிவிட்டார்கள். ஈசனின் நாமமே! அவர்கள் மனமகிழ்ச்சிக்குஉன்னைத் தவிரவேறொன்றும் உதவாது. (52)

जन्मास्य वार्यमिति ते जननि प्रसादो
जायेत चेन्मयि तदस्तु शिवाभिधे नः।
त्वन्निष्ठताभरनिरन्तरतातिरम्यं
यज्जन्म तन्मम न जीर्यतु ते नमोऽस्तु॥ ५३॥

சிவ நாமமே! தாயே! இவனது மறுபிறப்பு தடுக்கப்பட

வேண்டுமென என்னிடம் அருள் காட்டப்பட்டால். அப்படியே ஆகட்டும். உன்னிடத்தில் ஆழ்ந்த சித்தத்தின் பதிவு இடைவிடாமலிருப்பதால் மிக இனியதாகிவிட்ட இந்த எனது பிறவி மூப்படையாதிருக்கட்டும். உனக்கு வணக்கம்

மறுபிறவி நேராவிடில் நல்லதே. ஆனல் இப்பிறவியில் பெற்ற உடல் முதலியவை உன்னிடம் பதிந்துவிட்டதால் இனிமையை உணர்கின்றன. அதனுல் மூப்பின்மையையும் மரண மின்மையையும் நான் வணங்கி வேண்டுகிறேன். (53)

विश्वाधिनेतुरखिलार्थविदः स्मरारेः
अज्ञाततां मदघराशिममुं नयन्ती ।
मां त्रायसे मदनहन्त्रभिधेऽम्ब कस्ते
चातुर्यसाहसभरौ चतुरोऽभिधातुम् ॥ ५४ ॥

உலகை ஆள்கிறவரும் எல்லா மறிந்தவருமான (மன்மதன் எதிரியான) சிவனுக்கு, எனது பாபக்குவியலைக் கவனத்திற்குக் கொணராமல் என்னைப்பாதுகாக்கிருய். அதில் உன் திறமையையும் வேகத்தையும் பாராட்ட எவரால் முடியும்? (54)

प्रसीद गिरिशाभिधे प्रदिश मन्मतावम्बया
सह स्फुरणमूर्जितं सततमिन्दुमौळेर्विभोः ।
तथाऽनिशमिहासिकां तव मदीयजिह्वाञ्चले
ददस्व मम काङ्क्षितं द्वयमिदं त्वदेकास्पदम् ॥ ५५ ॥

கிரிசஞெ சிவனின் நாமமே! என் உள்ளத்தில் சந்திரனைச் சிரஸில் அணிந்த பெருமான் அம்மையுடன் நிலைத்து விளங்க வேண்டும். என் நாவில் நீ எப்போதும் இருக்கவேண்டும். உன்னிடமே மனம் பதிந்திருக்க இவ்விரண்டுமே நான் விரும்புவது. (55)

न संस्फुरतु काङ्क्षतः स्फुरणमीश्वराख्ये कथं
हृदि त्वदनुगस्य तद्भ्रुकुटिकिङ्करश्शङ्करः ।

**चरन्तु विषया हरस्फुरणरोधिनो हृद्यमी**
**कथं कथय गर्जनैर्जननि तर्जयन्त्यां त्वयि ॥ ५६ ॥**

*ஈசவரனின் நாமமே! தாயே! உன்னைப்பின் தொடர்பவனும் உள்ளத்தில் நீ தோன்றுவதைப் பெரிதும் நாடுபவனுமான என் உள்ளத்தில் சிவன் ஏன் காட்சி தரவில்லை? சங்கரன் உன் புருவ நெரிப்புக்கேற்ப ஏவல்புரிபவராயிற்றே. நீ மிரட்டும் போது சிவன் என் இதயத்தில் தோன்றுவதைத் தடுக்கின்ற வெளிப் பொருட்காட்சி எப்படி நடமாடலாம்? சொல்வாய். (56)*

*வெளிப் பொருளைக் காண்பதால் உள்ளத்தில் சிவன் தெரியவில்லை,*

**ममायमवबुद्ध्यतां मधुरिमाणमूर्जस्वलं**
**कदापि विजह्यातु मां न रसनैतदीयेति मे ।**
**दयस्व गिरिशाभिधे ननु ददीत सा मेऽथवा**
**तदेतदभिकाङ्क्षितं त्वदनुगेषु जात्वानतिः ॥ ५७ ॥**

*சிவனின் நாமமே! இவன் என்னைச் சார்ந்தவன் என்பதைப் புரிந்து கொள்வாய். இவனது நாக்கு சக்தி மிக்க இனிய என்னைவிட்டு எந்நிலையிலும் விலகக்கூடாது என்று நீ தயைபுரிவாய். எப்போதும் உன்னைச் சார்ந்தவர்களை வணங்கியது இன்று எனக்கு இந்த விருப்பத்தை நிறைவேற்றுமா?*

**मनागपि मनः स्पृशेन्मम यदेदमर्थान्तरं**
**तदा द्रुतमपैष्यहो त्वमपहाय जिह्वां मम ।**
**तथाम्ब गिरिशाभिधे तव न विप्रलम्भः क्षमो**
**भणेत् क इह किं प्रसूर्भवति विप्रलब्धी यदि ॥ ५८ ॥**

*கிரிச நாமமே! சிறிதேனும் வேறு பொருளை என் மனம் நாடி விட்டால் நீ உடனே வேகத்துடன் என் நாக்கைவிட்ட கன்று*

விடுகிறாய். தாயே! உனது இந்த வஞ்சனைச் செயல் ஏற்றதல்ல, தாயே ஏமாற்றுபவளாயின் யார் என்ன சொல்வது? (58)

**यदा त्वमपयासि मां जननि वञ्चयित्वा स्वयं**
**तदा नियतमाहरोपहरमुख्यसञ्जल्पनैः ।**
**यथा कलितवञ्चनः पुरहराभिधे त्वामहं**
**नयानि रसनां तथाऽञ्चतु विधेः प्रसादो मयि ॥ ५९ ॥**

தாயே! புரஹர நாமமே! நீயே என்னை வஞ்சித்துவிட்டு வெளியேறினால் அப்போது நான் வலிவில் ஆஹர(கொண்டு வா) உபஹர (முன் எடுத்துவை) முதலிய ஹர என்ற சொற்களால் உன்னை ஏமாற்றி நாக்கிடம் இட்டுச் செல்வேன். விதி இவ்வாறு என்னிடம் அருள் புரியட்டும்.

சிவ ஹர என்ற இறைவனின் நாமம் என்ற உணர்வுடன் சொல்ல முடியாவிடில் வலிய ஹர சிவ என்று வருமாறு ஏதேனும் சொற்களையாவது கூற விதி உதவவேண்டும். (59)

**शरणितवन्तः खलु ये शशिकन्दळशेखराभिधे भवतीम् ।**
**तच्चरणाम्बुजविहरणसंस्मरणं सुरघटाकिरीटतटे ॥ ६० ॥**

இளஞ்சந்திரனைத்தலையணியாகக் கொண்டவனின் திருநாமமே! உன்னைச் சரணடைந்தவர் (தேவருலகில்) கிரீடங்களைத் தரித்த தேவர்களின் தலைகளாகிய தரையில் அந்த சிவனது திருவடித் தாமரைகள் லீலை புரிவதை உணர்வர். (60)

**शरणं जगतो ह्येते शरणितवन्तश्शिवाभिधेये त्वाम् ।**
**अभिलषितं यदमीषामसुलभमिति तन्न किं वियन्नळिनम् ॥ ६१**

சிவநாமமே! உன்னைச் சரணடைந்த இவர்கள் உலகிற்கே அடைக்கலம் தருவர். இவர்கள் விரும்பியது கிடைக்காதென்பது ஆகாயத்தாமரையாகும். (நேராத தொன்றாகும்)

**महेशे तत्सङ्गिष्वपि कृतिषु पाषाणहृदये**
**वराके मय्यस्मिन् प्रविदधति सन्तः प्रणयिताम् ।**

कथङ्कारं मातर्दळय तदिहेमां मम हृदो
दृषत्तामत्राम्ब स्मरभिदभिधे त्वं खलु गतिः ॥ ६२ ॥

*மன்மதனை அழித்தவரின் பெயரே! மஹேசனேயும் அவரது அடியார்களேயும் உபசரிப்பதில் கல்லாகிவிட்ட உள்ளம் கொண்ட கடையனுன என்னிடமும் நல்லோர் அன்பைக் காட்டுகின்றனர். தாயே! இந்த என் உள்ளம் கல்லாகிவிட்ட நிலையை எப்படி யாவது சிதைப்பாய். இவ்விஷயத்தில் நீ ஒருவளே கதி. (62)*

**ஆக்க்யா ஷஷ்டி முற்றிற்று.**

★ ★ ★

# २.दयाशतकम्

# 2. தயாசதகம்

श्रेयांसि सन्दिशति कन्दळयत्यमन्दं
आनन्दमस्य दळयत्यघबृन्दमार्तीः ।
धूनोति, किङ्करयति द्रुहिणादिकांश्च
मातस्तवैष उदयो हि दये पुरारेः ॥ १

*புராரி (புரங்களின் எதிரி) யின் தயையே! தாயே! உனது இந்த எழுச்சி மேனிலேகளேத்தருகிறது. பேரானந்தம் துளிர் விடச் செய்கிறது. பாபக்கூட்டத்தை அழிக்கிறது. துயரங்களே அகற்றுகிறது. பிரும்மா முதலானவரையும் ஏவல் புரியச் செய்கிறது.*

*தயா-கருணே, பரிவு, கரிசனம், அன்புப்பாசம், துயர் துடைப்பு, நெருக்கடியில் அழைப்பின்றி உதவுவது, ஆபத்தில் தூக்கிவிடுவது முதலிய பல அன்பு விளேவுகளின் கலவை. தயா கருணா முதலிய சொற்கள் ஸம்ஸ்கிருதத்தில் பெண்பாலாக வழங்கப் பெறுபவை. அதனுல் தாயே! என்று தயையை அழைக்கிருர். (1)*

कल्याणि शैलतनयाकमनानुकम्पे
त्वं यत्र यत्र वितनोषि पदार्पणानि ।
प्रागेव पद्मजवलोन्मथनादिलक्ष्म्यः
प्रादुर्भवन्त्यवहिताः खलु तत्र तत्र ।। २

*மலைமகளின் அன்பனின் பரிவே! கல்யாணி! (இனிது பழகுபவளே!மங்களமானவளே!) நீ எங்கெங்கு காலடி வைக்கிறாயோ, ஆங்காங்கு, அதற்குமுன்னரே, பிரும்மா இந்திரன் முதலானோரின் சக்திகள் ஆர்வத்துடன் முன் நிற்கின்றனர். (2)*

मन्दस्मितं मदनसुन्दरमिन्दुरेखा-
सन्नद्धशेखरमुमासखमुद्वहन्ती ।
दिव्यं वपुः किमपि दृक्पथगाऽनघानां
मातर्मुदं हि तनुषे महतीं दये त्वम् ।। ३

*தாயே! தயையே! பாபமற்றவர்களின் முன், புன்சிரிப்பும் மன்மதனின் அழகும் கொண்ட உமையன்பனின் திவ்வியத் திருமேனி தாங்கி, கண்களுக்குப் புலப்பட்டு பேரானந்தம் தருகிறாய்.(3)*

दिव्यं वपुस्तदनुसन्दधतः पुरारेः
कांश्चित् गुणान् जगति केचन निर्विशन्ति ।
आख्यामृतोर्मिरसिकास्त्वपरेऽभिनन्द-
न्त्यस्ताधयः शिवदयेऽम्ब तवावलम्बात् ।। ४

*சிவனின் தயையே! தாயே! உன் ஆதரவால் அந்த புரஹரனின் திவ்வியத் திருமேனியை தியானிப்ப தன் சிறப்புகளை உலகில் சிலர் அனுபவிக்கின்றனர். சிலர் நாமாமிருத அலைகளை ரஸிக்கிறார்கள். சிலர் உடல்மன நோயற்றுப் பெரு மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள். (4)*

आखण्डलोऽयमिति कश्चिदखण्डितश्रीः
विक्तेश्वरोऽयमिति विश्रुतवैभवोऽन्यः ।
धातेति कोऽपि जगतां जनकस्तवामी
कल्याण्युमेशकरुणे परिणामभेदाः ॥ ५

*கல்யாணி! உமேசனின் கருணேயே! "துண்டாடப் பெருத செல்வச் செழிப்புள்ள இந்திரன் இவர்! புகழ்பெற்ற செல்வமிக்க குபேரன் இவர்! உலகின் தந்தையான பிரும்மா இவர்! எனக்காட்சி தருபவர் அனைவரும் உனது வெவ்வேறு பரிணாமங்கள். (5)*

ईशो हरः स जगतां ननु तस्य च त्वं
ईशा परार्तिविनिराकृतिराकृतिस्ते ।
तन्मामकार्तिहरणं करुणे न चेत्त्वं
धत्से कथं कथय देवि तवात्मलाभः ॥ ६

*ஹரன் உலகின் ஈசன். அவனுக்கு நீ ஈச்வரி.உன் வடிவம் பிறர் துயரைத்துடைப்பது. கருணேயே! தேவி! நீ எனது துயரைத்துடைக்காததால் உனக்கு என்ன லாபம் கிட்டும்? சொல்வாய். (6)*

दाक्षायणीसहचरे गरळग्रहेण
दत्ताभये विरचितेऽम्ब दये भवत्या ।
अश्वद्विपासिरमरेशितुरच्युतस्य
श्रीकान्तता दिविषदाममृताशिता च ॥ ७

*தயைத்தாயே! உன்ஞல் தாக்ஷாயணியின் கணவரான சிவன் விஷத்தை ஏற்று அபயம் தருபவராக ஆக்கப்பட்டார். இந்திரனுக்குக் குதிரையும் (உச்சைச் சிரவஸ்) யானேயும் (ஐராவதம்) கிட்டின. அச்யுதனுக்கு லக்ஷ்மியின் மணுளன் என்ற நிலே கிட்டியது. தேவர்கள் அமிருதம் பருகியவர்களாஞர்கள். (7)*

क्रूरेण हन्त गरळेन गळेऽनलेन
फाले शिरस्यपि तरङ्गवतीझरेण।
क्रान्तं त्वदध्वगतमातनुषे दये स्वा-
धीनेश्वरा भवसि कः किमिहाभिधत्ताम्॥ ८

*தயையே! சிவனைத் தன் வசப்படுத்தியவளாக, உன் வழி வந்த சிவனை கொடூர விஷத்தால் கழுத்திலும், நெருப்பால் நெற்றியிலும், ஆற்றுப்பெருக்கால் தலையிலும் ஆக்கிரமிக்கப் பெறச் செய்தாய். எவர் எதைக் கூறினால் என்ன? (8)*

काचित् त्वदीयकणिका मणिकाञ्चनाद्यैः
अर्थैर्धिनोत्यमुमिहारुचिहेतुरन्या।
उल्लासयत्युडुपतिश्रितमौळिसीम्नि
त्वद्धाम्नि ते हि करुणे सरणिर्विचित्रा॥ ९

*கருணையே! உனது ஒரு திவலை இவனை ரத்தினம், தங்கம் முதலிய பொருட்களால் வாழ்வில் எழுச்சி பெறச் செய்கிறது. மற்றொரு திவலை பற்றின்மைக்குக் காரணமாகிறது. வேறொன்று தலையில் சந்திரனை அணிந்த உனது ஆதாரமான சிவனிடம் உல்லாஸத்தை ஏற்படுத்துகிறது. உன் வழியே தனி. (9)*

भीषामहद्भयगिरोऽतिभयङ्करत्वं
यस्याहुरुग्र इति भीम इति प्रथा च।
क्षिप्त्वैव दासयसि देवि दये तमेनं
हा जिह्वयैतदभिधास्पृशि पुल्कसेऽपि॥ १०

*தயாதேவி! எவரிடம் பயந்து வாயு ஸூர்யன் முதலானோர் இயங்குவதாக வேதம் கூறுகிறதோ, எவருக்கு உக்கிரர் பீமர் (பயங்கரர்)என்ற புகழுள்ளதோ, நாவால் அவரது பெயரைத் தீண்டுகிற புலையனிடமும் அவரை தாஸனாக்குகிறாய். (10)*

नान्यो मदस्त्यगतिकोऽगतिकस्तव स्वं
शम्भोर्दयेऽघपिशुना मयि शश्वदास्ते।

सर्वज्ञता विदधती तव दुर्लभं मां
सज्जस्व मा जननि भूरपदे तु निःस्वा ॥ ११

*என்னை விட கதியற்றவன் கிடையாது. கதியற்றவன் உனது உடமை. சம்புவின் தயையே! பாபத்தால் வஞ்சகியான என்னிடமுள்ள எல்லாமறிந்தவன் என்ற இறுமாப்பு, உனக்கு என்னைக் கிட்டாதவளுக்கியிருக்கிறது. என்னை இணைத்துக் கொள். தாயே! நீ சொத்து எதுவுமற்றவளாகி விடாதே.*

*எல்லாமறிந்தவன் என்று இறுமாப்பு பாப எண்ணத்தால் வருவது. அது நாம ஜபம் செய்யத்தடையாகும். தெய்வ கருணையால் மட்டுமே நாமஜபத்தில் ஈடுபாடு வரும். (11)*

स्वाधीनितेन्दुमकुटाऽसि समर्थितोप-
मन्युप्रभृत्यभिमता जगति श्रुताऽसि ।
आयुष्मती जननि मन्तुभिरेव चासि
हा हन्त मां न करुणे कथमभ्युपैषि ॥ १२

*கருணையே! பிறையணிந்தவரைத் தன் வசப்படுத்திக் கொண்டாய். உபமன்யு முதலியவர்களை ஆற்றல் மிக்கவராக்கி உலகில் புகழ்பெற்றுள்ளாய். தாயே! எங்கள் குறைகள் காரணமாக நீண்ட ஆயுள் பெற்றுள்ளாய். ஏன் என்னிடம் வராதிருக்கிறாய். (12)*

शम्भो त्वमेव शरणं मम चन्द्रचूडे-
त्याद्या गिरस्तदुचितस्थितिहानितो नः ।
सत्येतरा अपि विभुर्भजनाय यद्यत्
गृह्णाति तद्धि करुणे चरितं भवत्याः ॥ १३

*கருணையே! "சந்திரசூடனே!சம்புவே! நீரே எனக்குப்புகலிடம்" என்பன முதலான மொழிகள் அதற்குரிய நிலை பெறாததால் பொய்யாகிவிடுகின்றன. ஆண்டவன் தன்னை வழிபடுவதற்கென எடுத்த தோற்றங்கள் அனைத்தும் உனது வரலாறு ஆகும்.*

*(சிவ என்ற நாமத்தைக் கொண்டு கூப்பிடத்தொடங்கியதும் கருணையால் பாபம் நீங்கி நன்மை விளைந்துவிடுவதால் சரணமடையும் வரையுள்ள செயல்கள் தேவையற்று விடுகின்றன. ஈசன் உலகைக் காக்கிற பணிக்காக எடுக்கிற தோற்றங்கள் அனைத்தும் கருணையின் விளைவானவையே.) (13)*

**यदेशः कुप्येन्मे दुरितविसरैर्दैन्यधुरया**
**तदा मे हूताविर्भवतु भवती तस्य च पुरः ।**
**मदीयांहःसंहत्यपलपनरंहः प्रथयति**
**त्वदाविर्भावेऽसावलमिह दये किं कलयितुम् ।। १४**

*தயையே! எனது அடாத செயல்களின் குவியலால் ஈசன் என்னிடம் கோபித்துக் கொள்வார். நான் ஏங்கி உன்னை அழைப்பேன். உடன் நீ அவர் முன் தோன்றுவாய். என்னுடைய பாபச் செயல்களை நீ மறுத்துப் பேசுகிற வேகமே, ''நீ வெளிப்படுவதற்கு இது போதுமானது'' என்பதை பிரகடனப்படுத்துகிறது. விளக்க வேறு என்ன தேவை? (14)*

**महेशे सङ्क्रुद्धे मदघविदि मह्यं श्रितजन-**
**श्रमाक्षन्त्री देवि त्वमयि सहसाऽऽविर्भव दये ।**
**मदीयांहस्संहत्यपलपन रंहः प्रथयति**
**त्वदाविर्भावेऽसावलमिह दये किं कलयितुम् ।। १५**

*தேவி! தயையே! எனது அடாத செயல்களையறிந்து ஈசன் என்னிடம் கோபித்துக் கொண்டுள்ளார். தன்னை அண்டியவனின் துயரைப் பொறுக்காத நீ உடன் அவர் முன் தோன்றுவாய். என்னுடைய பாபச் செயல்களை நீ மறுத்துப் பேசுகிற வேகமே, ''நீ வெளிப்படுவதற்கு இது போதுமானது'' என்பதை பிரகடனப்படுத்துகிறது. விளக்க வேறு என்ன தேவை?*

*14-15 சுலோகங்களின் பொருள் ஒன்றே, சுலோகங்களின் முன் பாதி சொல்லளவில் வேறுபட்டாலும் பொருள் ஒன்றே. (15)*

त्वया भाव्यं मातर्मयि शशिकलोत्तंसकरुणे
प्रणम्य त्वां याचे कति कति भवत्या न हि भृताः।
जगत्येको वर्ते कचिदपि गतिं काश्चिदपि न-
न्वपश्यन्नैवेदं सदृशमगतीनां तव गतेः ॥ १६

*தாயே! பிறை சூடியின் கருணையே! நீ என்னிடத்தில் இருக்க வேண்டும். வணங்கி உன்னை வேண்டுகிறேன். எத்தனையோ மனிதர்கள் உன்னால் தாங்கப்பட்டார்களல்லவா? உலகில் நான் ஒருவன் மட்டும் வேறெங்கிலும் கதியைக் காணாது உள்ளேன். அகதிகளுக்குப் புகலிடமாக உள்ள உனக்கு இது தகாதது. (16)*

तवाध्वन्या धन्यास्तव हि भवनादन्तकरिपोः
यदेष्वेकेनैनं शिरसि धनुषा घातमदयम्।
तथान्येन ग्राव्णां किरणमपरेणासिलतया
दयेऽनैषीन्मूर्धप्रविदळनमप्यम्ब भवती ॥ १७

*தயையே! அன்னையே! உன் வழிபட்டவர் பாக்யசாலிகள். நீ கூடஇருப்பதால், ஒருவரால் யமனின் எதிரியான சிவனது தலையில் வில்லாலடியையும் மற்றொருவரால் கற்கள் வீசுதலையும் வேறொருவனால் கத்தியால் தலையைப் பிளத்தலையும் சிவன் அடைந்தார்.*

*சிவனது தயை சிவனை விடச்சக்திமிக்கது. யமனை அடித்து விரட்டிய சிவன், அர்ஜுனன் சாக்கிய நாயனார் முதலானோரின் தாக்குதலைப் பொறுத்துக் கொண்டார். (17)*

प्रियोऽर्थोऽयं शम्भोः प्रसदनविधेयाधिगम इ-
त्यथ द्वेष्योऽयं तत्प्रसदनविधेयक्षतिरिति।
परोऽयं तत्रायोदय इति च तद्धीकृदखिलं
न मे तद्धीर्मैवं मयि विमुखता ते शिवदये ॥ १८

*சிவனின் தயையே! சிவனது அருள் பெறச் செய்கிற முறையை அறிவது விருப்பத்திற்குகந்தது. அவரது அருள்*

பெறுவதற்கான முறையில் வழுவல் வெறுப்பிற்குரியது. அதில் மங்களமான முறை நேர்வது சிறந்தது. எல்லாமே அவரைப்பற்றிய எண்ணத்தை உண்டாக்குவதே. எனக்கு அவரைப்பற்றிய எண்ணமே எழவில்லை. ஏன் உனக்கு என்னிடம் இந்தப்பராமுகம்? (18)

क्षिपन् कामिन्यादिष्वनवधि मिथोवैशसधुरा-
दुरापेष्वेष्वक्षप्रकरमधिबालेयवदनम् ।
मधुस्यन्दिद्राक्षाफलकुलमिवायुर्वितथयन्
कियत्कालं सीदान्ययि मयि कदा स्याः शिवदये ।। १९

சிவதயையே!ஒருவருக்கொருவர் சண்டையிட்டு அழித்தாலும் கிட்டாத ஆசை நாயகி முதலானவரிடம் கழுதை போன்று முகம் காட்டி கண் முதலியவற்றைச் செலுத்துபவனுகி, தேன் கசியும் திராக்ஷப்பழக் கொத்து போன்ற ஆயுளை வீணடித்து எவ்வளவு நாள் வாழ்வேன்? நீ என்னிடம் எப்போது தோன்றுவாய்? (19)

कदा गौरीनेत्राञ्चलसमुदितानङ्गचकितान्
कटाक्षांस्तांस्तच्च स्मितमधरबिम्बे कृतपदम् ।
मुखं शम्भोस्तच्चोन्मृदितशरदिन्दुप्रियसखं
पुरस्तादादध्याः पुरभिदनुकम्पे जननि मे ।। २०

புரஹரனின் தயையே!அன்னையே! கௌரியின் கடைக்கண் பார்வையில் தோன்றிய காமத்தைக் கண்டு பயப்படுகிற சிவனது கடைக்கண் பார்வையையும், கசக்கிப் பிழிந்த சரத்காலத்துச் சந்திரனின் அன்புத் தோழன் போன்ற சிவனின் திருமுகத்தையும் என் முன் எப்போது வைப்பாய்?

சந்திர பிம்பத்தைப்பிழிய அமுதம் கொட்டும். சிவனது முகத்தில் அமுதம் தளும்புகிறது. (20)

असावर्थः श्रेयानयमितर इत्यच्छमतिदाः
प्रजानां शर्मासावसुखविरहे च प्रतिभुवः ।

विभान्ति श्वासा यद्विधुशकलमौळेर्भगवतः
तदेतत् कल्याण्यास्तव विलसितं किं न करुणे ।। २१

கருணையே!இது சிறந்த பொருள் ,இது சிறந்ததல்ல என்ற தெளிந்த அறிவைத் தருபவையும்,மக்களுக்கு நலன் பெறவும் துன்பம் தவிர்க்கவும் பிணை நிற்பவையும், இறைவன் பிறை சூடியின் பெருமூச்சாக (வேதமாக) வெளியாகின்றன. இது கல்யாணியான உனது விளையாட்டல்லவா? (21)

स्मराराते शम्भो पुरहर शिवोमाधव हरे
मुरारे गोविन्दामरवर मुकुन्देत्यविरतैः।
शिवाख्यापीयूषोर्मिभिरयि दये मां कबळितं
कदा वा कुर्वीरंस्तव गुणझरा मज्जितहराः ।। २२

தயையே! உனது குணங்களாகிய நீரருவிகள் சிவனை மூழ்கடிக்கின்றன.''காமனின் எதிரியே! மங்களத்தின் தோற்றுவாயே (சம்புவே!) புரஹர!சிவ! உமையின் நாதரே!ஹரியே!முராரியே! (முரனின் எதிரியே)கோவிந்தா! தேவர்களில் சிறந்தவரே!முகுந்தா''என்றவாறு மங்களமான நாமங்களாகிய அமுத வெள்ளத்தில் மூழ்கடிக்கப்பட்டவனாக அவை என்று என்னைச் செய்யும்?

சிவன் விஷ்ணு என்ற பேத உணர்வின்றி அவர்களின் நாமங்களை வாயாரச் சொல்வதே அமுத வெள்ளத்தில் ஆழ்ந்து கிடப்பதற்கொப்பாகும். அதே வெள்ளத்தில் நம்மருகே சிவனும் விஷ்ணுவும் நிற்பர். (22)

समुन्मीलज्ज्वालज्वलनकलितस्यान्तिकगतो
यथा तद्वद्दाराद्यभिरतिहतस्यान्तिकगतः।
असावीष्टे नोज्जीवितुमहह का तस्य तु कथा
किमन्यज्जीवातुस्त्वमसि जगतोऽस्येशकरुणे ।। २३

ஈசனின் கருணையே!கொழுந்து விட்டெரிகிற பொருளின் அருகில் உள்ளவன் போல்,மனைவி மக்கள் முதலானோரிடம்

பாசம் வைத்தவனின் அருகில் உள்ளவன் வாழ முடியாது எனில் பாசம் வைத்தவனின் நிலை என்ன? இந்த உலகிற்கு நீ ஒருவளே உயிரூட்டுபவளாக உள்ளாய். (23)

मयीशानं वामाशयमतितरां मज्जयतु ते
कदा पूरः स्वैरं कबलिततटो देवि करुणे।
तथा द्रागुत्कर्षन् विघटितविघातव्यतिकरः
कदेशप्रेमाख्ये महति च पदे स्थापयतु माम्॥ २४

தேவி! கருணையே! தன்னிச்சையாகக் கரை புரண்டு பெருகும் உன் வெள்ளம், என்னிடம் அன்பெண்ணமற்ற ஈசனை முழுவதும் மூழ்கடிப்பது எப்போது? அவ்வாறே என்னை மேல் தூக்கித் தடைக்கூட்டத்தை அகற்றி ஈசனின் அன்பு என்ற மேலான நிலையில் எப்போது வைக்கும்? (24)

प्रियो द्वेष्योऽप्यर्थस्तुदति मम बुद्धिं तदितरे
ऽप्यमी स्वैरं निघ्नन्त्यहह गिरिशालिङ्गनसुखे।
प्रसक्तिः का वा स्याद् भगवति नमस्तेऽर्हसि न मां
इयद्दूरीकर्तुं गिरिशकरुणेऽनन्यशरणम्॥ २५

பகவதி! சிவனின் தயையே! விருப்புக்குரியதும் வெறுப்பிற்குரியதுமான பொருள் எனது புத்தியைத் தூண்டுகிறது. மற்றதும் தம் தம் இஷ்டப்படி என்னை வதைக்கின்றன. அந்நிலையில் சிவனது ஆலிங்கனஸுகத்திற்கு வாய்ப்பு ஏது? உனக்கு வணக்கம். வேறு புகலிடமில்லாத என்னை இவ்வளவு தூரத்தில் வைப்பது தகாது.

பகவதி- முழுப்பேராளுமை, வீரம், புகழ், சீர், ஆத்ம உணவர்வு, உலக அறிவு என்று ஆறும் பகம் எனப்படும். இவை பெருமளவில் நிறைந்தவள் பகவதீ. (25)

दये शम्भोस्तद्भक्त्यमृतलहरीं तावकझराः
कदेहोपानेष्यन्त्यलमपनयन्तः प्रतिहतीः।

तया चात्मा मेऽसावतिशिशिरितो हास्यति कदा
मनोजाद्युन्मीलद्गहनदहनोत्थं परिभवम् ।। २६

*சிவனின் தயையே! அவரிடம் வைக்கிற பக்தி எனும் அமுதப்பெருக்கை உன் (தயையின்)வெள்ளம், வழியிலுள்ள தடைகளை அகற்றி என்னிடம் எப்போது கொண்டு சேர்க்கும்? அதனால் மிகவும் குளிர்ந்த என் ஆத்மா மன்மத தாபம் முதலிய கொடுந்தீயின் தாக்கத்தை எப்போது விலக்கிக் கொள்ளும்? (26)*

महेशस्य प्रज्ञासमुचितविधानक्षमतया
ममाप्येनोराशेरपि समवमर्शे सति न मे ।
समाश्वासस्याशा निजलहरिभिस्तन्ननु विभुं
वितन्वाना मग्नं विहरसि यदि त्वं न करुणे ।। २७

*கருணையே! மகேசன் தன் பேரறிவிற்கேற்றவாறு நடந்து கொள்ள இயலும் என்பதால் எனது பாபக்குவியலைச் சீர்தூக்கிப் பார்க்க நேரும் போது,பெருமானை உன் வெள்ளத்தில் மூழ்கடித்து நீ விளையாடாவிடில் நிம்மதியை நான் எதிர் பார்க்க இயலாது. (27)*

दशायामेतस्यामपि शिवदये ते विमुखता
मयीत्थं चेन्मग्नो महति विपदब्धावहमसौ ।
अकीर्त्यब्धौ मग्ना त्वमपि मम यत्किञ्चन भव-
त्वपि स्वोद्धारे वा भवतु भवती प्रोद्यमवती ।। २८

*சிவதயையே!இந்நிலையிலும் நீ என்னிடம் பராமுகமாயிருந்தால் நான் பெரும் துயரக் கடலில் மூழ்கியவனாவேன். நீ கெட்ட பெயர் என்ற கடலில் மூழ்கிவிடுவாய். எனக்கு எதுவேனும் நேரட்டும்!நீ உன்னை ஆபத்திலிருந்து விடுவித்துக் கொள்ள முற்படுவாய். (28)*

कमलभवपदं वा कैटभारिश्रियं वा
मदनभिदनुकम्पे मङ्क्षु दातुं क्षमा त्वम् ।

किमु न दिशसि वीतक्लेशिकामासिकां मे
कचन शिवशिवेत्याख्यानधारैकतानाम् ।। २९

*மன்மதனின் எதிரியின் தயையே! பிரும்மாவின் நிலையையோ விஷ்ணுவின் சிறப்பையோ எனக்கு நீ எளிதில் தரக்கூடும். எங்காவது சிவ சிவ என்று கூறுவதிலேயே தனித்து ஈடுபட்டு உடல் வருத்தமில்லாமல் அமர்வதைத் தரமாட்டாயா? (29)*

हितमहितमवैतुं वर्तितुश्चानुरूपं
न पुनरलमबोधानीशताभ्यां हतोऽहम् ।
प्रमथपतिदयेऽये पालयेस्त्वं कथं मां
कथमिव न च ते स्यात् ख्यातिभङ्गो न जाने ।। ३०

*பிரமத கணங்களின் நாதனான சிவனின் தயையே! ஹிதமானதையும் அஹிதமானதையும் அறிவதற்கும் அதற்கேற்ப நடப்பதற்கும் இயலாமல் அறிவின்மையும் இயலாமையும் காரணமாக நான் அழிகிறேன். என்னை எவ்வாறு காப்பாய்? உனது புகழுக்குக் குறைவு எவ்வாறு ஏற்படாதிருக்கும்? நான் அறியேன். (30)*

तव भवति निवासस्तारकाधीशमौलिः
स च मदघभवोग्रामर्षपर्याकुलात्मा ।
समव तमनुकम्पे त्वद्रसौघावसेकैः
मम तदलमयि त्वं नावने मेऽर्थनीया ।। ३१

*தயையே! உன் இருப்பிடமோ நக்ஷத்திரங்களின் தலைவனைத் தலையில் கொண்ட சிவன். அவர் என் பாபச் செயலால் கடும் கோபம் கொண்டதால் மனம் குழம்புகிறார். அவரை உன் நீர்ப் பொழிதலால் காப்பாற்றுவாய். அது எனக்குப் போதும். என்னைக் காப்பாற்ற உன்னைத்தனித்து வேண்டுவது அவசியமில்லை. (31)*

अभिलपतु शिवाख्यामाहरेत्यादिदम्भात्
अपि सकृदयमेतस्याखिलार्तिं हरिष्ये।
इति सततविनिद्रामिन्दुमौळेर्दये य-
द्यहमिव न जडः कोऽनन्यधीर्नाश्रयेत् त्वाम्॥ ३२

*சந்திரனைச் சிரஸில் கொண்டவரின் தயையே! "திமிரால் ஆஹர (கொண்டுவா) என்பது போன்ற (வேறு பொருளிலுள்ள) சொல்லையாவது சொல்லட்டும். அப்படிச் சொன்னால் இவனது எல்லாத்துயரங்களையும் ஒரே தடவையில் அகற்றுவேன்" என்று எப்போதும் விழித்திருக்கிற உன்னை வேறு சிந்தனையின்றி என்னைப் போன்ற ஜடன் எவன் தான் அணுகமாட்டான்?*

*ஆஹர-கொண்டுவா, விஹர-விளையாடு, ப்ரஹர-அடிப்பாய் என்று வேறு பொருளுள்ள பல சொற்களில் ஹர என சிவனைக் கூப்பிடுகிற இரு எழுத்துக்கள் இருப்பதால், அவற்றைச் சொன்னால் நாமம் காப்பாற்றும். பக்தி இல்லாவிடிலும் திமிர் போன்ற கெட்ட எண்ணத்துடன் சொன்னாலும் நாமத்திற்குள்ள சக்தி குறைவதில்லை. (32)*

चरति समनुरुन्धन् प्रेरणाधोरणीं ते-
ऽनिलगतिमिव तूलो ह्येष दोषं कुतोऽस्मिन्।
गणयसि परतन्त्रे मन्नियोगादव द्राग्-
अमुमिति करुणे तं त्वादिशेशं मदर्थे॥ ३३

*கருணையே! "உனது தூண்டுதலின் வழியில் தொடர்ந்து காற்றின் வழியே பஞ்சு போல் இவன் செல்கிறான். தன் வழியே செல்லச் சுதந்திரமில்லாத இவனிடத்தில் குறைகளை ஏன் கணக்கிடுகிறீர்.? என் ஆணையின் பேரில் உடன் இவனைக்காப்பாற்றுவீர்" என சிவனிடம் என் பொருட்டு உத்திரவிடுவாய். (33)*

मदघविततिरन्तः सत्वमाविश्य शम्भोः
प्रविघटयति योगं तस्य ते चानुकम्पे।

तदपि निरुपमा मद्दैन्यसम्पत्तिरेषा
प्रतिभवति पुनर्वां निर्भराश्लेषसन्धौ ।। ३४

*கருணையே! என் பாப வரிசை சிவனது உள்ளத்தில் நுழைந்து அவருக்கும் உனக்கும் உள்ள இணைப்பைத் தளரச் செய்கிறது. அப்போது என்னிடம் உள்ள இரக்கத்துக்குரிய நிலையின் நிறைவு (ஏழ்மை) உங்களிருவரின் நெருக்கமிக்க அணைப்பிற்குத் துணை நிற்கிறது. (நீங்கள் இருவரும் என்னிடம் அன்பு காட்டுகிறீர்கள். இடையே என்பாபம் உமது நெருக்கமிக்க அணைப்பைத் தடுக்கிறது. என்பாபத்தை நீக்குவீர். நீங்கள் இணையலாம்.) (34)*

दळयतु दिगिभौघो दन्तकाण्डैः कठोरैः
दहतु दहनमाला दारयत्वस्त्रजालम् ।
अपि धुरि परिवृण्वन्त्वब्धयो नैनमार्तिः
स्पृशति शिवदये यः स्पृश्यते तेऽनिलेन ।। ३५

*சிவனின் தயையே! திக்கஜங்கள் தன் நீண்ட கொடூரமான தந்தங்களால் பிளக்கட்டும். தீ வரிசை எரிக்கட்டும். அஸ்திர வகை பிளக்கட்டும். கடல்கள் சூழ்ந்து கொள்ளட்டும். உன் காற்று எவன் மீதுபட்டதோ அவனை எந்தத் துயரமும் தீண்டாது. (35)*

अधिजटमसुरारात्यापगा क्वापि लीना
मनसिजविनिहन्तुर्मज्जितोऽयं झरैस्ते ।
कबळयति निमङ्क्तुस्सा श्रमं त्वं त्वमङ्क्तुः
कथमिव न दये ते स्वर्धुनीतो विशेषः ।। ३६

*தயையே! மன்மதனை அழித்தவரின் சடையில் கங்கை எங்கோ மறைந்தது. உன் வெள்ளத்தால் அவர் மூழ்கடிக்கப்பட்டார். கங்கை தன்னில் மூழ்கியவனின் களைப்பைப் போக்குகிறாள். நீயோ மூழ்காதவனது களைப்பைப் போக்குகிறாய். கங்கையை விட உன் சிறப்பு எதனால்? (36)*

प्रभवति न हि दातुं भद्रमीशो विना त्वां
अलमपि तददातुं नाम्ब सत्यां भवत्याम्।
वितरति च शुचं त्वद्विप्रकर्षे सतीशः
कथयितुमनुकम्पे कस्तवालं प्रभावम्॥ ३७

*தாயே! கருணையே! ஈசன் நீயின்றி நல்லதை வழங்க இயலாதவர். நீ இருந்தால் நல்லதை அவரால் வழங்காதிருக்கவும் முடியாது. உன்னை விட்டுப்பிரிந்த நிலையில் அவர் துயரம் தருகிறார். உனது பெருமையைச் சொல்ல எவரால் முடியும்? (37)*

मदनशतमनोज्ञं मञ्जुहासाननाब्जं
शरदुडुपतिगौरं साम्बमर्धेन्दुचूडम्।
द्रविणमयि मदीयं दृक्पथे धत्स्व मे तत्
तव खलु वशवर्तीत्यर्थयेऽहं दये त्वाम्॥ ३८

*தயையே! நூறு மன்மதர்களைப் போல் அழகரும், அழகிய புன்சிரிப்புள்ளவரும். சரத் காலத்துச் சந்திரனைப் போன்று வெண்ணிறம் கொண்டவரும். பாதி சந்திரனைச் சூடியவருமான அம்மையுடன் கூடிய சிவனை என் பார்வையில் வைப்பாய். அது தான் என் செல்வம். நான் உன் வசத்திலுள்ளவன். இதனைத்தான் உன்னிடம் வேண்டுகிறேன். (38)*

त्वमसि मदवनार्थं नार्थनीया दये यः
तव भवति निवासो दुस्सहं तस्य शम्भोः।
प्रशमय तममर्षोष्मातिरेकं ममागः-
प्रभवमयि भवत्या निर्झरैस्तन्ममालम्॥ ३९

*தயையே! என்னைக் காப்பாற்ற உன்னிடம் வேண்டுதல் அவசியமில்லை. இது உன் வீடு. என் குறைகளால் சிவனுக்கு என் மீது ஏற்பட்டுள்ள பொறுக்க முடியாத அதிகக் கோபத்தை உன் பெருக்கால் தணிப்பாய். அது எனக்குப் போதுமானது (39)*

पशुरिव परिभूतीरश्नुवानोऽपि शश्वत्
विषयविसरमेतं हातुमप्यप्रगल्भः ।
विष इव विमुखस्ते वेश्मनीशे तथाऽहं
कथमिव करुणेऽङ्गीकारपात्रं तवाहम् ।। ४०

*கருணையே! ஆடு மாடுபோல் எங்கும் அவமதிப்பையே அடிக்கடி பெற்று, பொருள் பற்றை விட இயலாதவனை நான் உன் இருப்பிடமான சிவனிடம் விஷத்திடம் போன்று வெறுப்பைக் கொண்டுள்ளேன். உன்னால் எப்படி ஏற்கப்படுவேன்?(40)*

अवितरि पुरहन्तर्यस्य सर्वस्य जन्तोः
मम गतिरबलाद्या नन्वमी सोऽहमेषाम् ।
इति कुमतिहतस्तं चिन्तये हन्त नेशं
स तु कथमनुकम्पे स्यान्मयि त्वद्विधेयः ।। ४१

*பரிவே! சிவன் அனைத்து ஜீவர்களையும் காப்பவன். ஆனாலும் எனக்கு மனைவி முதலானோரே கதி. அவர்களுக்கு நானே கதி. இந்த கெட்ட உணர்வால் அந்த ஈசனை நான் நினைப்பதில்லை. சிவன் எவ்வாறு என்னிடம் உன் சொல் கேட்டு (தயாளுவாக) நடப்பான்? (41)*

विसृमरदहनार्चिर्विप्लुतोऽह्नाय शीतं
जलमिव करुणे सन्त्यक्तसर्वः कदाऽहम् ।
तव पदमुडुराडुत्तंसमानन्दसिन्धुं
श्रमहरमवगाहे दत्तहस्तो भवत्या ।। ४२

*கருணையே! பரவி வருகிற தீக்கொழுந்தால் சூழப்பட்டவன் உடன் சில்லிட்ட நீரை நாடுவது போல், எல்லாவற்றிலும் பற்றற்றவனாக, சந்திரனைச் சூடியவரும் தாபத்தை நீக்குபவரும் உன் இருப்பிடமுமான சிவனாகிய*

ஆனந்தக்கடலில் உன் கைகளைப் பிடித்துக் கொண்டு மூழ்கி எழுவேன். (42)

मकुटगविधुनि त्वन्मन्दिरे स्थित्यलाभः
स्थितिरियमितरव्यासङ्गदावानले च।
फलमहह दयेऽदः कस्य पापस्य वा द्राक्
तदिदमुदसनीयं दौःस्थ्यमम्ब त्वया मे॥ ४३

தயையே! அம்மையே! மகுடத்தில் சந்திரனைக் கொண்ட உன் இருப்பிடத்தில் நிலை பெறாமையும் வெளிப்பொருள் நாட்டமாகிற காட்டுத்தீயில் இருப்பும் எந்த என் பாபத்தின் பின் விளைவு? இந்த என் கெட்ட நிலையை நீ தான் அகற்றவேண்டும். (43)

तनुकरणकदम्बं दक्षमेवं मनस्त्वद्-
ग्रहचणमनुकम्पे नन्वदाः शङ्कराख्ये।
प्रदिशसि मम किं न त्वन्निवेशे प्रवेशं
प्रददति भुवने किं प्राणशून्याय कन्याम्॥ ४४

சங்கரன் (மங்களம் தருபவர்) எனப்பெயர் கொண்டவரின் தயையே! உன்னை ஏற்பதில் திறன் படைத்த உடல், இந்திரியங்கள், ஆற்றல் மிக்க மனம் என்ற உபகரணங்களைத் தந்தாய். ஆனால் நீ இருக்குமிடத்தில் (சிவனிடம்) நுழைய ஏன் அனுமதி தரவில்லை? உலகில் உயிரில்லாதவனுக்குக் கன்னிகையைக் கொடுப்பார்களா? (44)

सगरळमधिकण्ठं सानलं फालदेशो
सदनमहिपरीतं सर्वतस्तेऽनुकम्पे।
तदिदमुपगता ये तानिमांस्तन्वती त्वं
विहरसि जितमृत्यून् वीक्षितानप्यमीभिः॥ ४५

தயையே! விஷத்துடன் கூடிய கழுத்து, நெருப்புடன் கூடிய நெற்றி, எங்கும் பாம்புகள். இது உனது இருப்பிடம், இதனை

அணுகியவர்களை இவர்கள் (விஷம்முதலானவை) பார்த்துக் கொண்டிருக்கும் போதே மரணத்தைக் கடக்கச் செய்து நீ விளையாடுகிறுய் (45)

न वितर पदमैन्द्रं न श्रियं वैधर्सी वा
श्रितभुजगकुलेऽपि क्ष्वेळखेलद्गळेऽपि ।
मम घटय दये त्वन्मन्दिरे संप्रवेशं
विगलितविविधव्यासङ्गमेतन्ममालम् ।। ४६

தயையே! இந்திரனின் பதவியையோ பிரும்மாவின் சிறப்பையோ நீ தரவேண்டாம். பாம்புகளால் சூழப்பட்ட ாலும் கழுத்தில் விஷத்தை விளையாட விட்டிருந்தாலும் உன் இருப்பிடத்தில் நான் நுழைய அனுமதி கிடைக்கச் செய்வாய். பலவித வெளிப்பொருள் நாட்டத்தை நழுவச் செய்கிற இது எனக்குப் போதுமானது. (46)

तव समुदयरोधं तत्परोऽसौ विधत्ते
स्वकचरितमहिम्ना स्वात्मघाती तमेनम् ।
भगवति ननु भर्तुं भ्राम्यसीशानुकम्पे
तव परहितनिष्ठा तादृशी स्तौतु कस्त्वाम् ।। ४७

பகவதி! ஈசனின் தயையே! நீ வெளிப்படுவதை இவன் முழுமூச்சுடன் தடுக்கிறுன். தன் நடைமுறைச் சிறப்பால் தன்னையே மாய்த்துக் கொள்கிறுன். இவனைத் தாங்க நீ அலைகிறுய்: பிறருக்கு இதமானதைச் செய்வதில் உனக்கு அவ்வளவு ஆர்வம். உன்னை எவனுல் துதிக்க இயலும்? (47)

कियदिव विमुखत्वं चित्सुखात्मन्युमेशे
रतिरपि कियती मेऽन्यत्र धिङ्मां ममास्य ।
असदपि न दये त्वं हास्यसि त्राणमद्धा
तव क इह निरोद्धा दासयन्त्यास्तमीशम् ।। ४८

*தயையே! பேரறிவும் பேரானந்தமுமே வடிவான உமையின் நாதரிடம் எவ்வளவு வெறுப்பு? வேறு பொருளில் எவ்வளவு ஈடுபாடு? நான் ஒன்றுக்கும் உதவாதவன். எனக்குப் பாதுகாப்பைத் தருவதை நீ நிறுத்தவில்லை. அந்த ஈசனையே அடிமையாக்கிய உன்னை எவனால் தடுக்க முடியும்? (48)*

अश्रूद्गमगद्गदवागविरळपुळकाढ्यया भवे भक्त्या।
कति न रमन्ते मां शिवकरुणे कुरु तदनुगं ममैतदलम्॥ ४९

*சிவனின் கருணையே! கண்ணீர் மல்க, வாய் தழுதழுக்க, புல்லரிப்பு இடைவிடாதிருக்க வெளிப்படுகிற சிவ பக்தியில் எத்தனையோ பேர்கள் ஈடுபாட்டுடன் இல்லையா? என்னையும் அவர்களைப் பின் தொடரச் செய்வாய். எனக்கு அது போதும். (49)*

करुणे तरुणेन्दुधरस्त्वद्वशवर्तीति तव निशम्य यशः।
तस्यावलम्बमीहे तद्घटने प्रतिभुवा त्वया भाव्यम्॥ ५०

*கருணையே! இளஞ்சந்திரனைத் தாங்குபவர் உன் வசத்தில் உள்ளார் என்று உன் பெருமையைக் கேட்டபின் அவரது பிடிப்பை விரும்பி நிற்கிறேன். அதனைப் பெறுவதில் நீ தான் பிணையாக நிற்கவேண்டும். (50)*

जनिमृतिदहनार्चिश्शान्तिदिव्यामृतौघे
जननि शशिविभूषे त्वद्गृहे सम्प्रवेशम्।
विघटयदनुकम्पे विघ्नबृन्दं विभिन्दन्
मयि पततु कदा त्वन्निर्झरः श्रान्तिहारी॥ ५१

*தாயே! கருணையே! உன் இருப்பிடம் சந்திரனைச் சூடியது. பிறப்பும், இறப்புமாகிய தீயை அணைத்துக் குளிர்விக்கிற தெய்வத் தன்மை மிக்க அமுத வெள்ளம். அதில் நுழைவதைத் தடுக்கிற இடையூறுக் கூட்டத்தைப் பிளந்து கொண்டு, களைப்பை அகற்றுகிற உன் வெள்ளப்பெருக்கு என் மீது எப்போது விழும்? (51)*

त्वमभिज्ञशिखामणौ महेशे भजदत्यङ्कुशमन्तुसन्ततीनाम्।
यदपह्नुतिपण्डिता दये तन्निरवद्यं तव वेद्मि साहसिक्यम्॥ ५२

*தயையே! அறிவாளிகளில் தலை சிறந்த மஹேசனிடம் வழிபடுபவரின் கட்டுக்கடங்காத பாபக் குவியலை மறைப்பதில் தேர்ந்தவள் நீ. உன் ஸாஹஸச் செயல் குறை சொல்லமுடியாதது. (52)*

करुणे कथये किमाज्ञया ते
ह्यनुधावत्यहह स्मरन्ति ये तान्।
मकुटव्यतिषङ्गिचन्द्ररेखं
मदनध्वंसि मदीयभागधेयम्॥ ५३

*கருணையே! சிரஸில் சந்திரனது கீற்றைத் தாங்கியதும் மன்மதனை அழித்ததும் எனது பாக்கியமுமான சிவன் தன்னை நினைப்பவர்களை உன் ஆணையால் பின் தொடர்ந்து ஓடுகிறார் என்று நான் சொல்லட்டுமா? (53)*

हरिणार्भकमानने तरक्षोरिव कान्तादिमुखे भयानके माम्।
विनिपात्य शिवो विलोकमानः करुणे किन्न कदर्थ्यते भवत्या॥ ५४

*புலியின் வாயில் மான்குட்டியைப் போல், பயம் தருகிற அழகிகளின் வாயில் என்னை வீழ்த்திச் சிவன் பார்த்துக் கொண்டிருக்கிறார். கருணையே! நீ ஏன் குறை கூறிக் கண்டிக்கவில்லை? (54)*

करुणे तरुणेन्दुधारिणो मद्धरणे शंस तवाम्ब को विळम्बः।
गणितोऽयमहं किलाखिलाङ्गिष्वयि किं तेषु न
मामलेखयस्त्वम्॥ ५५

*இளஞ்சந்திரனைச் சூடியவரின் கருணையே! என்னைத் தாங்குவதில் உனக்கு ஏன் தாமதம்? உன்னைச் சார்ந்தவர்களில் ஒருவனாக இந்த நான் எண்ணப்படவில்லையா? நீ ஏன் என்னை அவர்களிடையே குறிப்பிடவில்லை? (55)*

अघवानिति मय्यसङ्गृहीते
सकलाघापहृजातुनामवादः ।
अपि दीनजनावितेति कीर्त्योः
अवसादं करुणेऽभिधेहि शम्भोः ।। ५६

*கருணையே! பாபி என்பதால் என்னைச் சேர்க்கவில்லையெனில், எல்லோரது தவறுகளையும் போக்குபவர் என்றும், எளிய மக்களைக் காப்பவர் என்றும் புகழ் இனி மங்கும் எனச் சிவனிடம் கூறுவாய் (56)*

मम शम्भुदये त्वदर्हतायां अहमन्यन्न विलोकयाम्युपायम् ।
मम चोदितयार्तिभिस्त्वयैव श्रयणीया तदुपायता ब्रुवे किम् ।। ५७

*சிவனின் தயையே! உனக்கு நான் ஏற்றவன் என்ருக வேறு உபாயம் எனக்குத் தெரியவில்லை. என்ஞல் வேண்டப்பட்ட நீயே அந்த உபாயமாக ஆகவேண்டும். வேறு என்ன சொல்ல? (57)*

पुरभित्करुणे पुरन्दराद्यैः त्वमुपास्या सुलभा न नस्तथापि ।
प्रचकास्ति परातिदुर्लभत्वत्पददर्शी ननु दीनताऽऽश्रयो नः ।। ५८

*புரஹரரின் கருணையே! இந்திரன் முதலியவரால் வழிபடத்தக்கவள் நீ! ஆனுலும் எங்களுக்கு நீ எளிதில் கிட்டுபவளல்ல. பிறரால் எட்ட முடியாத உன் இருப்பிடத்தைக் காட்ட எம்மிடமுள்ள இரக்கத்திற்குரிய எளிமை தான் எங்களுக்குக் கதி. சாருமிடம். (58)*

भवतीशदये पयोदमाला भवतीव्रानलशान्तिदाश्रितेषु ।
तमसामवसादिकाः शिवेक्षातटितश्चित्रमचञ्चलाः प्रसूते ।। ५९

*ஈசனின் தயையே! தன் அடியார்களின் ஸம்ஸாரமாகிய பெருந்தீயை அணைக்கிற மேக வரிசையாகிய நீ, இருளைப் போக்கும் சிவ கடாட்சம் என்ற படபடக்காத மின்னல்களை வெளிப்படுத்துகிருய்? (59)*

करुणे शिवचन्द्रचन्द्रिकाऽसौ भवती सन्मणिसौधसंसदीव।
प्रसृताऽपि मयीह तुच्छकुड्ये तिमिरं लुम्पतु तावता क्षतिः का॥ ६०

*கருணையே! நல்ல ரத்தினமாளிகையின் முன்னங்கணத்தில் சிவனுகிய சந்திரனின் நில வொளியாகப் பரவியிருப்பவள் நீ எனது இந்த மதிக்கத்தகாத குடிசையின் இருளைப் போக்குவாய். அதனுல் உனக்கு குறை என்ன? (60)*

कुतुकपरवशैरुमाकटाक्षैः कुवलयभाजि नवोडुपावतंसे।
जननि तव झरे निमग्नमस्तज्वरभरमारचयेर्दये कदा माम्॥ ६१

*தாயே! தயையே! உலகைக் காண்கிற பேராவலால் பரவசப்பட்ட உமையின் கடைக்கண் பார்வையால் பூமியை அடைந்த புதுச் சந்திரனைச் சூடிய சிவனுன உன் பிரவாகத்தில் என்னை ஆழ்த்தித் தாபம் முழுதும் நீங்கியவனுக எப்போது ஆக்குவாய்? (61)*

बत सहविहरद्दरस्मितानां
परिचरणाधिकृतारविन्दभासाम्।
भगवति करुणे त्वयेरितानां पथि
किमसान्यहमीशवीक्षितानाम्॥ ६२

*தயையே! பகவதி! ஈசனின் கடைக்கண் பார்வையுடன் கூட இளம்புன்சிரிப்பு விளையாடுகிறது. தாமரையின் ஒளி அதற்குப் பணிவிடை செய்கிறது. அந்தக் கண்பார்வையை நீயே தூண்டுகிருய். அதன் வழியில் நான் இருக்கட்டுமா? சிவனின் கடாக்ஷம் என் மீது படுமா? (62)*

सर्वज्ञत्वादिगुणाः स्वात्मत्राणैकलम्पटा बहवः।
शर्वस्य शङ्कराख्यानिर्वहणं तद्दये त्वदायत्तम्॥ ६३

*சிவனது தயையே! எல்லாம் அறிந்த நிலை முதலிய பல சிறப்புகள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவே துடிக்கின்றன. எல்லாவற்றையும் சிதைப்பதையே (ஸம்ஹாரத்தையே) இயல்பாகக் கொண்ட சர்வனுக்கு (சிவனுக்கு) சங்கரன் (மங்களத்தைச் செய்பவர்) என்ற பெயரைப் பொருத்துவது*

உன்னைச் சார்ந்துள்ளது. (தயைமிக்கவனே சங்கரனாக முடியும்.) (63)

श्रीकण्ठाय क्ष्वेळं रोचितवत्या दये ननु भवत्या ।
मामकमन्तुकदम्बे केवलमम्बेह वद विलम्बः कः ॥ ६४

தயையே! நீ சிவனுக்கு விஷத்தை ருசிக்கத்தக்கதாக்கினாய். எனது பாபக்குவியலில் மட்டும் இந்தத் தாமதம் ஏன்? (64)

शिव इति तद्भक्तिरिति स्मृतिरस्य च सेति सार्तिहन्त्रीति ।
इयदवगमय्य शेषे विरतिरियं शिवदये न ते सदृशी ॥ ६५

சிவனின் தயையே! சிவனையும், அவரிடம் பக்தியையும், அவரது நினைவையும், நினைவு எல்லாப் பாபத்தையும் போக்கவல்லது என்பதையும் அறிமுகப்படுத்திய பின் இந்த செயலின்மை உனக்கு ஏற்றதல்ல.

என்னை ஏன் அவ்வழியில் கொண்டு செல்லவில்லை? (65)

अब्जयितुमच्युतयितुमपि शिवयितुमलमुमेशकरुणे त्वम् ।
अलमसि शिवरसिकानामक्षिपथे किन्न मां प्रवर्तयितुम् ॥ ६६

உமை ஈசனின் கருணையே! பிரும்மாவாக ஆக்கவும் விஷ்ணுவாக ஆக்கவும், சிவனாக ஆக்கவும், உன்னால் முடியும். என்னைச் சிவனடியார்களின் பார்வையில் படும் படி உன்னால் செய்ய முடியவில்லையா? (66)

विजयस्व सिद्ध्यतात्तव विधुशेखरविप्रलम्भनैपुण्यम् ।
मन्मन्तुभिरुन्मिषतु च मातः करुणे पिचण्डिलत्वं ते ॥ ६७

தாயே! கருணையே! நீ வெற்றி கொள்வாய்! சந்திரனைச் சூடிய வரை ஏமாற்றுவதில் உன் திறமை பயன் பெறட்டும். என் தவறுகளால் உனது பெருத்த வயிறு பகட்டுடன் தெரியட்டும். (என் தவறுகளை விழுங்கிவிடுவாய்.) (67)

करुणे यदि मन्मन्तून् कबळयसि न विप्रलब्धगिरिशा त्वम्।
का मम गतिस्तवापि च का गतिरागोभिरेव जीवन्त्याः ।।६८

கருணையே! நீ என் தவறுகளை விழுங்குவதால் சிவனை ஏமாற்றவில்லை எனில், எனக்கு ஏது போக்கு? என் தவறுகளைக் கொண்டே பிழைக்கின்ற உனக்கு ஏது போக்கு?

சிவனது தயையாயிருந்தும் என்னைத் தவறு செய்வதிலிருந்து தடுக்காமல், செய்த தவறுகளை விழுங்கி வெளிப்படாமல் செய்வதால் என்ன பயன்? (68)

करुणे त्वदध्वगानां कामाद्या ये द्विषस्तदुन्मथने।
गिरिशं त्वयेरयन्त्या कृतोऽस्य भीमोग्रनामसंसर्गः।। ६९

கருணையே! உன் வழி செல்பவர்களின் எதிரிகளான காமம் முதலியவர்களை அழிப்பதில் சிவனை நீ தூண்டுவதால் பீமன் உக்கிரன் என்ற பெயர்களின் தொடர்பு சிவனுக்கு நேர்கிறது.

சிவனுக்கு உக்கிரன், பீமன் (பயங்கரன்) என்ற பெயர் காமன் முதலியவரை அழித்ததால் நேர்ந்தது. (69)

शर्वं प्रति मन्मन्तुषु सर्वज्ञतया निवेद्यमानेषु।
आधूयताममुं दृढमालिङ्ग्य दये नयाशु परवशताम्।। ७०

தயையே! சிவன் எல்லாமறிந்தவர். அவரிடம் எனது தவறான செயல்களைப் பற்றித் தெரிவிக்கையில் இறுக அணைத்துக் குலுக்கிப் பரவச நிலைக்குக் கொணர்வாய். (70)

अहह गिरिशैकतानामभिलषितस्थितिमनासवति मयि ताम्।
आर्तिषु मज्जति वर्तितुमर्हसि न स्तब्धमेवमीशदये।। ७१

ஈசனின் தயையே! சிவனிடம் மட்டும் உள்ளதும், என்னால் விரும்பப்பட்டதுமான சிவ நிலையை நான் பெறாத போது துயரில் ஆழ்ந்து மூழ்கிறேன். நீ அப்போது செயலற்றிருப்பது தகாததே. (71)

नागांसि यन्महान्त्यपि गण्यन्ते गुणकणो बहु क्रियते।
गिरिशेन तदनुगैरपि तद् गिरिशे त्वन्निवेशतः करुणे ॥ ७२

கருணையே! உனது நுழைவால் சிவனாலும் சிவ கணங்களாலும் குற்றங்கள் பெரியவையாயினும் பொருட்படுத்தப்படுவதில்லை. அற்பமான குணங்களும் பெரிதாக மதிக்கப்படுகின்றன. (72)

मतिवागपदेऽनन्ते महेश्वरे मननमनपूजाभिः।
आगोभिरभावि गुणैरनुकम्पे तस्य तव परिष्वङ्गात् ॥ ७३

அறிவிற்கும் வாக்கிற்கும் அப்பாற்பட்டவரும் வரம்பற்றவருமான மகேசனை நினைவிற்கு உட்படுத்துவது வணங்குவது பூஜை செய்வது என்றிவை பாபமாயினும் உனது அணைப்பால் அவை குணங்களாகின்றன.

அறிவிற்கப்பாற்பட்டவரைத் தியானிப்பதும் வாக்கிற்கப்பாற்பட்டவரைத் துதிப்பதும் வரம்பிற்கு உட்படாதவரை ஆஸனத்தில் அமர்த்தி வழிபடுவதும் குற்றங்களாகின்றன. அது மிகப் பெரியவரை நம் நிலைக்குத் தாழ்த்துவதாகும். தயை துணை நிற்கும் போது சிவன் இவற்றைக் குற்றமாக நினைக்காததுடன் மதிப்பதாகவும் கொள்வார். (73)

अवरुन्धत्या करुणे हरं त्वया तस्य मामकस्वान्तम्।
गेहं क्रियतामयि मे साहङ्क्रियताज्वरं जिहीर्षसि चेत् ॥ ७४

கருணையே! என்னிடமுள்ள அஹங்காரம் எனும் தாபத்தை அகற்றுவாயே எனில் சிவனைக் கட்டுப்படுத்துகிற உன்னால் என்னுள்ளமும் வீடாக்கப்படும். (74)

कामारिणा निविष्टैः कामादिभिरशरणस्त्वहं करुणे।
ताड्ये किल किन्न त्वं तत् ज्ञपयसि तच्च किन्न वारयसि ॥ ७५

கருணையே! காமம் முதலியவை உட்புகுந்ததால் காமனின் எதிரியால் வேறு புகலிடமில்லாத நான் அடிபடுகிறேன். இதை

பெருமானிடம் தெரிவிக்கமாட்டாயா! அவரையும் தடுக்கமாட்டாயா? (75)

**अन्तकहरं पदं तव हन्त दये घ्रातुमप्यनर्हं माम् ।**
**अकरोद्दुर्विधिरस्तु तदपनयने तव विलम्बनं नार्हम् ।। ७६**

*தயையே! கெட்ட விதி என்னை யமனை வென்ற உனது இருப்பிடத்தை முகரக் கூட முடியாதவாறு செய்து விட்டது. அது இருக்கட்டும். அந்நிலையை மாற்றுவதில் உனது தாமதம் தகாதது (76)*

**दृष्टे मया त्वदोकसि दृशाऽनया सर्वमङ्गळाश्लिष्टे ।**
**करुणे का तव हानिः कति कति तद्दर्शिनस्त्वया न कृताः ।।७७**

*கருணையே! ஸர்வ மங்களையான தேவியால் அணைக்கப் பெற்றுள்ள உன் இருப்பிடத்தை நான் பார்ப்பதால் உனக்கென்ன குறை நேரும்? எத்தனையோ பேர்களை நீ அதனைக்காணச் செய்திருக்கிருயல்லவா? (77)*

**दुग्धार्थिनो मुनिशिशोर्दुग्धांबुनिधिर्वशं नीतः ।**
**जलधिरपरस्य हस्ते जलकणतां शिवदये न तेऽस्ति भरः।। ७८**

*சிவனது கருணையே! பாலருந்த விரும்பிய முனிவரின் சிசுவிற்கெனப் பாற்கடலையே அவனது வசப்படுத்திஞய். மற்ருெருவரது கையில் கடலை நீர்த்துளியாக அடங்கச் செய்தாய். அதஞல் உனக்கு பாரம் ஏதுமில்லை.*

*உபமன்யுவும் அகஸ்தியரும் இந்த அருளைப் பெற்றவர்கள். (78)*

**अवतंसितेन्दुकन्दळमाज्ञावशवर्तिपवनतपनादिम् ।**
**कलये दये तव झरं कर्मपरब्रह्मगन्धिनिश्वासम् ।। ७९**

*தயையே! சந்திரனின் குருத்தை அணிந்ததும் வாயு,*

ஸூர்யன் முதலானவரைத் தன் ஆணையால் வசத்தில் கொண்டதும் கருமத்தை உணர்த்துகிற வேதத்தை மூச்சுக் காற்றாகக் கொண்டதுமான உனது அருவியைத் தியானிக்கிறேன். (வேதம் ஈசனின் மூச்சு) (79)

करुणेऽङ्गीकुर्या मां कदाऽम्ब तमुमासखं चिदाकारम्।
गलहस्तितविषयान्तरमासीनं मन्मतौ कदा कुर्याः ॥ ८०

கருணையே! என்னைத் தன்னவனாக என்று ஏற்பாய்? உமையின் நண்பரும் பேரறிவு வடிவினருமான பெருமான் என்னிடமுள்ள மற்ற வெளிப்பொருளுணர்வைக் கழுத்தில் கை வைத்துத் தள்ளிவிட்டு என் உணர்வில் தோன்றுமாறு என்று செய்வாய்? (80)

भयविरहमन्तकात्त्वं प्रदिश परस्येव न मम किन्तु भयम्।
येन शिवेऽभिरतस्स्यां शिवानुकम्पे प्रसीद तदलं मे ॥ ८१

சிவனது கருணையே! யமனிடம் பயமின்மையை அளிப்பாய். மற்றவரைப் போல் எனக்கு யம பயமில்லை. அந்த பயமின்மையால் சிவனிடம் பக்தி கொண்டு ஈடுபடுவேன். அது எனக்குப் போதுமானது. (81)

गौरीसखमुडुगौरं कन्दर्पसहस्रसुन्दराकारम्।
नीलग्रीवमुदारं निधेहि मन्मनसि तव दये पूरम्॥ ८२

தயையே! கௌரியின் அன்பனும் சந்திரனைப் போன்று வெண்ணிறம் கொண்டவரும் ஆயிரம் மன்மதர்களின் அழகைக் கொண்ட மேனியரும் நீல நிறம் கொண்ட கழுத்துள்ளவரும் பெருவள்ளலுமாகிய உன் வெள்ளப்பெருக்கை (சிவனை) என் மனத்தில் வைப்பாய். (82)

क्रन्देयं बत कं प्रतीह बलिना कामेन कामान्तकः
कामं पश्यति पीड्यमानमपि मां कालेन कालान्तकः।
त्वं चेत्तस्य विभोर्भवत्कृतपरिष्वङ्गैरपाङ्गैर्दये
मामामोदयसे क्षतिस्तव तु का किं स्याच्च मेऽसौ दशा ॥ ८३

தயையே!எவரிடம் சென்று அழுவேன்? வலிவு மிக்க காமனால் துன்புறுத்தப்படுகிற என்னை காமனின் எதிரியும் காலனின் எதிரியுமான சிவன் வெகுநேரமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.அந்தப் பெருமானை உன் அணைப்பாலும் கடைக்கண் பார்வையாலும் என்னை அவர் ஏற்கும்படி செய்வாயேயானால், உனக்கு என்ன குறை நேரும்? என் நிலை எவ்வாறிருக்கும்? (83)

निद्रालस्यभरो वपुष्यतिजरादुस्सङ्ग ईर्ष्या मतिः
यत्र क्वापि हि कैश्चिदित्थमशुभैर्विघ्नैः परीतस्य मे।
ईशानेऽभिरतिश्च निर्वृतिकथा क्वेशानुकम्पे कदा
दीनान्वेषिणि मां त्वदभ्युपगमो दीनाग्रगण्यं स्पृशेत्॥ ८४

ஈசனது தயையே! தூக்கமும் சோம்பலும் சுமையாக உள்ளன.உடலில் முதுமையாலான தேய்வு, கெட்டவரின் இணக்கம், பொறாமை, அங்கும்இங்கும் அலைகிறபுத்தி, என்றவாறு சில கெடுதி தருகிற இடையூறுகள் சூழ்ந்த எனக்கு, சிவனிடம் ஈடுபாடும் அமைதியும் எங்கே அமையும்? எளியவரைத்தேடுபவளே! எளியவரில் முன் நிற்கிற என்னை உனது ஏற்பு எப்போது நெருங்கும்?(84)

तरणे भवस्य शरणैषिणा मया दुरितानि हन्त चरितान्यलं दये।
उचितानि नैव रुचितानि मानसे लपितानि चैव कुपिताकृतीनि मे॥

தயையே! ஸம்ஸாரக்கடலைத் தாண்டப் புகலிடம் தேடுகிற என்னால் பாபங்கள் போதுமான அளவு செய்யப்பட்டன. செய்யத்தக்கவை மனத்திற்குப் பிடிக்கவில்லை. பேச்சுகளும் கோபத்தால் வெளிவருபவை போன்றவை. (85)

शमनावलेपदमनावहाऽम्ब
किन्त्वपुषन्न खिन्नवपुषं मृकण्डुजम्।
भवती मदीयभवतीव्रतापहृत्
तरुणेन्दुचूडकरुणे न किं भवेत्॥ ८६

இளம் சந்திரனைச் சூடியவரின் கருணையே! யமனின் திமிரை அடக்கியவரைச் சுமக்கிற நீ உடல் வருந்திய மிருகண்டுவின் மகனைப் போஷிக்கவில்லையா? அந்த நீ எனது பிறப்பிறப்புகளின் தீவிரத்தாபத்தைப் போக்குவதாக ஆகக் கூடாதா?(86)

उचितं तवोपरचितं दये न किं
प्रबलापराधकबळार्पणं मया ।
अयि शर्वमम्ब मयि शर्मदं न किं
वितनोषि शंस बत नो यशोऽस्त्यतः ।। ८७

தாயே!தயையே! உனக்கு ஏற்ப கடும் தவருன செயல்களாகிய கவளத்தைச் சேர்ப்பிப்பது என்ற உபசாரத்தை நான் செய்யவில்லையா? சிவனை எனக்கு ஆனந்தமளிப்பவராக ஏன் செய்யாதிருக்கிருய்? இதனுல் நம்மிருவருக்கும் கெட்ட பெயர் ஏற்பட்டுள்ளது.

நிவேதனம் என்ற உபசாரமாக நான் என்னிடமிருந்த தவருன செயல்களை உனக்கு அர்பணம் செய்தேன்.இந்த நிவேதனத்தை எற்றுச் சிவனைத் திருப்திப்படுத்துவது உன் பணி. (87)

गरळे हरस्य तरळेतरां रुचिं
भवती दयेऽर्पितवती न मेऽम्हसि ।
उदितादराऽत्र विदिता कराळता
महिता न सा किमहितावहा तव ।। ८८

தயையே! சிவனுக்கு விஷத்தில் சலிக்காத ருசியைத் தந்த நீ என் பாபத்தில் அந்த ஆதரவைக் காட்டவில்லை. விஷத்தின் கடுமைக்கு மதிப்பு தந்தாய். அது உனக்குக் கேடு விளைவிக்காததா?(88)

कलिनाऽमुनाऽतिबलिना कदर्थितः
स्वहिते क्षमो न विहितेऽस्मि मादृशाम् ।

अवने श्रमस्तु तव नेशितुर्दये जगति
त्वयैव सगतिस्तदस्म्यहम् ।। ८९

ஈசனின் தயையே!இந்த வலிவு மிக்க கலியால் பயனற்றுப் போன நான், கடமையாக விதிக்கப் பெற்று என் போன்றோருக்கு இதமாயுள்ளதைச் செய்ய இயலாதவனுனேன். என்னைக் காப்பதில் உனக்கு சிரமம் இல்லை.உலகில் உன்னையே பிடிப்பாகக் கொண்டு நான் வாழ்கிறேன். (89)

वलभेदनादिसुलभेतरं हरं स्मरतो दळाम्बु किरतोऽपि निर्वसोः ।
नयसे वशं कलयसेऽद्भुतं दयेऽहमसावपीह किमसानि ते पदम् ।। ९०

தயையே! இந்திரனுக்கும் எளிதில் கிட்டாத ஹரனை அவரை நினைப்பவனும். அவருக்கு இலையும் நீரும் வார்ப்பவனும் செல்வமற்றவனுமான மனிதனின் வசத்தில் கொணர்கிறுயே அது அற்புதச் செயல். இந்த நானும் உனக்கு இடமாவேனோ? (90)

स्मरणं प्रणामकरणं तथाभिधागदनश्च जातुचिदनङ्गवैरिणः ।
परमं भवार्तिहरमम्ब देहिनां त्वदये गतिस्तव दये गरीयसी ।। ९१

தாயே! தயையே! மன்மதனை எரித்த ஈசனை நினைவிற் கொள்வது ,அவரை வணங்குவது. அவரது திருநாமம் சொல்வது என்பவை ஒருக்கால் மனிதர்களின் ஸம்ஸாரத்துயரைப் போக்கும். தயை பெருதவரிடம்உனது ஆதரவு மிகப் பெரிது.(91)

भवतापभीतमवताऽखिलं जनं पुरमर्दनेन परमर्ज्यते यशः ।
घनमम्ब यद्भुवनमङ्गळं दये तदये श्रमच्छिदुदये त्वदाश्रयात् ।। ९२

தயையே!தாயே!ஸம்ஸாரத் துயரத்தால் பயந்த எல்லா மக்களையும் காக்கிற புராரியால் (சிவனுல்)பெரும் புகழ் ஸம்பாதிக்கப்படுகிறது. சிரமத்தைப் போக்குவதற்காக உதிப்பவளே!உன்னை அண்டியதால் உலகத்திற்கே மங்களமான அந்த மேகத்தை அடைகிறேன்.(92)

भुवने तवाम्ब नवने पटुर्दये परमत्र को नु झरमज्जितः स ते ।
श्रितमन्तुशैलशतमन्तकान्तकोऽखिलवेदिता न किल वेदितुं क्षमः ॥

தாயே!தயையே! உலகில் உன்னைத் துதிப்பதில் திறமையுள்ளவன் உன் நீர் வீழ்ச்சியில் மூழ்கியவனாகிறான். அதன் விளைவாக எல்லாமறிந்த யமனின் எதிரியும் எல்லா மறிந்தவருமான சிவன் தன்னை அண்டியவனின் நூறு மலைகள் போன்று குவிந்த பாபத்தைத் தெரிந்துகொள்ள முடியாதவராகிறார். (93)

मनसेह सर्वमनसेव यद्वहे हरमेकमेव न रमे हि विस्मरन् ।
तदिमं त्वमेव हृदि मन्तुमाशु मे करुणे यतस्व तरुणेन्दुशेखरम् ॥९४

கருணையே! ஹரன் ஒருவரையே உயிராலும் மனத்தாலும் நான் சுமக்கிறேன் . அவரை மறப்பது எனக்குப்பிடிக்காது. நீயே இந்த இளஞ் சந்திரனைச் சூடியிருப்பவரை உள்ளத்தில் தியானிக்கச் செய்ய உதவுவாய். (94)

किमतो ममाम्ब विमतो भवार्णवः तुदतीह मां न नुदतीदृशं शुचम् ।
गिरिजापतेरुपरि जातु मे दये हृदयं कुरुष्व सदयञ्च तञ्च माम् ॥ ९५

தாயே! தயையே! வேறு என்ன வேண்டும்? என் எதிரியான ஸம்ஸாரக்கடல் என்னைக் குத்தி வாட்டுகிறது. துயரைக் குறைக்கவில்லை. நீ மலைமகளின் பதியிடம் என் இதயத்தை எப்போதாவது பதிப்பாய். என்னிடம் தயையுள்ளவராக அவரை ஆக்குவாய். (95)

चरणं नतार्तिहरणं विभोर्दये नृतमो भजेत कतमो विना त्वया ।
तदमुं तवाम्ब पदमुन्नतं नय प्रभवे मदर्थिविभवेऽर्थिनी भव ॥ ९६

தாயே! பெருமானின் தயையே! உன் உதவியின்றி எவனும் வணங்கியவனின் துயரைப் போக்குகிற பெருமானின் திருவடியை அடைய இயலாது. அதனால் உனது உயர்ந்த இருப்பிடத்திற்கு என்னை அழைத்துச் செல்வாய். பிரபுவிடம் எனக்குத் தேவையான செல்வத்தை வேண்டுவாய். (96)

कमलासनश्च कमलापतिश्च ते कलयाऽऽप्लुतां हि तुलया विहीनताम्।
स्वकरावलम्बसुकरामृतश्रियं कुरु मे कुलेशितुरुमेशितुर्दये ॥ ९७

*குல தெய்வமான உமாபதியின் தயையே! தாமரையில் அமர்கிற பிரும்மாவும் லக்ஷ்மீயின் பதியும் தராசில் உனக்குச் சிறிதளவு எடை குறைந்தவர்களாவர். உன் கையைப் பிடிப்பதால் எளிதில் பெறத்தக்க அழியாச் செல்வத்தைத் தருவாய். (97)*

अपराधजालमपरा नुदेत का भवती विनोद्धृतवती जगद्द्ये।
जननीं प्रमोदजननीमृते शिशोः शमलं प्रमार्जितुमलं परा तु का ॥९८

*தயையே! உலகைத் தாங்கி நிற்கிற உன்னைத் தவிர வேறு எவர் என் பாபச் சுமையைப் போக்குவர்? மகிழ்ச்சியைத் தருகிற தாயைத்தவிர வேறு எவர் சிசுவின் மலத்தைத் துடைப்பார். (98)*

उमापतिरमापती मम शिवौ जहीतां मनो
न जातु करुणे यथा कुरु तथैव बुद्धिं दृढाम्।
तथैव रसनाममूं शिव शिवेति वागुद्धरां
न चैतदुभयं विना किमपि मेऽभिलाषास्पदम्॥ ९९

*மங்கள வடிவினரான உமாபதியும் லக்ஷ்மீபதியும் என் மனத்தை விட்டகலாதவாறு, எனக்குத் திடபுத்தியை அருள்வாய். அவ்வாறே இந்த நாக்கை சிவ சிவ என்ற சொல்வதாக ஆக்குவாய். இவ்விரண்டைத் தவிர எதுவும் என் விருப்பத்திற்கு உகந்ததல்ல. (99)*

प्रसीद करुणेऽधुना मनसि मे शिवं स्थापया-
नपायिनमुमासखं कुरु च मय्यनुग्राहकम्।
तथाऽनिशमिहासनं शिवपदस्य जिह्वाञ्चले
ददस्व मम काङ्क्षितद्वयमिदं त्वदेकायनम् १००

*கருணையே! அருள்வாய்! இப்போது என் மனத்தில் அகலாதவாறு சிவனை அமர்த்துவாய். உமாபதியை எனக்கு*

அனுக்கிரஹம் புரிபவராக்குவாய். எப்போதும் சிவ என்ற சொல்லிற்கு என் நாக்கின் நுனியில் அமர ஆஸனம் தருவாய். ஒரே இலக்கு கொண்ட இந்த இரு விருப்பங்களையும் தந்தருள்வாய். (100)

कालेऽन्तिमे शिवदये मम ते प्रसादाद्
एतावदेव हृदये दृढमाविरस्तु ।
यद्द्व्यक्षरं शिव शिवेति तवास्पदीय
मोक्षप्रदं भुवनमङ्गळनामधेयम् ॥ १०१

சிவனின் தயையே! என் இறுதி நேரத்தில் இரண்டக்ஷரங்கள் கொண்ட சிவ சிவ என்று நீ அமர்கிற ஆஸனமும் முக்தி தருவதும் உலகிற்கு மங்களம் தருவதுமான பெயர் என் இதயத்தில் உன் அருளால் தோன்றட்டும். (101)

एवं दयास्तवमिमं पठतां हि भक्त्याऽऽ-
रोग्यायुरच्छशिवभक्तिधनर्द्धिविद्याः ।
अग्र्यान् सुतानपि यशश्च विमुक्तिमन्ते
श्रीपार्वतीशकरुणा दिशति प्रहृष्टा ॥ १०२

தயையைப் பற்றிய இந்தத் துதியைப் பக்தியுடன் படிப்பவர்களுக்கு ஆயுள், ஆரோக்கியம், தூய சிவபக்தி, செல்வம், செழிப்பு, கல்வி, உயர்ந்த புதல்வர்கள், புகழ், முடிவில் முக்தி என அனைத்தையும் பார்வதி நாதனின் கருணை மகிழ்ந்து தரும். (102)

தயா சதகம் முற்றிற்று

शिवाभ्यां नमः

# ३. श्री मातृभूतशतकम्

## 3. ஸ்ரீ மாத்ருபூதசதகம்

*(திருசிராப்பள்ளியில் மலை மீது கோயில் கொண்டிருப்பவர் மாத்ருபூதேச்வரர் என்ற தாயுமானவர். பிரசவவேளை நெருங்கும் சமயத்தில் ஒரு கர்ப்பிணிப்பெண்ணின் தாய் வெளியே சென்றிருந்தாள். துணைக்கு எவரும் இல்லாத வேளையில் பிரசவவலி கடுமையாக எடுத்ததும் பெண் தாயைக் கூவி அழைத்தாள். பெண்ணின் தாய் வீட்டை விட்டு வெளியேறுகிறபோது ஈசனிடம் நெருக்கடியில் உதவும்படி வேண்டிச் சென்றாள். அந்தத் தாயின் பொறுப்பை ஏற்ற ஈசன் தானே தாயுமாகி பிள்ளைப் பேற்றிற்கு உதவுகிற மருத்துவப் பெண்ணாகவுமிருந்து உதவினார். மாத்ருபூத ஈசன்- தாயான தெய்வம் என்ற புகழ் பெற்ற ஈசன், தந்தையாகக் காப்பவர், தாயாகி அணைப்பவரும் (தாயும்) ஆனார். அம்பா (அம்மா) என்ற சொல் தாயாகி அணைப்பவளைக் குறிக்கும். ஸ்ரீதரர் திருச்சிராப்பள்ளியில் மாத்ருபூதேசனின் வழிபாட்டில் பல நாட்கள் ஈடுபட்டிருந்தார் என்பர்.)*

श्रेयांसि यं सकृदनुस्मरतां जनानां आविर्भवन्ति सुमहान्त्यनपायवन्ति ।
तं त्वामनन्यशरणःशरणं भजामि श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥

*எவரைத் தொடர்ந்து நினைவில் கொள்கிற மக்களுக்குக் கேட்டின் தொடர்பற்ற பெரும் மேன்மைகள் உண்டாகுமோ, அந்த உன்னை, வேறு புகலிடமற்றவனாகச் சரணடைகிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாய். உனக்கு வணக்கம். (1)*

आनन्दसच्चिदमलात्मनि शङ्करे
त्वय्यन्तर्निषीदति भवन्तमहो विहाय ।
भ्राम्यामि मोहविवशो भवशोकखिन्नः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥२

மங்கள முண்டாக்குகிற நீர் பேரானந்தமும் பேரிருக்கையும் பேரறிவும் தூய்மையும் வடிவானவர். நீர் என் உள்ளத்தினுள் அமர்ந்திருக்கையில் உம்மை விட்டுவிட்டு மதிமயங்கி ஸம்ஸார தாபத்தால் வாடியவனாகச்சுற்றிச் சுற்றிவருகிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர், உமக்கு வணக்கம் (2)

मद्दासस्नूरयमित्यनुकम्पनीये
मय्यर्भके समधिरोप्य वृथाऽपराधान्।
युक्तं किमेवमधिगन्तुमुदासिकां ते
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥३

''இவன் சிறுவன். என் தாஸரின் மகன்'' என்று இரக்கத்திற்கு உரியவன் நான். பரிவு காட்டத்தக்கவன். இவன் மீது வீணே குற்றச்சாட்டைச் சுமத்திக் கவனியாதிருப்பது உமக்கு உசிதமா! தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (3)

सौशील्यघस्मरधनस्मयनष्टसंज्ञान्
अज्ञो विषीदति यदेष वृथानुधावन्।
तत्पश्यतस्तव दया न कथं दयाळो
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ४

நற்பழக்கத்தை விழுங்குகின்ற பணத்திமிரால் உணர்விழந்தவர்களை வீணே பின்தொடர்ந்து ஓடி அறிவில்லாதவன் துயரடைகிறான். தயை மிக்கவரே! அவனைக் காண்கிற உமக்குக் கருணை ஏன் ஏற்படவில்லை? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம் (4)

भक्तिं त्वयि श्रितवतां वद कः प्रहीणः
सा वा तवाहमिति किं न सकृत्प्रपत्तिः।
किं तद्गतामनवितासि कुतोऽस्म्युपेक्ष्यः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५

உம்மிடம் பக்தியைப் பெற்றவருக்குள் வீணனவன் எவன்? உமக்கு அவளா (பக்தியா) நானு? என்று ஒரே தடவையில் தீர்மானித்து ஏற்க முடியாதா? பக்தியுள்ளவனைக் காக்கமாட்டீரா? நான் உம் பராமுகத்திற்கு ஏற்றவனு? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (5)

दासस्तवाहमिति यस्सकृदप्युपैति
रक्ष्यः स एष इति ते विधृतव्रतस्य।
रक्ष्योऽहमस्म्यथ कियानफलो विलम्बः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६

நான் உமது தாஸன் என்று ஒருவன் ஒரு தடவை உம்மை அணுகினுல் அவன் உம்மால் காப்பாற்றத் தக்கவன் என விரதமெடுத்துள்ள உமக்கு, நான் காப்பதற்குரியவன். ஏன் வீண் தாமதம்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (6)

आज्ञापयेः कथमये तव गर्भवासं
दुःखापवर्गिणि गिरीश समाश्रयेयम्।
आस्तां सहस्रमपि नानुगुणं त्विदं ते
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७

மலையாள்பவரே! நான் அனுபவிக்கிற துன்பத்திற்கு மாற்றுக மறுபடி கருவறையில் வசிப்பதை ஏற்க வேண்டுமா? (உயிரை விட்டு மீண்டும் பிறக்கவேண்டுமா?) உத்தரவிடுவீர்!ஆயிரம் இருக்கட்டும். இது உமக்கு ஏற்றதல்ல. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம்.(7)

सर्वज्ञशङ्करमहेशदयालुशब्दाः
किं पारिभाषिकतयोपगता भवन्तम्।
विज्ञापिते विलपितेऽपि किमित्युदास्से
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ८

ஸர்வஜ்ஞர் (எல்லாமறிந்தவர்) சங்கரர் (மங்களம் தருபவர்)மஹேசர், (பேராளுநர்)தயாளு (தயைமிக்கவர்) என்றிருக்கும் சொற்கள் உம்மைப் பெயரளவில் அடைந்தனவா? விண்ணப்பித்தும் புலம்பியும் கூட நீர் பராமுகமாக உள்ளீரே! தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (8)

हीनैस्सदाधिकृतिकैरपि धृष्यमाणे सावज्ञमेवमपदे मयि दृश्यमाने ।
नेदं क्षणं क्षणमुपेक्षणमाश्रयेथाः श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ९

எப்போதும் என்னை கீழ்மக்களான அதிகாரிகள் அவமதிப்புடன் மிரட்டும்போது, தகாத இடத்தில் நான் காணப்படும்போது, நொடிக்கு நொடி பராமுக நிலையைக் கடைபிடிக்காதீர் (இது தருணமல்ல) தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (9)

आलस्यदुर्विषयसक्तचपलापनिद्रापघ्नामदाधिगदनीचसमागमादीन् ।
विघ्नान् धुनीहि घटय त्वयि मेऽभिलाषं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ १०

சோம்பல், கெட்ட வழியில் ஈடுபாடு, குறைகூறுதல், தூக்கம், பணத்திமிர், மனவியாதி, உடல்வியாதி, கீழோரிணக்கம் முதலிய இடையூறுகளை அகற்றுவீர். உம்மிடம் எனக்கு விருப்பத்தை ஏற்படுத்துவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (10)

कासावनन्यसुलभा भवदीयता मे भूयिष्ठनिष्ठुरविपद्विषमा क्व वृत्तिः ।
एतन्न किं तव यशोभरभङ्गभीतं श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ११

உம்மைச்சார்கிற நிலை மற்றவரால் எளிதில் அடைய முடியாதது.வாழ்க்கையோ மிக மிகக் கொடுமையுள்ள விபத்துக்களால் தாறுமாறுக உள்ளது. (சிவபக்தன் கஷ்டப்படுகிறுன் என்ற நிலையால்) உமது புகழுக்குப் பங்கம் நேரும் என்று பயந்த என்னைத் தாயானி சிவனே? காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (11)

सम्फुल्लचम्पकलसन्नवमल्लिकादिहृद्योपचाररुचिरं भवदर्चनं मे।
पाण्योस्तरङ्गय निरन्तरमन्तरात्मन्
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ १२

*என் உள்ளத்தில் துலங்குகிற ஆத்மாவே! நன்கு மலர்ந்த சம்பகப்பூ, அழகிய மல்லிகை இவற்ருல் நீர் மனமுவந்து ஏற்கிற உபசாரங்களால் உம்மை வழிபடுவதில் அலேவரிசைபோல் இடைவிடாமல் என் கைகளே ஈடுபடச் செய்வீர். தாயான சிவனே! என்னேக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (12)*

दारैस्सुतैश्शुभतमैर्द्रविणैः प्रशान्तैः
स्वर्गापवर्गफलसिद्धिभिरभ्युपेताः।
नन्दन्ति ते करुणया किमसाध्यमस्याः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ १३

*உன் கருணேயால் மக்கள், நல்ல மனேவி, பிள்ளே, மிக மங்களமான செல்வம், அமைதி தருகிற ஸ்வர்க வாழ்க்கை, முக்தி முதலியவை பெற்று மகிழ்ச்சியடைகிருர்கள். கருணேயால் ஸாதிக்க முடியாதது எது? தாயான சிவனே! என்னேக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (13)*

कालं कियन्तमघदन्तुरमन्तरङ्गं
त्वच्चिन्तनं तनितुमक्षममीक्षसे त्वम्।
त्वद्भक्तये स्पृहयतश्शिव मे दयस्व
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ १४

*பாபத்தால் மனம் கரடுமுரடாகியுள்ளது. உம்மை நினேக்க இயலாதிருக்கிறது. எத்தனே நாட்கள் இதனேப்பார்த்துக் கொண்டிருப்பீர். சிவனே! உம்மிடம் பக்திகொள்ள அடங்காத ஆசை கொண்ட என்னிடம் தயை காட்டுவீர். தாயான சிவனே! என்னேக்காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (14)*

वित्तस्मयान्धगृहकाननसम्प्रचार
धौरेयभावमवधूय कदा मदङ्घ्री।
स्तां त्वत्प्रदक्षिणविधौ करुणावशात्ते
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते।।१५

*பணத்திமிரால் பார்வை இழந்து வீடு காடு என்று சுற்றிவருவதில் முனைவதை விட்டு விட்டு என் கால்கள் உம் கருணை காரணமாக உம்மை வலம் வருவதில் நிலை பெறட்டும். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம்.(15)*

स्यात्त्वत्पदं विदळदम्बुजसौरभश्री-
विश्रामसीमभिरुदञ्चितवाक्प्रपञ्चैः।
स्तोत्रैर्विभो मम कदा नु सदानुबन्धि
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। १६

*பெருமானே!மலர்கிற தாமரையின் மணம் ஓய்வெடுக்கிற இடமாக (தாமரை மணம் கமழ்கிற) உரக்க ஒலிக்கிற துவனியுடன் கூடிய துதிகளுடன் உமது திருவடி எப்போது தொடர்புடையதாகும்? (என் வாக்கு உன் திருவடிகளைத்துதிப்பதில் எப்போது ஈடுபடும்.?) தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (16)*

पादौ प्रदक्षिणविधौ भवदर्चनेषु पाणी
स्तवेषु फणितीरपि मेऽन्तरात्मन्।
ध्याने मनश्च विनियुङ्क्ष्व दयस्व मह्यं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। १७

*உள்ளத்தில் ஆத்மாவாகத் துலங்குபவரே!உம்மை வலம் வருவதில் கால்களையும். உம்மை அர்ச்சிப்பதில் கைகளையும், துதிப்பதில் பேச்சையும் தியானத்தில் மனத்தையும் பயன்படுத்துவீர்.உடன் தயை புரிவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (17)*

मूढोऽपटुर्भवदुपश्रयणक्रमेषु रूढोपतापविततिर्विपदां कदम्बैः।
सीमा तृषामहमतोऽस्मि तवानुकम्प्यः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥१८

உம்மை அணுகுவதற்கான நடைமுறைகளின் வழியறியாதவன். செயல்படத் திறமையற்றவன். நெருக்கடிகளின் குவியலால் அடுத்தடுத்துத் தவிப்பிற்கு உள்ளானவன். பேராசையின் எல்லையானவன். அதனால் உமது பரிவிற்கு உரியவன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (18)

अम्बेयमप्रतिहतप्रतिपत्तिशक्तिः
सर्वज्ञता च भवतो भुवने निरूढा।
भूतिश्च वां निरवधिस्तनयस्तु सोऽहं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ १९

இந்தத் தாய் ஸுகந்திகுந்தலாம்பிகை புரிந்து கொள்கிற சக்தி சிறிதும் குன்றாதவள். நீர் எல்லாமறிந்தவர் என்பது உலகில் ஆழப்பதிந்த ஒன்று. உமது செல்வமோ எல்லை காணாதது. நான் உமது மகன். தாயான சிவனே! என்னைக்காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (19)

पुत्रादयो न सुखयन्ति हि भावभेदात्
सोपाधिकप्रणयसम्भ्रमिभिः किमेतैः।
माता पिता च निरुपाधिकृपानिधिस्त्वं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ २०

மகன் முதலானோர் கருத்து வேறுபாட்டால் இன்பம் தருவதில்லை. எதிர்பார்ப்புடன் உள்ள அன்பைக் காட்டுகிற பரப்படைந்த இவர்களால் ஆவதொன்றுமில்லை. நீரோ ஒரு எதிர்பார்ப்புமின்றி பெருங்கருணையின் இருப்பிடமான தாயும் தந்தையும் கூட. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (20)

उद्गद्गदस्वनगलं गलदम्बुनेत्रं रोमाञ्चकञ्चुकितमञ्चितघर्मबिन्दु ।
त्वन्नामनि श्रवणगामिनि कल्पयाङ्गं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। २१

*உம் பெயர் காதுகளை வந்தடையும் போது, தழுதழுத்த குரலும் கண்ணீர் மல்கும் கண்களும் புல்லரிப்பைக் கவசமாகக் கொண்டதும் வியர்வைத்துளிகள் வெளிப்படுவதுமான அங்கமும் ஆகும்படி செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (21)*

दुर्लभ्यदुर्विपरिणत्यसुखानुबन्धिविप्लावितेषु विषयेषु वृथा निपात्य ।
मां खेदयन्न कथमुद्वहसेऽनुकम्पां श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।।

*எளிதில் கிட்டாததும் துயரத்தைத் தருவதாக மாற விருப்பதும் துன்பத்தையே பின் விளைவாகக் கொண்டதுமான வெளிப்பொருள் நாட்டத்தில் வீணே தள்ளி என்னைத் துன் புறுத்துகிற நீர் ஏன் பரிவைக் காட்டவில்லை? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம் (22)*

कन्दर्पकोटिशतसुन्दरमिन्दुरेखाचूडं
दरस्मितपरिस्फुरदाननेन्दुम् ।
कान्तं नगेन्द्रसुतया कलये भवन्तं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। २३

*நூறுகோடி மன்மதர்களுக் கொப்பான அழகுள்ளவரும், பிறையைச் சூடியவரும், சிறிதளவு வெளியாகிற புன்சிரிப்பு துடிக்கிற சந்திரன் போன்ற முகமுள்ளவரும், மனத்தை ஈர்ப்பவருமான உம்மை மலைமகளுடன் உருவகப்படுத்துகிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (23)*

सृष्टौ स्थितावपि लयेऽस्ति तव प्रभुत्वं
दुःखे तु मे द्वितयगोचरमेव दृश्यम् ।
व्यङ्क्तुं तदन्तविषयं तव को विलम्बः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।।२४

*படைக்கவும் காக்கவும் அழிக்கவும் உமக்கு ஆளுமை உள்ளது. என் துக்க விஷயத்திலோ படைத்தல், காத்தல் என்ற இருபணிகளில் மட்டுமே அது காணப்படுகிறது. துக்கத்தை அழிப்பதில் அதை வெளிப்படுத்த ஏன் உமக்குத்தாமதம்? தாயான சிவனே! என்னைக்காப்பீர். உமக்கு வணக்கம். (24)*

**मन्दस्मितैर्दिशि दिशि स्फुरदिन्दुचूडैः**
**गौरीसखैः स्फटिकगौरमनोहराङ्गैः ।**
**त्वद्विग्रहैः कबलयाविरतं मनो मे**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। २५**

*ஒவ்வொருதிக்கிலும் புன் சிரிப்பு உள்ளவர்களும். ஒளிமிக்க சந்திரனைச் சூடியவர்களும், கௌரீமணாளர்களும் படிகம்போன்று வெண்ணிறம் கொண்ட அழகிய உருவமைப்பு உள்ளவர்களுமான உமது உருவங்கள் என் மனத்தை இடைவிடாமல் விழுங்கச் செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பீர். உமக்கு வணக்கம். (25)*

**प्रेमातिरेकशिशिरां त्वदपाङ्गधारां**
**आनन्दसिन्धुवलमानतरङ्गरेखाम् ।**
**सञ्चारयन्मयि सहाम्बिकया दयेथाः**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। २६**

*அன்புமிகுதியால் குளிர்ந்து ஆனந்தக்கடலின் அலைக்கோடுபோல் முன்னும் பின்னும் அசைந்தாடுகிற உம் கடைக்கண் பார்வையின் பெருக்கை என் மீது பரவ விட்டு அம்பிகையுடன் என் மீது தயை காட்டுவீர். தாயான சிவனே! என்னைக் காபாற்றுவீர். உமக்கு வணக்கம். (26)*

**भ्रूकिङ्करास्तव विरिञ्चपुरन्दराद्याः**
**कस्त्वां विरोत्स्यति निरोत्स्यति किं ममैनः।**
**दैन्यं ततो न बलवत् किमु दीनबन्धो**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। २७**

*பிரும்மா இந்திரன் முதலானோர் உம் புருவ அசைவிற்கேற்பப் பணிபுரிபவர்கள். உம்மை எவர் தடுப்பர்? என் பாவம் காப்பாற்ற முடியாதபடி உம்மைத்தடுக்குமா? என் எளிமை அதை விட வலிவு மிக்கதல்லவா? எளியவரின் உறவினரே! தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (27)*

**अन्वेति शङ्कर न यं करुणाङ्कुरस्ते**
**कस्तं विलोकयतु जल्पतु को धिनोतु ।**
**केयं विभो विमुखता मयि किङ्करेऽस्मिन्**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥**

*சங்கரரே! உம் கருணையின் முளை (சிறிதளவு வெளிப்பட்ட கருணை) எவனை அணுகவில்லையோ, அவனை எவர் கண் கொண்டு பார்ப்பார்? எவர் அவனைப் பற்றிக் கேட்பார்? எவர் அவனை மேனிலைக்குக் கொணர்வார்? பெருமானே! ஏன் இந்த ஸேவகனான என்னிடம் பராமுகம்? தாயான சிவனே! என்னைக்காப்பாற்றுவீர்! உமக்கு வணக்கம். (28)*

**भान्तं भवन्तमनघं मणिभूषणौघैः**
**भान्त्योमया विमलविद्रुमपाटलाङ्ग्या ।**
**शृङ्गारिताङ्कमुपयामि शशाङ्कगौरं**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ २९**

*ரத்தின ஆபரணங்களால் ஒளியுடன் துலங்குபவரும் தூயவரும், அப்பழுக்கற்ற பவழம் போன்ற சிவந்த உடலமைப்பு கொண்ட ஒளிமிக்க உமை அமர்ந்ததால் அழகிய மடிஉள்ளவரும் சந்திரனைப் போன்று வெண்ணிற மேனியருமான உம்மைச் சரணடைகிறேன். தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (29)*

**मन्दस्मितैः करुणया शिशिरैः कटाक्षैः**
**प्रेमातिरेकमधुरैरपि चाभिलापैः ।**

आनन्दयिष्यसि कदा नु सहाम्बया त्वं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।।

*புன் சிரிப்பாலும் கருணையில் நனைந்த கடைக்கண் பார்வையாலும் அன்பு மிகுதியால் இனிக்கிற பேச்சாலும் அம்பிகையுடன் என்று என்னை ஆனந்தப்படுத்துவீர்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (30)*

गोपायितेति कुलदैवतमित्यजस्रं
विस्रम्भतोऽर्पितभरं त्वयि दीनबन्धो ।
मामीक्षसे न कृपया यदि किं करोमि
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ३१

*காப்பாற்றுபவர் என்றும், குலதெய்வம் என்றும் எப்போதும் நம்பி உம்மிடம் பொறுப்பை ஒப்படைத்த என்னைப்பரிவுடன் நீர் பார்க்கவில்லை எனில் எளியவரின் உறவினரே! நான் என்ன செய்வேன்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (31)*

एकं सकृद्यदलसो न पुराऽभजं त्वां
नानादुरीशसतताश्रयदुर्विपाकः ।
तस्यैनसोऽयमधुनाऽतिधुनाति चेतः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते। ३२

*அணுகத்தக்கவர் நீர் ஒருவரே! உம்மைச் சோம்பேறியான நான் முன்னர் அணுகவில்லை எனில் பல துஷ்டயஜமானர்களை எப்போதும் அண்டியதன் கெட்ட விளைவே இது.அந்தப் பாபத்திற்காக இவன் இப்போது வருந்துகிறான். தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (32)*

एषा सुगन्धिचिकुरा जननी पिता त्वं
का ते सुते मयि विभो करुणाप्रहाणिः ।
किञ्चापि सा न खलु सार्द्रहृदो जनन्याः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ३३

*இந்த ஸுகந்திகுந்தளாம்பிகை (மட்டுவார் குழலியம்மை) என் தாய். நீர் என் தந்தை. மகளுகிய என்னிடம் ஏன் பரிவு குறைந்தது? அதுவும் அன்பால் நெகிழ்ந்த உள்ளமுள்ள தாய்க்கு பரிவில்லையா? தாயான சிவனே!என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (33)*

त्वत्संविदा तरति शोकमिति श्रुतीनां
भावो भवोन्नतिविधायि तवाभिधानम्।
शोकापहं तदहमीश समाश्रयामि
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ३४

*உம்மை உணர்வதால் சோகத்தைக் கடப்பான் என்பது வேதங்களின் கருத்து. உம் பெயர் வாழ்வில் உயர்வு தரக் கூடியது. துயரத்தைத் துடைக்கிற அதனைச் சரணடைகிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம்.(34)*

त्वन्नामकीर्तनमघापहमाशयेन
शंसन् पुराणनिकरो न किलार्थवादः।
तत्संश्रयोऽहमकृपास्पदमस्मि किं ते
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ३५

*உம் பெயரைப்பாடுவது பாபத்தை நீக்கும் என்பதை உட் கருத்தாகக் கூறும் புராணங்கள் விளம்பரப் பேச்சல்ல. உம் பெயரை நம்பியிருப்பவன் நான். ஆனுல் ஏன் உன் பரிவுக்குரியவனுக இல்லை? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (35)*

कर्मानुरोधि फलमित्यवगम्यमाने
ह्येनोहृतौ शुभविधौ च पटीयसस्ते।
कर्मेति कं प्रति तु वञ्चनचातुरीयं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ३६

செய்த வினைக்கேற்ற பயன் என்று உணர்த்தும் போது, பாபத்தை நீக்கவும் நல்லதைச் செய்யவும் சிறந்த ஆற்றல் பெற்ற நீர் எவரிடம் வினை என்று வஞ்சனைத் திறனைக்காட்டுகிறீர்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (36)

उत्सङ्गसीमनि सुगन्धिकचां निषण्णां
उल्लासयन् कुचतटीनखरावमर्शैः ।
आभासि शङ्कर निरन्तरमन्तरङ्गे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ३७

மடியின் மீது அமர்ந்த ஸுகந்திகுந்தளையை, மார்பகத்தில் விரலின் நகம் படரச் செய்வதால் குறு குறுப்பூட்டுகிற நீர் எப்போதும் என் உள்ளத்தினுள் பளிச்செனத் தெரிகிறீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (37)

मन्देतरैरखिलमान्तरमन्धकारं
माणिक्यभूषणमहोर्मिभिरंशुजालैः ।
धुन्वन्वपुस्तव विभासय मानसे मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ३८

என்னுள்ளத்தில் உள்ள இருளனைத்தையும் மாணிக்கத்தாலான அணிகளின் ஒளிக்கதிர்களால் அகற்றி உமது உருவத்தை என் மனத்தில் ஒளிரச்செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (38)

अन्तर्वसद्भवदुदारपदारविन्द
सन्दर्शनाय मम तत्प्रतिरोधकं द्राक् ।
अंहःकवाटपटलं विघटय्य देव
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ३९

உள்ளே துலங்குகிற உமது திருவடித்தாமரையைக் காண்பதற்குத் தடையாயிருக்கிற பாபமாகிய கதவைத்திறப்பீர். தேவ! தாயான சிவனே! என்னைக் காப்பீர். உமக்கு வணக்கம். (39)

चेतो मम त्वदनुचिन्तनबद्धतृष्णं
मुष्णन्ति तच्च विषया मुहुरेधितार्थाः ।
विघ्नान् जहि त्वयि विजृम्भय भक्तियोगं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ४०

என் உள்ளம் உம்மைத் தொடர்ந்து சிந்திப்பதில் பேராவல் கொண்டது. அதனை வெளிப்பொருள் நாட்டங்கள் ஊட்டம் பெற்றுத் திருடுகின்றன. இடையூறாக உள்ளவற்றை வெல்வீர். பக்தியால் உம்மிடம் சேர்கிற செயலை ஊக்குவிப்பீர். தாயான சிவனே! என்னைக் காப்பீர்.'உமக்கு வணக்கம். (40)

दृक्कूणितेन जगतः खलु सृष्टिरेषा
तेनैव तेऽवनलयौ भुवने निरूढौ ।
तेनैव संहर ममाघततिं दयाळो
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ४१

கண்ணின் ஓரப் பார்வையால் இந்தப் படைப்பும் அதனாலேயே காப்பும் லயமும் உலகில் நடைபெறுகின்றன. அதைக் கொண்டே என் பாப வரிசையையும் ஒடுக்குவீர். தாயான சிவனே! என்னைக் காப்பீர். உமக்கு வணக்கம் (41)

अङ्गं शिरीषमृदुलं परुषैर्ममाश्म-
प्रायैर्वचोभिरभिपीडितमीडनार्थे ।
यत्तावकं तमपराधमिमं सहस्व
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ४२

உமது உடல் வாகைப்பூவைவிட மென்மையானது. உம்மைத்துதிப்பதற்காக எழுந்த எனது சொற்களாகிய கற்களால் அது துன்புறுத்தப்பட்டது. அந்த என் குற்றத்தைப் பொறுத்துக்கொள்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (42)

मन्दस्मितैर्भ्रुकुटिभिर्मधुरैः कटाक्षैः
वामभ्रुवां नवनवैश्च वपुर्विलासैः ।
त्वां नोऽभजं तरळितस्तदिदं सहस्व
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४३

*புன் சிரிப்பாலும் புருவ நெரிதலாலும் இனிய கடைக்கண் பார்வையாலும் புதிது புதிதான உடலசைவாலும் பெண்களிடம் மயங்கிச் சஞ்சலமடைந்த நான் உம்மை வழிபடாதிருப்பதைப் பொறுத்துக் கொள்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (43)*

मन्दस्मितं मदनसुन्दरमिन्दुचूडं
उत्सङ्गविस्फुरदुमोरसिजस्पृशं त्वाम् ।
ध्यायन्वसानि दिवसानि नयन् कदा वा
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४४

*புன் சிரிப்புள்ளவரும் மன்மதனைப் போன்ற அழகரும் சந்திரனைச் சூடியவரும் மடி மீது அமர்ந்த தேவியின் மார்பகத்தைத் தொடுபவருமான உம்மை தியானித்துக் கொண்டே நாட்களைக் கடத்துவது எப்போது? தாயான சிவனே! என்னைக்காப்பீர். உமக்கு வணக்கம். (44)*

पाटीरसारलहरीं तुहिनांशुधारां
सौधाकरीमपि झरीमवमन्यमानः ।
त्वच्चिन्तनप्रभवनिर्वृतिभिः कदा स्यां
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४५

*சந்தனக் குழம்பு போன்ற சந்திரனது நிலவுப் பொழிவை, உம்மைச் சிந்திப்பதால் ஏற்படுகிற பேரமைதியால் பொருட்படுத்தாதவனாக எப்போது ஆவேன்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (45)*

त्वामस्म्यसावजमुपासितुमक्षमोऽहं
मोहान्धया बत धिया न यदेतदेनः ।
हार्या त्वयैव कृपया मम दुर्दशेयं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४६

பிறப்பற்ற உம்மை வெளிப்பொருளில் மயங்கி நிற்கிற புத்தியால் வழிபட இயலாதவனாக உள்ளேன். இது குற்றமல்ல. இந்த கேடுகெட்ட நிலை உம்மாலேயே மாற்றக் கூடியது. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (46)

वित्तार्जनस्य सकलः किमसावनेहा
नेह स्थितेः फलमहो भवतो धनेहा ।
इत्थं दुरीश्वरगिरां पदमस्मि दीनः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४७

பணத்தைத்திரட்ட இந்த நேரம் போதுமானதா? இங்கிருப்பதன் பயன் உன் பணத்தாசை நிறைவு அல்ல. இவ்வாறு கெட்ட யஜமானர்களின் சொற்களுக்கு இடமாகி இரக்கத்திற்கு உரியவனானேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (47)

सांसारिकानवधिखेदपरम्परासू-
न्मज्जन्निमज्जदिव सीदति मानसं मे ।
आश्वासयाशु कृपया न किमीक्षसे त्वं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ४८

பிறப்பிறப்புகளிடையே நேர்கிற துயர அலையில் மூழ்குவதும் எழுவதுமாயுள்ள என் மனம் தளர்கிறது. கருணையுடன் அதற்கு ஆறுதலளிப்பீர். ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறீர்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம் (48)

लक्ष्मीपतिस्तव पदाभरणे स शेते
भिक्षाटनेन वद कं प्रति विप्रलम्भः ।
जानाम्यहं न किमशेषजगत्पतिं त्वां
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥४९

*உம் திருவடிக்காப்புகளில் லக்ஷ்மியின் கணவர் படுத்திருக்கிறார். (ஆதிசேஷனே சிவனின் திருவடிகளிலுள்ள காப்பு) பிச்சை எடுப்பது என்ற வேஷத்தால் யாரை வஞ்சிக்கிறீர்.? நீர் தான் அனைத்து உலகின் காப்பாளர் என்பதை நான் அறியாதிருக்கிறேனா? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (49)*

संसृत्युदन्वति वितन्वति दुःखमोह-
ग्राहैर्व्यथामहह मे दृढमज्जनेन ।
त्वं क्रीडसीति सदृशं तव किं दयाळो
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५०

*ஸம்ஸாரக் கடலில் துக்கம் மோஹம் என்ற முதலைகள் ஆழ்ந்து மூழ்கடித்து என்னை வாட்டுகின்றன. ஆ! ஆ! நீரோ அதனால் விளையாடுகிறீர். இது உமக்கு ஏற்றதா? தயாளுவான தாயாகிய சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (50)*

मात्रा सुगन्धिकचया भवता च पित्रा
युक्तः प्रसूजनकहीन इवावसीदन् ।
अस्मीति वां जगदधीश्वरयोरयुक्तं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५१

*தாயான ஸுகந்தி குந்தலையும் தகப்பனான நீரும் இருந்தும் தாய் தந்தையற்றவன் போல் வாடிக் கொண்டிருக்கிறேன். உலகை ஆள்கிற உங்களிருவருக்கும் இது தகாதது. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (51)*

मौढ्यादपाटवभरादपि पूजनं ते
नाहं तनोमि तदहं व्यथितो भवामि।
विघ्नानपास्य वितर त्वदुपासनां मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५२

*முட்டாள் தனத்தாலும் சக்தியின்மையாலும் உமது வழிபாட்டை நான் செய்வதில்லை. அதனல் வேதனையடைகிறேன். இடையூறுகளை அகற்றி உம்மை வழிபடச் செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர்.! (52)*

त्वद्वन्दनं ननु जगत्त्रयवन्द्यतायै
त्वत्पूजनं तु भुवनत्रयपूज्यतायै।
पुण्योच्चयेन तदिदं भवदीयता मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५३

*உம்மை வணங்குவது மூவுலகமும் (என்னை) வணங்குவதற்குரிமை பெற; உம்மை வழிபடுவது மூவுலகமும் வழிபடுவதற்குரிமை பெற; புண்யக் குவியலால் எனக்கு உம்மைச் சார்ந்தவன் என்ற நிலை கிட்டும். தாயான சிவனே என்னைக் காப்பற்றுவீர். உமக்கு வணக்கம். (53)*

अल्पं महच्च सकलं फलमर्पणीयं
देव त्वयैव खलु तत्किमपीहमानः।
त्वामाश्रयाम्यगतिको वद किं तवागः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५४

*சிறிதும் பெரிதுமான பலனனைத்தையும் நீரே தரவேண்டும். எதையோ விரும்பி வேறு கதியின்றி உம்மைச் சரணடைகிறேன். அதனல் உம்மிடம் தவறு செய்கிறேனு? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (54)*

कन्दर्पदर्पहरसुन्दररूपधेये

मन्दस्मिते भुवनमङ्गळनामधेये।

खेदापहे भवति खेलय मानसं मे

श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ५५

*மன்மதனின் திமிரை அடக்குகிற வடிவழகு கொண்டவரும் புன்சிரிப்புள்ளவரும் உலகிற்கு மங்களம் வழங்குகிற பெயருள்ளவரும், துயர் துடைப்பவருமான உம்மிடம் என் மனத்தை விளையாடச் செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (55)*

सूर्योदये तिमिरजालमिवार्तिजालं

धावेन्न किं मम विभो यदि दृक्पथे स्याः ।

किं मे तथा न दयसेऽनुचितो विळम्बः

श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ५६

*நீர் என் பார்வையில் பட்டால், சூரியனுதிக்கையில் இருள் கூட்டம் போல் என் துயரக்கூட்டமும் ஓடிவிடாதா? அவ்வாறு ஏன் என்னிடம் கருணை காட்டாதிருக்கிறீர். தாமதம் உசிதமல்ல. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (56)*

त्वं त्रायसे यदि निवारयितुं क्षमः को

लभ्यं किमस्ति तव मय्यवसीदतीत्थम्।

किं हीयते मदवने तव किं विळम्बैः

श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ५७

*நீர் காப்பாற்றினால் அதனைத்தடுக்க எவரால் முடியும்? நான் கஷ்டப்பட்டால் உமக்குக் கிடைப்பது என்ன? என்னைக் காப்பதால் உமக்கு என்ன குறைந்து விடும்? ஏன் தாமதம்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர்! உமக்கு வணக்கம். (57)*

चन्द्रोपलामलभवत्कमनीयमूर्ति-

सम्पूजनं सुदृढभक्त्यनघोपचारैः ।

ईहे सदा रचयितुं घटयाशु तन्मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५८

*சந்திர காந்தக்கல் போல் தூயதான உமது அழகியவடிவை திடமான பக்தியுடன் குறையின்றிச் செய்கிற உபசாரங்களால் எப்போதும் வழிபட விரும்புகிறேன். அதனை நிறைவேற்றுவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (58)*

संसारसिन्धुसमुदित्वरखेदमोद-
वीचीपरिभ्रमपरिश्रमनोदनं मे ।
आकल्पय त्वदभिराधनहर्षभूतं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ५९

*ஸம்ஸாரக் கடலில் தோன்றுகிற துயரமும் மகிழ்ச்சியுமான அலைகளில் சுழல்வதால் உண்டாகிற எனது களைப்பை அகற்றுவீர். உமது வழிபாட்டில் பெறப்படுகிற மகிழ்ச்சியை ஏற்படுத்துவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (59)*

भक्तिस्पृशो भवति तस्य न शर्म तेन
त्राणव्रताश्रुतिषु वा न सकृत् प्रपन्नः ।
कस्मात् करोषि करुणां न मयि प्रपन्ने
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६०

*பக்தியைத் தொட்டமாத்திரத்தில் அவனுக்கு இன்பம் இல்லையா? (பக்தியுடன் சரணடைந்தவனைக்) காப்பாற்றுவேன் என்ற உமது விரதத்தைக் கேட்டு அவன் ஒருதடவை கூட அணுகவில்லையா? நான் உம்மைச் சரணடைந்தவன். ஏன் என்னிடம் பரிவு காட்டவில்லை? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (60)*

यन्मां न पालयसि तत्त्वदपाटवाद्वा
यद्वा मदीयदुरिताद्वद नाथ नाद्यः ।

सर्वेश्वरो ननु भवानत एव नान्त्यः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६१

*நீர் ஏன் என்னைக் காப்பாற்றவில்லை? உமது இயலாமையாலா? அல்லது என் பாபத்தாலா? நீர் எல்லாவற்றையும் ஆள்பவர். அதனால் முதலாவது காரணமல்ல. அதனாலேயே இரண்டாவதுமல்ல. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (61)*

विश्वाधिनेतरि विपन्नजनावनस्थे
नाथे सति त्वयि न यन्मम खेदभङ्गः ।
तत्ते यशोहरमतो विनिवेदयामि
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६२

*உலகிற்கு நீர் தலைவர். துயருற்ற மக்களைக் காப்பதில் ஆர்வமுள்ளவர். நீர் என் எஜமானர். இந்நிலையில் என் துயரகற்றப் படாவிடில் உம் புகழ் நீங்கும். அதனால் தெரிவிக்கிறேன். தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர்! உமக்கு வணக்கம். (62)*

अस्योद्यतस्समुपरोद्धुमनात्मनीनं
सत्यं भवानघफलार्त्यनुभावनासु ।
नेशस्तु सोढुमियदस्म्यहमार्तबन्धौ
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६३

*தன்னைச் சாராதவனை என்னைப் பாப பலனை அனுபவிக்கச் செய்வதில் நீர் முனைந்துள்ளீர். துயருற்றவரைக் கட்டியணைக்கவேண்டிய உம்மிடம் இந்த இத்தனைக் கொடும் எண்ண மிருப்பதை தாங்க நான் இயலாதவனாக உள்ளேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (63)*

आमज्जतः प्रतिपदं विपदम्बुराशौ
दस्तं मम श्वसितुमप्यनधीश्वरस्य ।

किं पश्यतस्तव दया न कियान् विळम्बः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६४

*ஒவ்வொரு அடியிலும் கஷ்டம் என்ற கடலில் மூழ்கி, மூச்சுவிடக் கூட இயலாத இவனைத் திமிருடன் பார்த்துக் கொண்டிருக்கிற உமக்குத் தயை இல்லையா? எவ்வளவு தாமதம்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (63)*

स्वर्धेनवो न कति नो कति कल्पवृक्षाः
भ्रूवश्यतां न कति यान्त्यपरेऽप्युदाराः
भक्तिस्पृशां त्वयि भजे तमहं भवन्तं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६५

*காமதேனுக்கள் எத்தனையோ இல்லையா? கல்பகமரங்கள் எத்தனையோ இல்லையா? வாரி வழங்குகிற இயல்புள்ளவை எத்தனையோ உன் புருவ நெரிப்பிற்கு வசப்படுகின்றன அல்லவா? பக்தியை உணர்பவர்களில் உம்மையே சரணடைந்தேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (65)*

एनामुपप्लवभरैर्जटिलामवस्थां
प्राप्तं हि मां परिहसन्ति नितान्तमन्ये ।
त्वञ्चेन्न पश्यसि दयार्द्रदृशा गतिः का
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६६

*இந்தத் துயரச் சுமை சூழ்ந்த என்னை மற்றவர் நன்குபரிகாசம் செய்கின்றனர். நீயும் பரிவால் நனைந்த கண்களால் காணுவிடில் எனக்கு ஏதுகதி? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (66)*

श्रीशश्शरः कनकभूमिधरश्शरासो
वासस्तु रूप्यशिखरी धनदस्सखा ते ।
त्वामाश्रितस्य मम किन्न धुनोषि दैन्यं
श्रीमातृभूत शिव पालय मा नमस्ते ॥ ६७

*லக்ஷ்மீயின் பதி உமக்கு பாணம். தங்க மலையான மேரு வில். வெள்ளிமலை இருப்பிடம். குபேரன் நண்பன். உம்மை அண்டிநிற்கிற எனது தீனநிலையை நீர் ஏன் உதறித்தள்ள வில்லை? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (67)*

**अत्यङ्कुरार्णमुखखेदमहार्णवेऽस्मिन्**

**मग्नस्य शङ्कर ममोत्तरणं प्रकल्प्य ।**

**त्वत्पूजनं घटय सङ्क्षपितान्तरायं**

**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६८**

*மூளை விட்டு வளர்கிற கடன் முதலான துயரப் பெருங்கடலில் மூழ்கிய என்னைக் கரையேற்றிய பின் இடையூறின்றி உம் பூஜையை நடத்திக் கொள்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (68)*

**लोकेऽतिवर्तितुमलं तव शासनं कः**

**पद्मासनो भवतु पद्मविलोचनो वा ।**

**तद्दुर्लिपिं विधिकृतामपि मे विलुम्प**

**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ६९**

*ப்ரஹ்மாவோ விஷ்ணுவோ எவராயினும் உம்மை மீறி நடக்க இயலாது. அதனால் விதி எழுதிய கெட்ட தலையெழுத்தையும் நீர் அழிப்பீர். தாயான சிவனே! என்னைப் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (69)*

**निस्सारतामपि विदन्विषयेष्वमीषु**

**निस्सीमसक्तिरहमेषु हि गाढमूढः ।**

**रक्ष्यस्त्वयैव करुणानिधिना प्रसह्य**

**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७०**

*இந்த வெளிப் பொருளனைத்தும் சாரமற்றவை என அறிந்தும் மோகத்தால் மதியிழந்தவனாக இவற்றில் எல்லையற்றபற்றைக் கொண்டுள்ளேன். கருணாநிதியான உம்*

மால் மட்டுமே வலிவில் நான் காப்பாற்றத்தக்கவன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர் உமக்கு வணக்கம். (70)

मञ्चे तरङ्गितमणित्विषि पुष्पक्लृप्ते
मन्दस्मितं सह कदाऽम्बिकया भवन्तम्।
पश्यामि पश्चिमतनूपहितोपबर्हं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७१

ரத்தின ஒளி அலைபாய்கிற பூவாலான கட்டிலில் புன்சிரிப்போடு முதுகால் தலையணையில் சாய்ந்து கொண்டு அம்பிகையுடன் உள்ள உம்மை எப்போது காண்பேன்?. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர் ! உமக்கு வணக்கம். (71).

मय्यात्मनीनविमुखे मलिनस्वभावे
निर्वेदसागरनिमज्जनविप्लवेऽस्मिन्।
कस्माद् भवस्यकरुणः करुणानिधे त्वं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७२

தன்னைச் சார்ந்தவரிடம் பராமுகமாக உள்ளவனும் தூய்மையற்ற இயல்புள்ளவனும் இல்லாமையெனும் கடலில் மூழ்கியவனுமான என்னிடம் ஏன் கருணையின்றி இருக்கிறீர். கருணைநிதியே! தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (72)

रुद्राक्षभृद् भसितभूषणधन्यमूर्तिः
भावं वहन् प्रमुदितं भवदेकतानम्।
कालं क्षिपेयमिति साधय कामनां मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७३

ருத்திராக்ஷமணிந்து விபூதிபூசியதால் பாக்யசாலி என்ற உணர்வுள்ளவனுக உள்ளத்தில் உம்மிடம் மட்டுமே நிலைத்த எண்ணத்துடன் காலத்தைக் கழிப்பேன் என்ற எனது ஆசையை

*நிறைவுறச்செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர் உமக்கு வணக்கம். (73)*

**त्वं चिद्घनोऽस्यहमसौ जडिमैकसीमा**
**दुःखाकरः पुनरहं सुखशेवधिस्त्वम्।**
**युक्ता न ते स्थितिरियं तव गर्भवासे**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७४**

*நீர் இறுகிக் கனத்த பேரறிவுள்ளவர். நான் ஜடத் தன்மையின் எல்லை. நான் துக்கத்தின் சுரங்கம். நீரோ இன்பத்தின் வைப்பிடம். உம் கருவிலுள்ள என்னிடம் இவ்வாறு பராமுகமாயிருப்பது தகாதது. தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம்.(74).*

**खेदं हरिष्यसि कदा शिशिरैः कटाक्षैः**
**मोदं करिष्यसि कदा मृदुभिर्वचोभिः ।**
**इत्युत्सुकोऽस्मि करुणां कुरु किङ्करेऽस्मिन्**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७५**

*உம் குளிர்ந்த கடைக்கண் பார்வையால் எப்போது துயரைப் போக்குவீர்? இனிய பேச்சால் எப்போது மகிழ்ச்சி தரப் போகிறீர் என்று எதிர் பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். உமது ஏவலாளனான என்னிடம் கருணை புரிவீர். தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (75).*

**पाति प्रसह्य न किमर्भकमात्मनीनं**
**संयोजकैर्गुरुजनः स्मर तं क्रमं त्वम्।**
**भक्तिं बलाद् भवति कल्पय मे दयाळो**
**श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७६**

*தன் குழந்தையை வலிவில் சென்று பெற்றோர் தேவைப்படுபவைகளைத் தந்து காப்பாற்றுவதில்லையா? அந்த முறையை நினைத்துப் பார்ப்பீர். தயை மிக்கவரே ! உம்மிடம்*

வலிவில் பக்தி வரும்படி செய்வீர். தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (76).

सोऽहं न किञ्चिदपि साधु करोमि पापः
तुङ्गं पदं त्वभिलषामि तदप्यलज्जः ।
त्वद्दातृतासदयतागरिमावमर्शी
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७७

நான் பாபி. நல்லதெதையும் செய்யவில்லை. வெட்கமின்றி மேலான நிலையைப் பெற விரும்புகிறேன். உமது வள்ளல் தன்மை, பரிவு, பெருமை இவற்றை மனத்தினுள் நினைத்துப் பார்க்கிறேன். தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (77).

शक्तो न कश्चिदपि शासनमन्तरा ते
कस्सेव्यतां त्वदितरः किमितः फलं वा ।
स्वामिन्नुपैमि शरणं करणैस्त्रिभिस्त्वां
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७८

உம் வழிகாட்டலின்றி எதனையும் செய்ய இயலாதவன். உம்மைத் தவிர வேறு எவரை வழிபடுவேன்? அதனால் என்ன பயன்? உடமையாளரே ! உம்மை மனம் - வாக்கு - காயங்களால் சரணடைகிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (78).

मृत्युञ्जयोऽसि कमलापतिवल्लभोऽसि
तन्मृत्युदैन्यविपदोरपदं त्वदीयम् ।
त्वामाश्रितस्य मम किं सदृशी दशेयं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ७९

நீர் யமனை வென்றவர். லக்ஷ்மீபதியின் அன்புக்குரியவர். அதனால் மரணத்திற்கோ, ஏழ்மைக்கோ உம்மிடம் இடம் இல்லை. உம்மை அண்டிய எனக்கு இந்நிலை உகந்ததா? தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (79).

किं जामिता न भवतो मम दुःखधारा-
निर्मातुरस्मृतिपदं किमुपांशुयाजः।
कस्मात्प्रभो किमपि शर्म न किं विधत्से
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ ८०

*துக்கப் பெருக்கை உண்டாக்கிய உமக்குச் சோம்பலா ? மனத்திற்குள் வழிபட்டது நினைவிற்கு வரவில்லையா ? ஏன் சிறிதும் நிம்மதிதரவில்லை? ஆள்பவரே ! தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர் ? உமக்கு வணக்கம் (80).*

काहं क चोन्नतपदस्पृहयालुतेयं
आत्मैव मामपहसत्यधुना तथापि।
त्वत्संश्रये सति किमस्ति दुरापमीश
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ ८१

*நான் எங்கே ! பெரு நிலை பெறச் சபலம் எங்கே ! என் ஆத்மாவே என்னை இப்போது ஏளனம் செய்கிறது. உமது அணைப்பு உள்ளபோது கிடைக்காதது எது? ஈசனே ! தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (81).*

कस्याग्रतः प्रकटयानि रदानकाण्डे
कं हर्षयाणि नुतिभिः कमुपाश्रयाणि।
मोघः श्रमेषु निपतेयमतो दयेथाः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते॥ ८२

*யார் எதிரே பற்களைக் காட்டுவேன்? யாரை துதிபாடி மகிழ்ச்சியடையச் செய்வேன்? யாரை அண்டுவேன்? எனது யத்னம் வீணாகி உழைப்பால் களைத்து வீழ்ந்து விடுவேன். அதனால் பரிவு காட்டுவீர். தாயான சிவனே ! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம் (82).*

किं विद्यया किमु धनेन किमात्मजैर्वा
किं जायया किमितरैस्त्वयि चेन्न चेतः।

आनन्दशेवधिमतस्त्वयि देहि भक्तिं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ८३

*உம்மிடத்தில் மனம் பதியாதிருந்தால் கல்வியாலோ செல்வத்தாலோ மனைவிமக்களாலோ ஆவதொன்றுமில்லை. அதனால் உம்மிடம் ஆனந்தம் நிரம்பியுள்ள நிதியான பக்தியை எனக்கு அளிப்பீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம் (83)*

दासोऽस्मि दैन्यविवशस्त्वयि सर्वलोक-
साम्राज्यसम्पदमकम्पितमश्नुवाने ।
यत्तन्न ते समुचितं विमृश प्रसीद
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ८४

*நான் உம் அடிமை. ஏழ்மையால் தன் நிலை இழந்துள்ளேன். எல்லா உலகமேலாண்மையின் சிறப்பை அசைக்க முடியாதவாறு அனுபவிக்கிற நீர் இருக்கும் போது, இது உசிதமல்ல அல்லவா? ஆராய்வீர்! அருள்வீர்! தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (84)*

त्वामाश्रितस्त्वदितराश्रयदैन्यभङ्गं
अङ्गीकरोमि जगदीश कथं कथं वा ।
त्वां नायशः स्पृशतु तत्त्यज मय्युपेक्षां
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ८५

*உம்மை அண்டியுள்ள நான் உம்மைத்தவிர வேறொருவரால் என் ஏழ்மை மடிவதை எப்படி ஏற்பேன்? உலகின் ஈசனே! எப்படி உம்மிடம் கெட்டபெயர் படராமலிருக்கும்? அதனால் என்னிடம் பராமுகத்தைக் கைவிடுவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (85)*

श्रान्तं वपुर्दुरधिपाश्रयधावनान्मे
श्रान्तं वचो दुरधिपस्तुतिधोरणीभिः ।

क्रान्तं मनो दुरधिपाश्रयचिन्तयैव
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ८६

*கெட்ட எஜமானரை அண்டி ஓடியாடியதால் உடல் களைத்தது. அவரைத் துதிபாடியதில் வாய் களைத்தது. அவரது துணையைப் பற்றி எப்போதும் சிந்தித்ததால் மனம் களைத்தது. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (86)*

हेमस्फुरत्तनुतरङ्गितकान्तिधारा-
सम्प्लाव्यमानमणिभूषणदिव्यभासम् ।
मन्ये भवन्तमुमया मणिहेमपीठे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ८७

*தங்கம் போன்ற மேனிஒளியலையில் ரத்தின ஆபரணங்களின் ஒளி மிதக்கத் தெய்விக ஒளி கொண்ட உம்மை ரத்னம்பதித்த தங்கபீடத்தில் உமாதேவியுடன் தியானிக்கிறேன். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (87)*

स्वानन्दबिन्दुलव सम्प्लवमानसर्व-
ब्रह्माण्डमण्डलमखण्डितवैभवं त्वाम् ।
कस्तोषयेत्तदपि तुष्य परिभ्रमैर्मे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ८८

*தனக்குள்ளே உள்ள ஆத்மானந்தத்தின் சொட்டுகளில் பிரும்மாண்டமண்டலத்தை மிதக்கவிட்டும் சிறிதும் பெருமை குன்றாத உம்மை எவனால் திருப்திப்படுத்த முடியும்? எனினும் எனது பரபரப்புள்ள வழிபாட்டால் திருப்தியடைவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (88)*

कारुण्यनिर्भरसुधारसशीतलाभिः
काले कदा तव कटाक्षपरंपराभिः ।
कष्टां दशामुपजहानि दृढोपगूढः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ८९

கருணை நிறைந்து அமுதரஸம் பொழியக் குளிர்ந்துள்ள உமது கடைக்கண்பார்வை வரிசையால் நன்கு அணைக்கப்பட்டு என்று நான் கஷ்ட நிலை நீங்கிநிற்பேன்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர் உமக்கு வணக்கம். (89)

भक्ताभिभूत्यसहनो भवसि प्रतीतो
भक्तोऽस्म्यहं त्वदभिधाग्रहणप्रसक्तः ।
तस्यास्य ते मयि कृपा न कथं विषण्णे
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९०

பக்தனுக்கு நேர்கிற அவமதிப்பைத் தாங்காதவர் என உலகம் உம்மிடம் நம்பிக்கை கொண்டுள்ளது. உம் நாமத்தைச் சொல்வதில் ஈடுபட்ட நான் உமது பக்தன். நானோ கலங்கி நிற்கிறேன். என்னிடம் உமக்குப் பரிவு ஏன் ஏற்படவில்லை? தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (90)

दृक्केळयस्तव कृपारसशीकराङ्काः
यास्तासु तत्तदवनप्रवणासु चेत् स्यात् ।
एका पुनर्मदवनप्रवणा क्षतिः का
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९१

உமது பார்வையின் விளையாட்டுகள் கருணைச்சாறு நிரம்பியதால் குளிர்ந்துள்ளன. அவை தன் வழியில்படுகிற அவரவர்களைக் காப்பதில் ஈடுபடுகின்றன. அவற்றில் ஒன்று என்னைக் காக்க முற்படட்டுமே! அதனால் உமக்கு குறையேது? தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (91)

श्रेयो रुणद्धि यदि पापगणस्तदा त्वां
त्वन्नामकीर्तनमघक्षपणक्षमं मे ।
किन्नास्ति किं न दयसे मयि हन्त खिन्ने
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९२

என்பாபக் கூட்டம் என்மேன்மைக்குத் தடையாக நிற்கிறதென்றால், உம் நாமத்தைக் கூறுவது அந்தப் பாபத்தை

*நீக்குவதில் திறமை பெற்றதல்லவா? துயருற்ற என்னிடம் ஏன் பரிவின்றி உள்ளீர்? தாயான ஈசனே! .என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (92)*

तातप्रसूतनयदारसुहृद्भिरेवं
अर्थोपपत्तिविरहादहहावसीदन् ।
नेतुं क्षणं न निपुणोऽस्मि ततः प्रसीद
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९३

*தந்தை, தாய், மக்கள், மனைவி, நண்பன் இவர்களைக் காப்பாற்றப் போதுமான பொருள் இல்லாமையால் வருந்திநிற்கிற நான் காலத்தைப் போக்கத் திறமையற்றவனுயுள்ளேன. அதனால் அருள்வீர். தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (93)*

श्रीशैलराजसुतया शिशिरैः कटाक्षैः
मां वीक्ष्यमाणमसकृन्मधुरस्मितेन ।
सम्भावयन्मयि कदा नु दयिष्यसे त्वं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९४

*மலையரசன் மகளால் பரிவுடன் குளிர்ந்தபார்வையால் அடிக்கடி பார்க்கப் படுகிற என்னைப் பொருட்படுத்திப்புன் சிரிப்புடன் எப்போது பரிவு காட்டுவீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (94)*

पारे भवाख्यजलधेर्भगवन् कृपाकू-
पारे भवत्यवतरिष्यति मे कदा वा ।
प्रेम्णा तृणीकृतपदं सकलं वितन्वन्
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ।। ९५

*பகவானே! ஸம்ஸாரக் கடலின் அக்கரையில் உள்ள கருணைக் கடலில் நீர் எனக்காகத் தோன்றி அன்பால் தன் நிலையைப் புல்லாக மதித்து (பொருட்படுத்தாமல்) எனக்காக அனைத்தையும் எப்போது செய்வீர்? தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (95)*

निर्धूतदुस्तिमिरमस्तसमस्ततत्तद्-
दुर्वासनं हृदयमेतदये वितन्वन्।
अस्मिन् भविष्यसि कदा नु सुखं निषण्णः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ९६

என் இதயத்தினுள் உள்ள கெட்ட இருளையகற்றி அந்தந்த எல்லா கெட்ட வாஸனைகளையும் நீக்கி, எப்போது அதில் சுகமாக அமர்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (96)

मद्वर्णनैस्तव कदाऽस्तु मनःप्रसादो
मद्दृक्पथेऽस्तु च कदा तव दिव्यमूर्तिः।
मत्कर्णगं तव वचोऽस्तु कदेति साशं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ९७

எனது துதிகளால் எப்போது உம் மனம் குளிரும்? என்கண்களுக்கெதிரே உம் வடிவம் எப்போது தோன்றும்? உம்மைப்பற்றிய (உமது) பேச்சு எப்போது என் காதில் விழும்? என எதிர்பார்க்கிற என்னைத் தாயான சிவனே! காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (97)

कालेऽर्कनन्दनलुलायकटुस्वनोद्य-
त्कर्णज्वरापनयनैर्भवदुक्षजैर्मे।
ध्वानामृतैः किमपि शर्म विनिर्मिमाणः
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ९८

அந்த நேரத்தில் யமனின் எருமையின் கொடூரமான ஒலியால் ஏற்பட்ட காதுவலியை அகற்றுகிற உமது எருதின் எக்காளமாகிற அமுதத்தால் ஏதோ ஒரு இனமறியாத சந்தோஷத்தைத் தருபவராக தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (98)

यं ते दया स्पृशति तन्नयनान्तदासाः
ब्रह्मादयो जगति दीननास्पदा सा।

दीनाग्रणीरहमतः पुनरुक्तिरेषा
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ ९९

*உன் தயை எவனைத் தீண்டுகிறதோ, அவனது கடைக் கண்பார்வைக்கு பிரும்மாதியரும் அடிமை. உலகில் எளியமக் களுக்கு அது தங்குமிடம். எளியவர்களில் நான் முன் நிற்பவன். அதனால் திரும்பச் சொல்வதாகும் இது! தாயான ஈசனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (99)*

अन्यन्न मेऽभिमतमीश तदर्प्यतां वा
मा वेप्सितं तु तदिदं भवताऽर्पणीयम् ।
यत्सर्वदा निभृतवृत्त्यभिधानमित्थं
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ १००

*எனக்கு வேறு எதுவும் வேண்டாததே. அதனைக் கொடுப்பீர்! அல்லது கொடுக்காமலிருப்பீர்! விரும்பியதைத் தான் நீர் தருவது உசிதம். அது மனமொன்றி உமது நாமத்தை இவ்வாறு கூறுவதே. தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர்! உமக்கு வணக்கம். (100)*

हे शङ्कर स्मरहर प्रमथाधिनाथ
मन्नाथ साम्ब शशिचूड शिव त्रिशूलिन् ।
श्रीचित्सभेश करुणाकर फालनेत्र
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ १०१

*ஹே சங்கர! மன்மதனை அழித்தவரே! பிரமதகணத் தலைவரே! என் நாதரே! அம்பிகையுடன் கூடியவரே! சந்திரனைச் சூடியவரே! சிவ! திரிசூலமேந்தியவரே! சித்ஸபாநாதரே! கருணையின் இருப்பிடமே! நெற்றிக்கண்ணரே! தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (101)*

एवं स्तवं प्रपठतां उपशृण्वताश्चा-
रोग्यायुरच्छशिवभक्तिधनर्द्धिविद्याः ।

दद्यास्सुतानपि यशश्च विमुक्तिमन्ते
श्रीमातृभूत शिव पालय मां नमस्ते ॥ १०२

*இந்தத் துதியைப் படிப்பவரும் கேட்பவரும், நோயின்மையும் ஆயுளும் தூய சிவபக்தியும் செல்வமும் செழிப்பும் கல்வியும் மக்களும் புகழும் பெற்றுக் கடைசியில் முக்தியும் பெறச் செய்வீர். தாயான சிவனே! என்னைக் காப்பாற்றுவீர். உமக்கு வணக்கம். (102)*

श्रीमातृभूत शिव चन्दनसान्द्रलिप्तां
सङ्कुमहेमतिलकां श्रितपुष्पमाल्याम् ।
अक्ष्णाऽमुना तव तनुं पिबतोऽक्ष्युदन्या
स्यान्मे यथाशु फलिनीश तथा दयेथाः ॥ १०३

*தாயான சிவனே! சந்தனக் குழம்பைப்பூசி, தங்கத்திலகமிட்டு, பூமாலே தரித்த உம் வடிவத்தை இந்தக்கண்ணுல் பருகுவதால் கண்களின் (உம்மைப்பருகு வதிலுள்ள) ஏக்கம் (தாகம்) பயனுள்ள தாகட்டும். அவ்வாறு தயை புரிவீர். (103)*

मनो मे विक्रीतं तव चरणसेवां कलयितुं
कृपामूल्यं लब्धं सुरभिचिकुरे सम्प्रति मया ।
न जाने तद्दुष्टं निवसति च वा धावति च वा
कृतं भूयो भूयः करतलयुगास्फालनमुमे ॥ १०४

*ஸுகந்திகுந்தளாம்பிகையே! உமையே! உனது திருவடிஸேவை செய்ய என் மனத்தை விற்றேன். இப்போது அதன் விலேயாக உமது கிருபையைப் பெற்றேன். அது என்னிடம் தங்குமா? மதிகெட்டு ஓடிவிடுமா? தெரியாது. அதனுல் இரு உள்ளங்கைகளேயும் அடிக்கடி தட்டுகிறேன். நாம கீர்த்தனத்திற்குத் துணேயாக தாளம் போடுகிறேன்.*

**ஸ்ரீமாத்ருபூத சதகம் முற்றிற்று**

## श्रीशिवाभ्यां नमः

## ४. स्तुतिपद्धतिः

## 4. ஸ்துதிபத்ததி

नमस्ते भीमाय श्रुतिशिखरसीमाय च नमो
नमस्ते शर्वाय क्षपितयमगर्वाय च नमः ।
नमस्ते रुद्राय स्फुरदवनमुद्राय च नमो
नमस्ते साम्बाय त्रिजगदवलम्बाय च नमः ॥ १

*பயம் தருபவருக்கு நமஸ்காரம். வேதத்தின் தலைப்பகுதியான உபநிஷத்துகளின் கடைப்பொருளானவருக்கு நமஸ்காரம். உலகைச் சிதைப்பவருக்கு நமஸ்காரம். யமனின் திமிரைக் குறைத்தவருக்கு நமஸ்காரம். ருத்திரருக்கு நமஸ் காரம். காக்கும் அடையாளத்தை (ரக்ஷா முத்திரையான அபயத்தைக்) காட்டுபவருக்கு நமஸ்காரம். அம்பிகையுடன் கூடியவருக்கு நமஸ்காரம். மூவுல கிற்கும் பிடிப்பானவருக்கு நமஸ்காரம். (1)*

अलिन्दसुरपादपः श्रितवतां दयातोऽर्जुने
पुलिन्दवपुराप्तवानघहरस्वनामाक्षरः ।
मिलिन्दकचयैकया मिलितवामभागः स्फुर-
त्कलिन्दतनयोर्मिनिर्मलगळोऽयमस्मत्प्रभुः ॥ २

*இந்த நமது பிரபு தன்னை அண்டியவருக்கு வாயிற்படியிலுள்ள கற்பகமரம். அர்ஜுனனிடம் பரிவால் வேடவடிவெடுத்தவர். பாபம் நீக்குகிற எழுத்துக்களைக் கொண்டபெயருள்ளவர். ஒரு வண்டார் குழலியம்மையுடன் இடது புறத்தில் இணைந்தவர். யமுனையின் நீரலை ஒளி போன்ற தூய (கருத்த) கழுத்துள்ளவர். (2)*

नैवाकारं कमपि सहते तात्त्विकं नो गुणं वा
पार्थक्यं वा न तव कियदप्यन्ततोऽस्मत्प्रतीचः ।
आम्नायानां विततिरपरिच्छेदमावेदयन्ती
त्वद्रूपस्यानघसुखचिदेकायनस्य स्मरारे ॥ ३

மன்மதனின் எதிரியான சிவபெருமானே! வேதங்களின் வரிசையானது குறையற்ற பேரானந்தத்திற்கும் பேரறிவிற்கும் ஒரே குடியிருப்பிடமான உமது வடிவம் எந்த அளவீட்டிற்கும் உட்படாத நிலையை விளக்குகிறது. அதனால் தத்துவ அளவில் உருவமோ குணச் சிறப்போ ஒன்றுக்கொன்று காட்டுகிற வேறுபாடோ உமக்கு இருப்பதாக அவை ஏற்கவிரும்பவில்லை (3)

आत्मानं नश्शिव परचिदानन्दरूपं भवन्तं
मन्दात्मनो वयमकुशलाः पर्युपेतुं तदास्ताम्।
उच्चान्नीचानपि हि गहनादुद्धरन्तीन्दुगौरी
गौरीजानेर्जयति करुणा कापि ते सा गतिर्नः ॥ ४

சிவபெருமானே! நீர் பேரறிவும் பேரானந்தமும் வடிவாகக் கொண்ட எம் ஆத்மா. அறிவிலிகளான நாங்கள் உம்மை அணுகி அறியத்திறனற்றவர்கள். அது இருக்கட்டும். கௌரியின் மணாளனான உமது கருணையானது சந்திரனைப்போன்று வெண்ணிற முள்ளது. அது பாழிடத்திலிருந்து மேலோரையும் கீழோரையும் தூக்கிவிட்டுக் கொண்டு விளங்குகிறது. அது எமக்குப் புகலிடமாகும். (4)

ब्रूमः किं वा पुरहर चिदानन्दरूपस्वरूपं
साम्राज्यं नस्त्वमसि तदपभ्रंशसङ्क्लेशिताः स्मः।
तल्लाभाय प्रतिभवति तत्तावकं दिव्यरूपं
गौरं गौरीलसितमसितग्रीवमर्धेन्दुचूडम् ॥ ५

முப்புரம் வென்றவரே! பேரறிவும் பேரானந்தமும் வடிவானவரே! உம் வடிவைப்பற்றி என்ன சொல்வோம். நீர் எமது ஸாம்ராஜ்யம். அதிலிருந்து நழுவியதால் துயருற்றோம். அதனைத் திரும்பி அடைய உமது தெய்வத் தன்மை மிக்க வடிவமே தக்க ஆற்றல் தரும். அது வெண்ணிற முள்ளது. கௌரியால் அழகுற்றது. கருத்த கழுத்துள்ளது. பாதிச் சந்திரனைச் சூடியது. (5)

रूपं मे चिद्घनमनुपमं दर्शयन्त्यागमान्ताः
हन्त श्रान्तो गहनकुहनैकान्तदक्षैस्तदक्षैः।

नाप्नोम्येतैरुपगतभवत्सन्निधिश्चोपरुध्ये
नार्हस्येनं पुनरशरणं नाथ सर्वज्ञ हातुम् ॥ ६

எல்லா மறிந்தவரே! உமது வடிவம் இறுகிய பேரறிவானது, ஈடிணையற்றது என உபநிஷத்துகள் எனக்குக் காட்டுகின்றன. உட்புக இயலாததும் ஏமாற்றம் தருவதும் தனிமையில் உணரப்பெறுவதுமான அதனைக்காண்கிற பயிற்சியில் களைத்துவிட்டேன். உமது அருகாமையை அடைந்த பிறகும் இம் முயற்சி களால் தடைபட்டு நான் அக்காட்சியைப் பெறவில்லை, நாதனே! வேறுபுகலிடமற்ற என்னைக் கைவிடுவது உமக்கு ஏற்றதல்ல. (6)

मान्द्यं क्वैतत् गहनकुहनैकान्तिकः क्वाक्षवर्गो
निस्तीर्यैतत् कुसृति शिव तल्लभ्यते न प्रवक्तुम् ।
दिष्ट्या तु त्वामधिगतवतो हस्तलग्ना जयश्रीः
दृष्टे भानौ न खलु तमसां प्रागिव स्यात्प्रचारः ॥ ७

சிவ பெருமானே! இந்த அறிவு மந்தநிலை எங்கே! உட்புக இயலாததும் ஏமாற்றம் தருவதும் தனிமையில் உணரத்தக் கதுமான அந்தக் காட்சி (சிவானந்த அனுபவம்) எங்கே! இந்தவக்கிரச் சுழலைத் தாண்டியதும் அது கிட்டும் எனச் சொல்ல இயலாது. எதிர்பாராத பாக்யத்தால் உம்மை அடைந்தவனது கையில் ஜயலக்ஷ்மீ சிக்கியுள்ளாள். சூரியனைக் கண்டதும் முன்னைப்போல் இருள் சூழ இயலாதல்லவா? (7)

रूपं ते चित्सुखमपि शिव त्रिव्यवच्छेदशून्यं
तल्लीलैतद् भवति चिदचिद्वस्तुजातं तदास्ताम् ।
नन्दामि त्वामहमनुभवंस्तत्तदुत्कर्षरूपं
स्यादुत्कर्षः किमु सुखचिदुन्मेषतः कश्चिदन्यः ॥ ८

சிவ பெருமானே! உன் உருவம் பேரறிவும் பேரானந்தமுமாகும், காலத்தாலோ இடத்தாலோ வேறுபொருளாலோ அளவிட இயலாதது, இந்த அறிவுள்ளதும் அறிவற்ற ஜடப் பொருளும் அதன் விளையாட்டே! அது இருக்கட்டும். அந்தந்த நிலைகளின் சிறப்பை உணர்கிற நான் ஆனந்தமடைகிறேன். பேரறிவையும் பேரானந்தத்தையும் உணர்வதைவிட வேறு சிறப்பு உள்ளதா? (8)

अमूर्तं परं वाऽपरं वाऽथ मूर्तं परं वापि यत्ते वपुर्यच्च नाम।
दिशैकत्र तत्रानिशैकाग्रतां मे तदभ्यर्थये त्वां दयस्वेन्दुमौळे ॥ ९

*சந்திரனைச் சிரசில் சூடியவரே! உருவற்றதும் உருவுள்ளதும் அருகில் காட்சிக்குட்படுவதும் காட்சிக்கு அப்பாற்படுவதுமாக உம் உடல் எவ்வகையிலாவது இருக்கட்டும். பெயர் ஏதேனும் இருக்கட்டும். அவற்றை ஓரிடத்தில் காட்டுவீர். அதில் இராப்பகலின்றி ஒருமுனைப்பைத் தருவீர். தயை செய்வீர். நான் இதனை வேண்டுகிறேன்.(9)*

त्वद्दिव्यमूर्तिपरिचिन्तनधारया वा त्वद्दिव्यनामपरिकीर्तनधारया वा।
कालं यथा शिव नयामि तथा दयस्व नो चेदनेन मम किं हतजीवनेन ॥

*உனது திவ்விய உருவத்தைப் பற்றித் திரும்பத் திரும்பயோசிப்பதிலும் திவ்விய நாமத்தை திரும்பத்திரும்பக் கூறுவதிலும், நான் பொழுதைக்கழிக்கத் தயை புரிவீர். அவ்வாறு இல்லையெனில் இந்தப் பாழும் வாழ்வால் என்ன பயன்? (10)*

उच्चनीचसदसत्सुखदुःखाद्युच्चलद्विविधरूपधरः किम्।
वञ्चयस्यहह पञ्चशरारे वञ्चनां तदिह मुञ्च नमस्ते ॥ ११

*ஐந்து பாணங்கள் கொண்ட காமனின் எதிரியே! உயர்ந்ததும் தாழ்ந்ததும் நல்லதும் பொல்லாததும், இனியதும் துன்பமுள்ளதும் என மாறிமாறிப் பல வேஷம் கொண்டு என்னை ஏமாற்றுகிறீரே! இந்த வஞ்சனையைக் கை விடுவீர். உமக்கு வணக்கம்.(11)*

तत्तद्रूपं वहसि विहरन्नैकरूपैः प्रकर्षैः
तांस्तान् गोपायसि तदुपधिस्त्वं तदाराध्यमानः।
विश्वत्राणप्रणय शिव ते वैभवं तद्वराको
बोद्धुं नेशो भवसि शरणं त्वं ममेदं तु जाने ॥ १२

*சிவனே! பல்வேறு சிறப்புகளுடன் வெவ்வேறு வடிவங்களை ஏற்கிறீர். அதனையே அடையாளமாக்கி அதற்கே*

வழிபாட்டைப் பெறுகிறீர். அவற்றுள் சிலவற்றை மறைக்கிறீர். உலகைக் காப்பதில் அன்புடன் ஈடுபடுபவரே! இந்தப் பதராகிய நான் அதனை உணர இயலாதவன். எனக்கு நீரே புகலிடமாயுள்ளீர் என்பதை மட்டும் அறிவேன். (12)

**स्वकरप्रतिपादितस्वचापः**
**स्वदृगम्भोजसमर्चितस्वकाङ्घ्रिः ।**
**स्वपदाम्बवतंसितस्वमूर्धा**
**शरणं मेऽस्तु स कोऽपि विश्वहेतुः ॥ १३**

தன்கையால் தன் வில்லை ஒடித்தவர். தன் கண்களான தாமரைகளால் தன் திருவடிகளில் அர்ச்சித்துக் கொண்டவர். காலடி நீரால் தன் தலையை அலங்கரித்துக் கொண்டவர். உலகின் மூல காரணமான அந்த ஏதோ ஒன்று எனக்குப் புகலிடமாகட்டும்.

(சிவனும் விஷ்ணுவும் ஒருவரே! ராமராகிச் சிவவில்லையொடித்தார். விஷ்ணுவாகி திருவீழிமிழலையில் தன் கண்களையே தாமரையாக்கி சிவனை வழிபட்டார். விஷ்ணுவின் திருவடிகளிலிருந்து பெருகிய கங்கையைச் சிவன் தன் தலையணியாக்கிக் கொண்டார்) (13)

**श्रीपत्युमापतिपदाद्यभिधेयमूर्ति-**
**रूपं तथा हरिहरादिमनामरूपम् ।**
**रूपं तवेश सुखचिद्वपुषो द्विरूपं**
**त्वत्प्राप्तिकल्पलतिकोदयबीजभूतम् ॥ १४**

ஈசனே! பேரானந்தமும் பேரறிவுமான உமது உருவம் இரு வடிவங்களைப் பெற்றது, லக்ஷ்மீபதி உமாபதி என்று இரு பெயர்களால் அறிமுகப்படுத்திக் கொண்டது. ஹரி ஹரன் என்ற பெயரும் உருவமும் பெற்றது. உம்மை அடைவதான கல்பகக் கொடியின் முளையானது. (14)

**ज्योत्स्नागौरं यदचलसुताजानि संविद्धनं यन्-**
**मेघश्यामं गिरिश कमलावल्लभं वापि रूपम् ।**

**तद्धन्यानां भवभयहरं दर्शयन्त्याद्यवाचः**
**तत्राद्ये मे वहति कुतुकं चित्तमुत्तंसितेन्दौ ।। १५**

*கிரிசரே! நிலவைப் போன்ற வெண்ணிறம் கொண்டதும் இறுகிய பேரறிவானதுமான மலைமகளின் கணவரானது ஒன்று. மேகநிறம் கொண்டதும் லக்ஷ்மீயின் மணாளனுமானது மற்றொன்று. வேதங்கள் இவ்விரண்டையும் ஸம்ஸார பயம் நீக்க வல்லதாகக் குறிப்படுகின்றன. அவற்றுள் சந்திரனைச் சூடிய முதலாவதில் என் மனம் ஆர்வம் காட்டுகிறது. (15)*

**वाच्यं शिवाविति पदस्य वयं कथं वा**
**निर्णेतुमीदृशतया निपुणीभवामः ।**
**यस्य स्वरूपमकुतोजनुषामशेषाः**
**सीमा गिरामपि सितासितमामनन्ति ।। १६**

*இருசிவர்கள்! (உமையையும் சிவனையும் குறிப்பிடுபவை) இந்தச் சொல்லிற்கு இவ்வாறு பொருள் என நிர்ணயிக்க நமக்கு ஏது திறமை? அதன் ஸ்வரூபத்தை பிறப்பற்ற தேவவாக்குகளின் (வேதங்களின்) எல்லையாகிய உபநிஷதங்களும் இதுவோ அதுவோ (வெளுப்போ கறுப்போ?) என்று நிர்ணயமின்றி கூறுகின்றன. (16)*

**मन्मूर्धानं सुरभयतु तत्पार्वतीहस्तलाल्यं**
**त्वद्दिव्यश्रीचरणकमलद्वन्द्वमर्धेन्दुमौळे ।**
**वाणीलक्ष्मीसरभसवशीकारधुर्याः श्रुतिस्त्री-**
**सीमन्तालङ्कृतिविरचनातत्परा यत्परागाः १७**

*பாதிச் சந்திரனை தலையில் சூடியவரே! பார்வதியின் கைகளால் வருடப்பட்ட உமது திவ்யத் திருவடிகளிலிருந்து விழுந்த தூசிகளை வாணியும் லக்ஷ்மியும் பரபரப்புடன் தமதாக்கிக் கொள்வதில் முனைந்துள்ளனர். வேதமாகிய பெண்ணின் வகிடான உபநிஷத்தை அழகுபடுத்துவதில் அவை முனைந்துள்ளவை. அந்தத்தூசிகள் என் தலையை மணக்கச்*

*செய்யட்டும்! (திருவடிகளை நான் வணங்குவேன். அப்போது அவற்றின் தூசி என் தலையில் படியட்டும்!) (17)*

**कार्तान्तकिङ्करगणाः क्रमतात्र किं वा**
**किं वा कृतान्त भवतोऽपि च कृत्यमत्र।**
**पादाम्बुजं भगवतो भवदीयगर्व-**
**सर्वस्वहारि सततं हृदि नश्चकास्ति।। १८**

*யமதூதகணங்களே! இங்கே காலடி வைப்பீர்களா? யமனே! இங்கு உனக்கு என்ன வேலை? உமது கர்வமனைத்தையும் பறிக்கிற பகவானது திருவடித்தாமரை எப்போதும் எம் உள்ளத்தில் விளங்குகிறது.!(18)*

**चूडाज्योत्स्नालहरिभिरपाकुर्वति ध्वान्तमन्तः**
**तापं सद्यश्शमति वमति स्वैरमानन्दधाराम्।**
**साम्बे तस्मिन्महसि रहसि श्रीगिरां प्राक्तनीनां**
**आस्तामस्तापरविपरिवृत्त्यन्तरायोऽन्तरात्मा।। १९**

*உள்ளத்து இருட்டைத் தலையணியாகச் சூடியுள்ள நிலவொளியால் சிவன் விலக்குகிறார். உள்ளத்தாபத்தை உடன் அடக்குகிறார். தன் விருப்பபடி ஆனந்தப் பெருக்கை உமிழ்கிறார். பழைய நல்லுரைகளான வேதங்களின் உட்பொருளான அந்த ஸாம்பனாகிய பேரொளியில் வேறு போக்கு என்கிற தடை நீங்கப்பெற்று என் அந்தராத்மா நிலைத்திருக்கட்டும்.(19)*

**क्रीणात्यन्तःकरणममरोदारकोटीरहीर-**
**स्मेरज्योत्स्नास्नपितचरणश्रीरुमालङ्कृताङ्का।**
**सा विश्वाढ्यङ्करणकरुणाबिन्दुरिन्दुप्रसन्ना**
**नेत्रोदन्यां हरतु हर ते दिव्यमूर्तिर्मदीयाम्।। २०**

*ஹரனே! உமது திவ்யவடிவம் என் உள்ளத்தை விலைக்கு வாங்குகிறது. தேவர்களின் பெருமதிப்பிற்குரிய கிரீடத்து வைர ஒளியாகிற நிலவால் திருவடிகள் அலம்பப்பட்டுப் பெருமை*

கொண்டது. உமாதேவி மடிமீதமர்ந்து அழகுபடுத்தப்பட்டது. உலகை நிறைவு கொள்ளச் செய்யச் சொட்டு சொட்டாகத் கருணை பொழிவது. சந்திரனால் தெளிவு பெற்றது. அது என் கண்களின் தாகத்தைத் தீர்க்கட்டும்!(20)

**किंपचान इव किं विविधाशा-**
**लम्पटोऽस्मि शिव किन्त्विदमीहे।**
**लुम्पतादिदमहम्पदवाच्यं**
**त्वं परिस्फुर सुखं परमेश ॥ २१**

சிவனே! உணவின்மையால் வாடுபவனைப் போல் பல்வேறு ஆசைகளால் திணறுகிறேன். நான்என்று புறப்படுகிற அகந்தையைப்பறிப்பீர். பரமேச! நீர் இனிது உள்ளத்தில் தோன்றுவீர்.இதனை மட்டும் வேண்டுகிறேன் (21)

**मघवदादिनिलिम्पपरम्परामणिकिरीटमयूखमयाङ्घ्रिणि।**
**मकुटकन्दलितेन्दुनि लीयतां महसि मे हृदयं शितिकन्धरे ॥ २२**

இந்திரன் முதலான தேவர் வரிசையின் ரத்தின கிரீட ஒளிபாய்ந்த திருவடி கொண்டவரும், மகுடத்தில் முளைத்த சந்திரனைக் கொண்டவரும் நீலக்கழுத்தருமான பேரொளியில் என் இதயம் லயமடையட்டும்.(22)

**संवित्सुखपरिपाकं साम्बं कन्दर्पसुन्दरं कमपि।**
**शशिशकलघटितचूडं शान्तं करवाण्यहं धियश्शरणम् ॥ २३**

பழுத்த பேரறிவும் பேரானந்தமுமானவர்,அன்னையுடன் கூடியவர், மன்மதனைப் போன்ற அழகர், சந்திரனின் துண்டைச் சூடியவர், சாந்தர். இந்த ஒருவரை நான் அறிவின் புகலிடமாகக் கொள்கிறேன்.(23)

**अर्धेन्दूत्तंसितमगसुतावामवामाङ्कसीमं**
**कारुण्याब्धे शिव तव चिदानन्दरूपस्वरूपम्।**
**स्मेरं गौरं भवजलनिधेः पारमाराद्धुमिच्छन्**

तद्धीधारोल्लसितकुसुमैरर्चये सार्थयेदम् ।। २४

*கருணைக்கடலே! சிவனே! பாதி சந்திரனைச் சூடியதும், மடியின் இடது புறத்தில் மலைமகளைக் கொண்டதும் புன்சிரிப்புள்ளதும் வெண்ணிறமுள்ளதும் பேரறிவும் பேரானந்தமுமான உம் வடிவை, ஸம்ஸாரக் கடலின் அக்கரையை அடையவிரும்பி, என் உணர்வாகிய மலர்ந்தமலரால் அர்ச்சிக்கிறேன். அதனை நிறைவுறச் செய்வீர். (24)*

उद्वेलानन्दथुचिदभिधे केळिसिन्धौ कदा वा
देव्या दीव्यन्नचलसुतया सार्धमर्धेन्दुमौळे ।
तद्वीचीनां प्रियसहचरैस्तापमुन्मूलयन् मे
वर्तेथास्त्वं नयनवलनैर्वत्सलैरक्षिसीम्नि ।। २५

*பாதி சந்திரனைச் சூடியவரே! கரைகடக்கிற ஆனந்தமும் பேரறிவும் பெயராகக் கொண்ட உமது விளையாட்டுக் கடலில் மலைமகளுடன் விளையாடிக் கொண்டிருக்கிற நீர், அந்த கடலலைகளின் இனிய தோழர்களான அன்பு ததும்புகிற கண்களின் சுழற்சிகளால் என் தாபத்தை அகற்றுபவராக, என் பார்வை எல்லைக்குள் என்று இருப்பீர்? (25)*

क्रीडन्तं खल्वचलसुतया स्वे सुखानन्दसिन्धौ
चूडालं त्वां शशिकलिकया द्रष्टुमभ्यागतोऽस्मि ।
तत्कल्लोलैरनवधिभिराच्छादिताशेषगात्रो
न त्वामीक्षे न च शशिकलां नाम्बिकां वा पुरारे ।। २६

*புரங்களின் எதிரியே! தனது ஆனந்தக் கடலில் மலைமகளுடன் நீந்தி விளையாடுபவரும் சந்திரகலையைச் சூடியவருமான உம்மைக் காண வந்துள்ளேன். ஓய்வற்ற அதன் அலைகளால் உடல் முழுதும் மறைக்கப்பட்டுள்ள நான் உம்மையோ சந்திரகலையையோ அந்த அம்பிகையையோ காண முடியாதிருக்கிறேன். (உங்களிடையே மாறுபாட்டை உணராமல் பேரானந்தத்தில் மூழ்கியுள்ளேன். (26)*

पापौघौकस्यहह शिव मे यद्धराकस्य चित्ते

त्वत्पादाम्भोरुहममृतनिष्यन्दि योगीन्द्रगम्यम् ।
धत्से तत्त्वं किमपि कृपयाऽऽलिङ्गितः पारवश्यं
नीतस्सेयं जयति भगवन् जीविका मादृशानाम् ।। २७

பாபக் குவியலைக் குடியிருப்பிடமாகக் கொண்டது இந்தப் பாமரனுன எனது உள்ளம். அதனுள் உம் திருவடிகளிலிருந்து பெருகுகிற அமுதத்தைக் கசிகின்றதும் சிறந்த யோகிகளால் மட்டும் உணரக் கூடியதுமான ஏதோ ஒரு தத்துவத்தை வைக்கிறீர். கிருபை உம்மை அணைத்து உம்மைப் பரவசப்படுத்தியுள்ளது. அதுவே என்னைப் போன்றவரின் உயிர்.பகவானே! அது சிறந்து விளங்குகிறது. (27)

कल्युन्मीलज्ज्वलनवलयिन्यन्तरङ्गेऽर्पितं मे
गौरीश त्वच्चरणमरुणं भाति कारुण्यमूर्ते ।
सोढा ग्लानिस्त्वमसि निखिलग्लानिहारी ममैवं
क्रीतस्सोऽयं तव किमपरं तन्मदीयान्तरात्मा ।। २८

என் உள்ளம் கலியால் தூண்டப்பெற்ற உணர்ச்சி நெருப்புகளாகிற வளையம் சூழ்ந்தது. கருணையின் வடிவே! கௌரீமணாளரே! அந்த உள்ளத்தினுள் உமது சிவந்த திருவடி ஒளியுடன் விளங்குகிறது. துயரங்களைப் பொறுத்தேன். நீரோ எனது எல்லாத்துயரங்களையும் அகற்றுபவர். இவ்வகையில் என் அந்தராத்மாவை நீர் விலைக்கு வாங்கிவிட்டீர். வேறு என்ன வேண்டும்?(28)

कारङ्कारं कमपि कमपि स्वैरमायस्यताऽदः
खेदच्छेदि स्मरहर मया त्वत्पदं खल्ववाप्यम् ।
भ्रामम्भ्रामं क्लमभरजुषा स्तन्यमन्विच्छता न-
न्वभ्येतव्यं भवति शिशुना मातुरेवोपकण्ठम् ।। २९

மன்மதனை அழித்தவரே! தானே முயன்று எத்தனையோ செய்து செய்து, இந்தத் துயரை நீக்குகிற உமது திருவடிகளல்லவோ அடையப் பட வேண்டும்? முலைப்பால்

அருந்த விரும்புகிற சிசு மிகக் கஷ்டப்பட்டு, சுற்றிச் சுற்றி வந்து தாயின் அருகாமையை அடைய வேண்டியிருக்கிறது. (29)

अग्रे गौरी सकुतुकदिशद्दृक्प्रभामेचकात्मा
शोणच्छायाऽधरपरिसरे चन्द्रचूड स्मितश्रीः ।
ज्योत्स्नेवाभ्युल्लसति मुकुरे गण्डभागे तवास्यां
मज्जत्वस्मिन्मतिरिनसुताशोणगङ्गासमष्टौ ॥ ३०

சந்திரனைச் சூடியவரே! எதிரில் குறுகுறுப்புடன் பார்வையைச் செலுத்துகிற அழகிய கௌரி. செந்நிறம் கொண்ட உதட்டினருகே காணப்படுகிற நிலவு போன்ற உமது புன் சிரிப்பழகு உமது கன்னத்தில் பிரதிபலிக்கிறது, யமுனை, சோணை, கங்கை இவற்றின் கூடல் போன்று நிறக்கலவை கொண்ட இதனிடம் என் அறிவு மூழ்கிக் களிக்கட்டும். (30)

श्रीमत्पादाम्बुजममृतनिष्यन्दि ते चन्द्रचूड!
प्रेम्णा देव्यास्तदवमृशता पाणिपद्मेन साकम् ।
आधत्स्वैतन्मम दृशि विभो तद्व्यपैतु ज्वरोऽस्याः
भावत्कासेचनकवपुषाऽऽपाद्यतां पारणा च ॥ ३१

சந்திரனைச் சூடியவரே! உமது திருவடி அமுதம் பொழிகிறது. அதனை அன்புடன் தேவி தாமரை போன்ற கைகளால் வருடுகிறாள், அந்நிலையிலுள்ள திருவடிகளை என் கண்ணினுள் வைப்பீர். அதனால் கண்ணின் தாபம் அகலட்டும். உள்ளத்து நிறைவு தருகிற உடலழகினைப்பருகி அதுவும் பாரணை செய்து கொள்ளட்டும். (பாரணை-பட்டினி கிடந்தபின் உணவேற்பது. கண்கள் இனிய காட்சி கிடைக்காததால் பட்டினி கிடந்துள்ளன. இன்று இந்த அழகிய காட்சியே அதற்கு உணவு. (31)

यत्पादाब्जं हृदि विनिहितं मामके तावकीनं
तद्धन्योऽहं त्रिभुवनगुरो भाग्यमन्यत् किमातः ।
आसीनो वा क्वचन विचरन्विश्वसन्नेव सत्यं

नाहं जह्यामिदमिदमुमाकान्त वाञ्छामि भूयः ॥ ३२

மூவுலகிற்கும் குருவே! என் உள்ளத்தில் உம் திருவடித் தாமரை வைக்கப்பட்டது. நான் கொடுத்து வைத்தவன். இதனை விட பாக்கியம் வேறு ஏது? எங்கேனும் அமர்ந்தும் நடந்து கொண்டும் நம்பிக்கை மிக்கவனாக இதனை விடமாட்டேன். உமையின் மணாளரே! இதனையே மேலும் மேலும் விரும்புவேன். (32)

तनुद्योतैरुद्यद्दिनकरपरार्ध्य स्मयधुरा-
निरासं तन्वद्भिर्विदधदविभिन्नं त्रिभुवनम् ।
पुरो धावन्तीभिश्शतधृतिमुखाभिर्दिविषदां
चमूभिस्त्वं साम्बः पुरहर पुरोऽस्याविरभवः ॥ ३३

உதிக்கின்ற சூரியனின் மிகச் சிறந்த இறுமாப்பின் சுமையை உம் உடலின் ஒளி விரட்டுகிறது. மூவுலகத்தையும் ஒளிக் கோளமாக ஆக்குகிறது. உம்முன் இந்திரன் முதலிய தேவர்களின் சேனைகள் ஓடுகின்றன. புரஹரரே! இவ்வாறு என் முன் காட்சி தந்தீர். (33)

निगमलतामकुटीनां भासां अरविन्दरिपुकलामकुटीनाम् ।
ताराजालसितानां दासोऽहं शिरसि जह्नुजालसितानाम् ॥ ३४

நான் அந்த பேரொளிக்குத் தாஸன். அது வேதத்தின் கிரீடமானது. தாமரை எதிரியான சந்திரனை மகுடத்தில் சூடியது. நட்சத்திரக் குவியல் போன்ற வெண்ணிறம் கொண்டது. தலையில் கங்கையால் அலங்கரிக்கப் பெற்றது. (34)

यावद्धावयतः श्रवस्सुखधुरालुण्टाकघण्टाकटु-
क्वाणैरन्तकसैरिभस्य पुरतः पातोऽस्य मे त्रस्यतः ।
तावत्तावकतुङ्गपुङ्गवखुरध्वानैर्निधानैर्मुदां
देवाविर्भविषीष्ट तूर्णमिदमाधासीष्ट धृष्टं मनः ॥ ३५

காதிற்குக் கொடூரமான மணியின் கோர ஒலியில் விரட்டப்பட்ட

*யமனின் எருமையின் முன் கிலியால் நடுங்கி நான் விழுவதற்குமுன், மகிழ்ச்சியின் நிறைவிடமான உமது சிறந்த காளையின் குளம்படி ஒலியுடன் நீர் என் முன் தோன்றுவீராக! இந்த மனத்தை சீக்கிரமாகத் தைரியமுள்ளதாக்குவீராக!(35)*

**मन्दस्मितैर्मकुटकन्दळितेन्दुरेखैः**
**गौरीसखैः स्फटिकगौरमनोहराङ्गैः ।**
**त्वद्विग्रहैरविरतं परितः स्फुरद्भिः**
**चेतोऽस्तु मे कवचितं शिव ते प्रसादात् ।। ३६**

*சிவனே! உமக்குப் பல வடிவங்கள். அவை புன்சிரிப்புடன் கூடியவை. மகுடத்தில் சந்திரனின் கீற்றைச் சூடியவை. கௌரியின் துணைவரானவை. படிகம் போன்ற மேனி ஒளியால் மனத்தை ஈர்ப்பவை. என்னைச் சுற்றி சூழ்ந்து நிற்கிற அவற்றால் என் உள்ளம் உம் அருளால் கவசம் பூண்டதாகட்டும். (36)*

**सर्वात्मकस्त्वमसि सर्वगयाऽपि मूर्त्या**
**तन्मे तनोषि तनयेऽप्यखिलाश्च शिक्षाम् ।**
**आवेद्मि नैष तदनुग्रहयालुतां ते**
**तच्चाज्ञ एष इति तस्य दयां प्रसूताम् ।। ३७**

*நீரோ எல்லாமானவர். எங்கும் பரவிநிற்கிற உமது வடிவால் உம்மகனுயினும் எனக்கு எல்லா சிக்ஷையையும் தருகிறீர். இந்த நான் உமது அனுக்கிரஹிக்கிற தன்மையை அறியாதவன். இவன் அறிவில்லாதவன் எனக் கருதி தயை புரிவீர். (பஞ்சபூதங்கள் முதலானவை சிவ வடிவங்கள்.(37)*

**तमसश्शमनं त्वदीयरूपं**
**शरदिन्दुद्युति शैलजासहायम् ।**
**नयनाध्वनि नव्यचन्द्रचूडं**
**चरमे मे समये चकास्तु शम्भो ।। ३८**

*சம்புவே! உமது உருவம் இருளைப் போக்குவது. சரத்*

காலத்துச் சந்திரன் போல் ஒளி கொண்டது. மலைமகளைத் துணையாகக் கொண்டது. புதிய சந்திரனைச் சூடியது. என் இறுதி நேரத்தில் என் கண் வழியில் அது துலங்கட்டும். (38)

परिमळभराचान्ताशान्ते परिस्फुटमल्लिका-
वकुळसदने मन्दप्रस्पन्दिमारुतसेविते ।
सह गिरिजया नन्दन् कन्दर्पसुन्दरविग्रहो
हरतु नयनोदन्यां धन्यात्मनां पुरशासनः ॥ ३९

மல்லிகைப்பூவும் மகிழம்பூவும் மணக்கின்ற மாளிகை. அது மணப்பொருளை நன்கு தெளித்த பின்னரும் போதுமென்ற எண்ணம் தோன்றாதிருக்கிற அங்குள்ள சூழ்நிலை, மெல்ல அசைகிற காற்று வீசுகிறது. அங்கு புராரியான சிவன் மன்மதனைப் போன்று அழகியவடிவுடன் மலைமகளுடன் மகிழ்ச்சியுடன் இருக்கிறார். அவரைக் காண்பவர் பாக்கியசாலி,அவர்களது கண்களின் தாகத்தை அவர் தீர்த்து வைக்கட்டும்.(39)

कलाधरकलाधरे कलिनिरासदत्तादरे
नगेन्द्रतनयासखे नयनितार्कचन्द्रानले ।
करात्तहरिणे स्थितिं कलय चित्त किं चिन्तया
दयारसघने धराधरशरासने तेजसि ॥ ४०

மனமே! வீணே சிந்தியாதே! சந்திரனைச் சூடியவரும்,கலியை விரட்டுவதில் ஆர்வம் மிக்கவரும், சூரியனையும் சந்திரனையும் அக்கினியையும் கண்களாகக் கொண்டவரும், கையில் மானை ஏந்தியவரும், தயையின் உறைந்த கட்டியும், மலையை வில்லாகக் கொண்டவருமான அந்தப் பேரொளியில் நீ நிலைத்து இருப்பாய்.(40)

यस्मै नमः श्रुतिरियं नतिशेषितां त्व-
द्भावग्रहे वदति लिङ्गतया पुरारे ।
त्वन्नापरं स्पृशतु तन्नतिशेषितेयं
लिङ्गं भवेन्न खलु साध्यवदन्यगामि ॥ ४१

*புராரியே! உம்மைப் பற்றிய கருத்து கொள்வதில் வேதம் நமஸ்காரத்திற்கு உரிய நிலையைக் காரணம் காட்டி நமஸ்காரத்தைக் கூறுகிறது. நமஸ்காரத்திற்கு உரிய நிலை உம்மைத் தவிர வேறொருவரிடமும் காணப் பெறாதது. மற்றொன்றிலும் அது காணப் பெறுமானால் காரணமாக இருக்க இயலாது. (நெருப்பின்றி புகையாது என்பதால் புகையைக் கண்டதும் காரணமான நெருப்பு அங்கிருப்பதை உணர்கிறோம். வேதம் நமஸ்கரிப்பதை ஏற்கும் தகுதி உமக்கே இருப்பதால் தான் நம; நம; என ருத்ரப் பிரச்னம் முழுவதும் கூறுகிறது. (41)*

**नमोऽस्तु ते शङ्कर शश्वदर्थये**
**समर्थयेदं करुणानिधे विभो ।**
**दरस्मितोल्लासिमुखो हृदि स्फुरन्**
**दुरस्मितां मे कुरु भस्मितामिमां ।। ४२**

*சங்கரரே! உமக்கு நமஸ்காரம். கருணாநிதியான பெருமானே! அடிக்கடி நான் வேண்டுவதைப் பொருளுள்ளதாக்குவீர். சிறிது புன் சிரிப்பால் முகம் மலர்ந்து என் இதயத்தினுள் ஒளியுடன் விளங்கி, என்னிடமுள்ள கெட்ட அகந்தையைச் சாம்பலாக்குவீர். (42)*

**करतलकलितकुरङ्गं करुणारसपूरपूरितापाङ्गम् ।**
**कल्पितरतिपतिभङ्गं कञ्चन कलयामि कीर्तिभरतुङ्गम् ।। ४३**

*ஒருவரை என் மனத்தில் உருவகப்படுத்திக் கொள்கிறேன். அவர் தம் கையில் மானை அழகுபட வைத்திருப்பவர். கருணை வெள்ளம் ததும்புகிற கடைக் கண் கொண்டவர். மன்மதனை உருவிழக்கச் செய்தவர். புகழின் சுமையால் உயர்ந்து நிற்பவர். (43)*

**कठोरकुचमण्डलाकलितपादपङ्केरुहः**
**कराग्रधृततत्करं गिरिसुतामुपर्युद्धरन् ।**
**स्मिताञ्चितमुखाम्बुजः स्मितमुखं पिबन्नीक्षणैः**
**करोतु जयमङ्गळं कनकमञ्चशायी शिवः ।। ४४**

தங்கக்கட்டிலில் சாய்ந்து படுத்துள்ள அந்த சிவன் வெற்றியுடனான மங்களத்தைச் செய்யட்டும். மலைமகள் தன் பருத்த மார்பகங்களை அவரது திருவடியில் வைத்திருக்க, அவளது கைகளைத் தன் கைகளால் தாங்கி அவளைத் தூக்கி புன்சிரிப்பால் அழகிய தாமரை போன்ற முகமுள்ளவராக, அவளது புன்சிரிக்கிற முகத்தைக் கண்களால் பருகுபவராக உள்ளார். (44)

**निजसायकितमुकुन्दं नीहाराचलसुताकुतुककन्दम् ।**
**किङ्करदनिमिषबृन्दं शङ्करमुपयामि सच्चिदानन्दम् ॥ ४५**

முகுந்தரைத் தனது பாணமாக்கிக் கொண்டவரும், பனிமலையின் மகளின் குதூஹலத்தின் வேரான கிழங்கும், இமையாத தேவர் கூட்டத்தைத் தமது ஏவலாளாகக் கொண்டவரும், பேரிருக்கையும் பேரறிவும் பேரானந்தமுமான சங்கரரை அணுகுகிறேன். (45)

**भवतं मयि वत्सलावुभाववतं मां पितरौ शिवौ युवाम् ।**
**नियतं भवदेकतानतां नयतं मामिदमस्तु वां नमः ॥ ४६**

சிவனும் சிவையுமாகிய நீங்களிருவரும் என் தாய் தந்தையர் . என்னிடம் அன்பு கொண்டவர்களாவீர். என்னைக் காப்பீர். என்னை உம்மை மட்டும் அண்டியிருப்பவனாகச் செய்வீர். இதோ உங்களிருவருக்கும் என் நமஸ்காரம். (46)

**ममेश तन्वन्तु मुदं दयासुधाझरीचयास्तावकदृञ्झरीचयः ।**
**सहासते यैर्दरहासचन्द्रिकाः नमस्यदच्छेद्यतमःस्यदच्छिदः ॥**

ஈசனே! தயையெனும் அமுதப் பெருக்கின் உருவமான உமது கண்ணொளிகள் எனக்கு ஆனந்தத்தை அளிக்கட்டும். வணங்குபவரின் துண்டாட இயலாத அறியாமை எனும் இருளைச் சிதைக்கிற புன்சிரிப்பெனும் நிலவு அந்தக்கண்ணொளியுடன் கூடி நிற்கின்றது. (47)

**ज्ञानानन्दोन्नतिविहृतयो मूर्तयश्शर्व सर्वाः**
**तां तामाराधयति भगवन् यो यथा तत्तथा त्वम् ।**

ताभिः प्रोद्भासयति भवतस्सन्निधानात् सुधीस्तां
आराध्नोमीत्यहमिति च यस्तस्य तासान्न पारम् ।। ४८

*சர்வரே! உமது எல்லா வடிவங்களும் பேரறிவும் பேரானந்தமும் கூடிச் சிறப்புடன் விளையாடுகிற இடங்கள். எவரெவர் எவ்வாறு வழிபடுகிறார்களோ அவரவருக்கு நீர் அவ்வாறே உள்ளீர். அறிவாளி உமது அருகாமை பெற்று அவற்றின் உதவியால் உலகத்தை ஒளிமயமாக்குகிறான். நான் இவரை வழிபடுகிறேன் என்பான். இது அந்த வடிவங்களுக்கோ அவற்றை ஆராதிப்பவருக்கோ உள்ள ஆற்றலின் எல்லையல்ல. (48)*

त्वं तस्कराणां पतिरिन्दुमौळे न मन्मनस्तस्करता कथं ते ।
हन्ता नमो हन्त्र इति श्रुतेस्त्वं कथं न हन्ता मदघच्छटानाम् ।।४९

*சந்திர சூடரே! நீர் திருடர்களின் தலைவனுமே! ஆனால் என் மனத்தை திருடாமலிருப்பது ஏன்? வேதம் உம்மை அழிப்பவர் என்கிறது. ஆனால் என் பாப வரிசைகளை ஏன் அழிக்காதிருக்கிறீர்? (49)*

मालिन्यशालिन्यपि मानसे मे विश प्रभो तच्च विधेहि शुद्धम् ।
दीपो गृहे किं तिमिरोपरुद्धे नायाति तत् किन्न परिष्करोति ।। ५०

*பெருமானே! அழுக்கு மிகுந்த என் மனத்தினுள் நுழைவீர். அதனைத் தூயதாக்குவீர். இருள் சூழ்ந்த வீட்டினுள் தீபம் நுழைவதில்லையா? அதனை இருளற்றதாக சீரமைக்கிற தில்லையா? (50)*

प्रपन्ने सर्वस्वप्रद इति विपन्नार्तिहर इ-
त्यघौघच्छिन्नामेत्यखिलतनुभाजां सुहृदिति ।
यशश्शाली त्वं त्वामहमनपनोद्यार्तिरभिधा-
वदस्ते प्राप्तो मां शिव धिगयशस्ते विदधतम् ।। ५१

*சிவனே! நீர் சரணடைந்தவருக்கு எல்லா செல்வத்தையும் அளிப்பவர் என்றும் துயருற்றவரின் துயரைத் தீர்ப்பவர் என்றும்*

*உன் திருநாமம் பாபக்குவியலை நீக்கும் என்றும் எல்லா உயிரினத்திற்கும் நண்பர் எனவும் பெரும் புகழ் பெற்றவர். தீராத துயர் கொண்ட நான் உம்மை உம் புகழைக் கூறிக் கொண்டு அடைந்தேன். ஆனால் உமக்குக் கெட்ட பெயரை உண்டாக்குகிற நான் நிந்திக்கத்தக்கவன். (51)*

**गिरिजास्तनभरपरिमळपिशुने शिशुनेन्दुनाऽवतंसवति।**
**परिमिळतु श्रुतिकबरीपरिमळगरिमणि मनो मदीयमिदम्॥ ५२**

*பார்வதியின் மார்பகத்தின் நறுமணப் பூச்சு இவரது மார்பில் ஒட்டிக் கொண்டு ரகசியத்தை வெளிப்படுத்துகிறது. இளம் சந்திரனைச் சூடிய வரும் உபநிஷத் கருத்தாகிய கனத்த நறுமணம் கொண்டவருமான அந்தச் சிவனிடம் என் இந்த மனம் இணையட்டும். (52)*

**अनीक्षमाणो मुखमन्यदीयं**
**असंस्मरन् जात्वपि चान्यधर्मम्।**
**अन्तः स्मरन्नन्तकशासन त्वां**
**कदा त्वदाख्यां कथयन् सुखी स्याम्॥ ५३**

*யமனை அடக்கியவரே! வேறு ஒருவர் முகத்தைப் பாராமல், வேறு நடைமுறையைப் பற்றிச் சிந்தியாமல், உள்ளே உம்மையே நினைத்துக் கொண்டு, உம் நாமத்தைச் சொல்லிக் கொண்டே எப்போது களித்திருப்பேன்? (53)*

**केयं दुर्नीतिरेषा वद भवति कदा वास्ति किन्नौ विभागो**
**दैवादैश्वर्यमाप्तं निरवधि भवता किन्न तद्भोक्तृता मे।**
**तत्कुर्वेतन्न कुर्वित्यपि वदसि समं पश्य मामीश नो चेत्**
**कूटस्थे त्वां निवेद्य स्थिरमपि भवदैश्वर्यमुन्मूलयामि॥**

*ஈசனே! உமக்கு ஏன் இந்தத் தவறான நடைமுறை? நமக்குள் எப்போது பாகப் பிரிவினை நடந்தது? அதிருஷ்டவசமாக உமக்கு எல்லையற்ற ஐச்வரியம் கிடைத்துள்ளது. அதனை அனுபவிக்கிற உரிமை எனக்கு இல்லையா? அதனைச் செய்! இதனைச்*

செய்யாதே! என்று சொல்கிறீர். என்னையும் ஸமமாகப் பார்ப்பீர்! இல்லாவிடில் நம் குலக் கூட்டத்தலைவரிடம் உம்மைப்பற்றிக் கூறி, நிலைத்த உமது ஐச்வரியத்தையும் பிடுங்கச் செய்வேன் (54)

**विलसद्घनपुष्पपुष्पपुष्पं विरहस्त्रीजनमारमारमारम् ।**
**विनतामरराजराजराजं विषमाक्षं भज कालकालकालम् ।। ५५**

பூபோன்ற மேகத்தின் பூவான நீரைத் (கங்கையை) தலையில் சூடியவரும் கணவனை விட்டுப் பிரிந்துவாடுகிற பெண்களைத் துன்புறுத்துகிற மன்மதனைக் கொன்றவரும்,தேவேந்திரனாலும் ராஜராஜனான குபேரனாலும் வணங்கப் பெற்றவரும், ஆயுளுக்கு முடிவு செய்கிற யமனுக்கு யமனானவரும் ஒற்றைப் படைக் (மூன்று) கண்களுள்ளவருமான சிவனைச் சென்றடைவாய்.(55)

**इन्दीवरलळितप्रभमिन्दुस्मयहारिवदनवारिरुहम् ।**
**नन्दयशोदानन्दथुकन्दळमापिब सुखेन सखि दृष्टे ।। ५६**

தோழியே! அல்லிப்பூவின் அழகிய ஒளி கொண்டவரும் சந்திரனின் ஆணவத்தைப் பறிக்கிற தாமரை போன்ற முகமுள்ளவருமான நந்தர் யசோதை இவர்களின் பேரானந்தப் பூமொட்டை (கிருஷ்ணனை) கண்டவுடன் பருகுவாய் (56)

**शिवे यस्मिन् रज्जावहिमिव विमोहादुपनतं**
**गृणन्तीमं वेदा जगदुदयमुद्दामरचनम् ।**
**समुत्तुङ्गस्थेयस्सुखसुलभतायै स भगवान्**
**प्रबोधानन्दात्मा जयति शिवनामात्मकतया ।। ५७**

சிவனிடமிருந்து உலகு தோன்றியது என்று வேதங்கள் கூறுவது கயிற்றில் பாம்பைக் காண்பது போன்ற மதிமயக்கத்தால். மிகச்சிறந்த நிலைத்த பேரானந்தம் எளிதில் கிடைப்பதற்கே அந்தப் பகவான் பேருணர்வும் பேரானந்தமுமாக சிவ என்ற நாம வடிவில் விளங்குகிறார்.(57)

**अयन्ते विश्रान्तिं निगमनिकरा यत्र परमां**
**यदानन्दोदन्वत्पृषतलवतुष्टा विधिमुखाः ।**

महेशो जिह्वायाः क्षणमपि स नैवोज्झितुमलं
ननु त्वां रामाख्ये तव मधुरतां वर्णयितु कः ॥ ५८

*ராமனின் திரு நாமமே! மஹேசன் கணநேரமும் உன்னை நாக்கை விட்டகலவிடுவதில்லை. வேதங்கள் உன்னை விளக்குவதில் பெரும் நிறைவைப்பெறுகின்றன. உனது இயல்பான பேரானந்தமாகிய கடலில் ஒரு திவிலை பெறுவதில் பிரும்மா முதலானவர் திருப்தி அடைகின்றனர். உன் இனிமையை வர்ணிக்க எவரால் இயலும்? (58)*

श्रीमद्गौरीरमणवपुषा श्रीशरूपेण चैकः
सत्यज्ञानामलसुखतनुस्सश्चकास्तीश्वरो यः ।
तस्यैतस्याखिलजगदधिष्ठानभूतस्य नाम्नां
आम्नायोक्तिप्रविततिरियं वक्ति मुक्तिप्रदत्वम् ॥ ५९

*கௌரியின் மணாளனாகவும் லக்ஷ்மியின் ஈசனாகவும் இருப்பவர் ஒருவரே! ஸத்தியம், ஜ்ஞானம், தூய ஆனந்தம் இவையே அவரது உருவம். அவரே பேராளுனராக விளங்குகிறார். உலகமனைத்தின் ஆதாரமான அவரது பெயர்களுக்கும் முக்தி தருகிற இயல்பு உள்ளதென வேத வாக்கியங்களின் தொகுப்பு விளக்குகிறது. (59)*

जिज्ञासा हि भवत्पदे बहुजनुर्यज्ञादिसाध्योदया
क्व ज्ञानं ननु दुर्लभोऽसि सुलभो विज्ञायसे चान्यतः ।
किन्नामात्र निवेदये रसनया त्वन्नाम चेद् गृह्यते
हा हन्त भ्रमणैरलं हर करग्राहं तदा गृह्यसे ॥ ६०

*ஹர! உமது இருப்பிடத்தை அறிவது பல பிறவிகளில் பல வேள்விகள் முதலியவற்றால் பெறத்தக்கது. அந்த அறிவு எங்கே கிடைக்கும்? நீர் எளிதில் காணக் கிடைக்காதவர். அதே நேரத்தில் வேறு முறையில் எளிதில் காணப்படுகிறீர். எப்படிச் சொல்வேன்? உமது பெயர் கூறப்பட்டதும் நீர் கைப்பிடியில் அகப்படுகிறீர். எதற்கு வீணே சுற்றுவது? போதும். (60)*

येऽनन्यास्समुपासतेऽस्मि दुरिताद् गोप्तेति चाहं तव
त्रायस्वेति सकृत् प्रपत्तुरखिलत्रासं हराणीति च।
सत्यं प्रत्यशृणोर्ददासि तु भवन्नामाक्षरग्राहिणे
सर्वस्वं शिव तावतैव जयति त्वामन्धयन्ती दया॥

*சிவ !'வேறொருவரை நாடாமல் என்னை அணுகுபவரைப் பாபத்தின் விளைவிலிருந்நது காப்பாற்றுவேன். காப்பாற்றுவீர் என ஒரு தடவை சரணடைந்தவரின் எல்லா சங்கடங்களையும் போக்குவேன் என்ற உறுதிமொழியை உமது நாமத்தின் ஓரெழுத்தைக் கூறுபவரிடம் தருகிறீர். அதன் காரணமாக உம்மைக் குருடாக்குகிற தயை உமது எல்லா செல்வத்தையும் வென்று தனதாக்கிக் கொள்கிறது.(61)*

अप्राप्यमीक्षणमपि श्रवणं यदीयं
अन्यैस्सुरर्षिभिरपीन्दुवतंस तस्याः।
मुक्तिश्रियः कबरिकाऽस्य कराग्रलग्ना
मुग्धोऽपि यो रसनया स्पृशति त्वदाख्याम्॥ ६२

*பிறை சூடியவரே! உமது பெயரை நாக்கால் தொடுகிறபாமரனும், தேவர்களாலும் முனிவர்களாலும் மற்றவராலும் பெற இயலாத உம்மைக் காண்பதையும் உம்மைப் பற்றிக் கேட்பதையும் பெறுகிறான். மோக்ஷ லக்ஷ்மியின் கேச முடிப்பும் அவன் கை விரல்களில் சிக்குகிறது. (62)*

जाग्रत्युमेश तव नाम्नि पुरस्सुरद्रौ
त्यक्त्वैतदाप्तुमनसोऽन्यत इष्टसिद्धीः।
क्षिप्त्वाऽमृतं करगतं नियतं यतन्ते
भूपांसुभिर्गमयितुं प्रशमं पिपासाम्॥ ६३

*உமையின் நாதரே! உம் நாமம் கற்பக மரமாக முன்னிருக்கும் போது வேறிடத்திலிருந்து தாம் விரும்பியதைப் பெற முயல்பவர், கையிலுள்ள அமுதத்தைப் புறக்கணித்து வழி*

*நடையில் கிட்டுகிற புழுதியைக் கொண்டு நீர்த் தாகத்தைத் தணிக்க முயல்கின்றனர். (63)*

**एकैकमेव शुभमर्पयितुं क्षमाणि**
**हेत्वन्तराण्यपि च येन विना न तानि ।**
**श्रेयोऽखिलं दिशति यस्त्वितरानपेक्षं**
**तस्मिन् सतीश तव नामनि किं भयं मे ।। ६४**

*ஈசனே! உம் நாமத்தின் துணையின்றி யாதொரு நல்லதையும் அளிக்க எதனுலும் இயலாது. வேறொன்றின் துணையின்றி, எல்லா மேன்மைகளையும் தருகிற உம் நாமம் இருக்கும் போது எனக்குப்பயமேன்? (64)*

**आर्तोऽस्मीतीरणमकरुणारोपणाय त्वयि स्यात्**
**दासोऽस्मीति ह्यनुपधिपरित्रातृतापह्नवाय ।**
**सागस्कोऽस्मीत्यपि तव दुराराधतापादकं स्याद्**
**आतस्त्वत्संस्मृतिरलमुमाकान्त गोपायितुं नः ।। ६५**

*உமையின் நாதனே! உமது நினைவு ஒன்றே எம்மைக் காக்கப் போதுமானது. துயருற்றேன் எனக் கூறுவது கருணையற்றவர் என்று உம்மைக் குற்றம் சாட்டுவதாகிவிடும். உமது அடிமை எனக் கூறுவது எந்த எதிர்ப்பார்ப்புமின்றி காப்பாற்றுபவர் என்பதை மறைப்பதாகும. நான் பாபி எனக் கூறுவதும் உம்மை வழிபடுவது எளிதல்ல எனக் கூறுவதாகும். (65)*

**महेशस्सर्वज्ञः पुरहर महादेव इति च**
**त्वदाख्यानामर्थं निपुणतरमासां विमृशतः ।**
**उपास्यः कस्यान्तः स्फुरति न भवान् देव भुवने**
**गृहीतं चेन्नेदं हृदयमदयं नास्तिकतया ।। ६६**

*முப்புரமழித்தவரே! மஹேசர் (பேராளுனர்) ஸர்வஜ்ஞர்((எல்லாமறிந்தவர்) மஹா தேவர்(பெருந்தேவர்) என்று உமது பெயர்களின் பொருளை ஆழ்ந்து விமர்சிக்கிற*

எவனது உள்ளத்திலும் வழிபடத்தக்கவராக நீர் துலங்குகிறீர் அல்லவா? அவ்வாறு உணரப் பெற்ருல் இறைவனில்லை என்று நல்லுணர்வற்றதாக என் உள்ளம் ஆகாது. (பொருளை உணர்ந்து கூறும்போது நாமமே ஈசனுகி உள்ளத்தில் துலங்குகிறது) (66)

दोषग्रहः स्वविषये, गुणधीः परत्र
चान्यत्र चेश्वरदृशिः (मतिः) प्रियभाषणञ्च ।
त्वद्रागिता विजनवृत्तिरितीश षड्भिः
सेवाक्रमैः कलय साधु भवत्परं माम् ।। ६७

தன்னுடைய குறைகளை உணர்வது, பிறரது சிறப்புகளைக் காண்பது, எங்கும் ஈசுவரனைக் காண்பது, அன்புடன் பேசுவது, உம்மிடம் பற்று கொள்வது, தனிமையில் இருப்பது என்ற ஆறு நடைமுறைகளால் உம்மையே நன்கு அண்டியிருப்பவனுக என்னை ஆக்குவீர். (67)

कैलासशिखरिधाम्नः कलिमलविध्वंसहेतुनिजनाम्नः ।
फणिचारुहारदाम्नो भक्ता वयमद्भुतस्य सुमहिम्नः ।। ६८

கைலாய மலையை இருப்பிடமாகக் கொண்டவரும், கலியின் தோஷத்தைத் தன் நாமத்தால் அழிப்பவரும், பாம்பை அழகணியாகப் பூண்டவருமான அந்த அற்புதப் பெருமானின் பக்தர்கள் நாங்கள். (68)

केचित् पुष्पं दळमपि जनाः क्षिप्तवन्तः प्रति त्वां
सङ्क्रीडन्ते सुरतरुभराक्रीडसीमासु धन्याः ।
कीर्णं नीरं किमपि शिव यैस्ते सुधासिन्धुकेळी-
स्वच्छन्दा भान्त्यपि तु न भजाम्येष जाल्मो भवन्तम् ।। ६९

சிலர் பூவையும் இலையையும் உம்மை நோக்கிப் போட்டு கற்பக மரச் சோலைகளில் புண்ய பலனை அனுபவிப்பவராக விளையாடுவர். ஏதோ சிறிது நீரை உம் மீது கொட்டியவர் அமுதக்கடலில் விருப்பப்படி விளையாடுகின்றனர். அதனை யறிந்தும் இந்தப் போக்கிரி உம்மை வழிபடாதிருக்கிறேனே! (69)

त्वत्सम्पूजास्वपि करयुगं पादयुग्मं तथा त्वत्-
प्रादक्षिण्यक्रमणविधिषु त्वत्प्रशंसासु वाचम्।
चेतस्त्वत्संस्मृतिषु भुवि ये कुर्वते शर्व तेऽमी
धन्याः कुर्वन्त्यपि निजदृगध्वन्यमन्यञ्च धन्यम्॥ ७०

*சர்வரே! உமது வழிபாட்டில் இரு கைகளையும் உம்மை வலம் வருவதில் இரு கால்களையும் உம்மைத் துதிப்பதில் வாக்கையும் உம்மை நினைப்பதில் உள்ளத்தையும் செயல்படுத்துபவர் பாக்யசாலிகள். தன் கண்களில் படுபவரையும் பாக்கிய சாலிகளாக்குகிறார்கள்.(70)*

चन्द्रार्धशेखर भवच्चरणारविन्द-
सन्दर्शनादहमपास्तसमस्तखेदः।
आस्तामिदं मदवलोकनभाजनानां
अप्येनसा परिभवो दुरवाप एव॥ ७१

*பாதிச் சந்திரனைச் சூடியவரே! உமது திருவடிகளைக் கண்டதால் துயரமனைத்தும் நீங்கியவனானேன். இது இருக்கட்டும். என்னைக் காண்பவருக்கும் பாபத்தால் நேர்கிற துயரம் ஏற்படாது.(71)*

यस्त्वत्पादाम्बुरुहकलनस्पृष्टजन्मा स मेऽस्तु
त्राता दाता गुरुरपि सखा वा नु बन्ध्वन्तरं वा।
शम्भो यस्त्वय्यहह विमुखो मा स मे तस्य माऽहं
मह्यं द्रुह्यन्नपि भवति हि त्वां श्रितो वल्लभो मे॥ ७२

*மங்களத்தின் தோற்றுவாயே! (சம்புவே) உமது திருவடித்தாமரைகளுடன் தொடர்புள்ள பிறவிபெற்றவனே என்னைக் காப்பாற்றுபவனும் பொருள் வழங்குபவனும் குருவும் நண்பனும் வேறு உறவினனும் ஆகட்டும். உம்மிடம் பராமுகமாயிருப்பவன் என்னைச் சார்ந்தவனல்ல. நானும் அவனைச் சார்ந்தவனாக மாட்டேன். எனக்குத் துரோகியாயிருந்தாலும்*

*அவன் உம்மைச் சார்ந்தவனுயின் என் அன்பிற்கு உகந்தவனே. (72)*

प्रेयानेकस्त्वमसि परमानन्दरूपः स्मरारे
प्रेयांसस्ते भजनकृतिनो दृष्टमात्रात् पुनन्तः ।
तच्च प्रेयस्तदुपकरणीभावमालम्बते यत्
नान्यत् प्रेयस्तव हि करुणाभाजनानां जनानाम् ।। ७३

*மன்மதனின் எதிரியான சிவனே! பேரானந்த வடிவினரான நீர் ஒருவரே எனக்குப் பிரியமானவர். உமது நாம பஜனத்தால் வாழ்வதன் முழுப்பயனைப் பெற்ற பெரியோர்கள் பார்வையாலேயே தூய்மை பெறச் செய்பவர்கள். அவர்கள் எனக்கு மிகப் பிரியமானவர்கள். இதற்கு உதவுபவையனைத்தும் பிரியமானவையே. உன் கருணைக்கு ஆளான மக்களுக்கு இதனை விடப் பிரியமானது எதுவுமில்லை. (74)*

रुष्टे हरेऽवति गुरुर्जगतीत्यनेन
न्यायेन मां भगवतोज्झितमीश्वरेण ।
आर्तं बलादवत भागवता नमो वः
कारुण्यवारिनिधयो गुरवश्च यूयम् ।। ७४

*சிவன் கோபித்துக் கொண்டால் கோபத்திற்காளாகுபவனை குரு காப்பார் என்ற நீதிப்படி பகவானுன ஈசனுல் கைவிடப்பட்ட என்னை கருணைக்கடல்களான குருவான நீங்கள் வலிவில் வந்து காப்பாற்றுவீர், பகவானைச் சார்ந்தவர்களே! உங்களுக்கு நமஸ்காரம். (74)*

वदने शिवदिव्यनामधेयं महिमानः पुनराशये तदीयाः।
वसतिस्सह तत्परत्वधन्यैरतिवेलं किल भाग्यवैभवं नः ।। ७५

*வாயில் சிவனின் திவ்யநாமம்; உள்ளத்தில் அவரது பெருமைகள்; அவரை நாடுவதாலேயே வாழ்வை மேனிலைக்குக் கொணர்ந்தவர்களுடன் கூட வசிப்பது இவை அனைத்துமே கரை கடந்த எமது பாக்கியத்தின் பெருமையாகும். (75)*

ईशेन यं प्रति सकृन्निजनामधेय-
सङ्कीर्तनस्य सकलाघनिवर्तकत्वम् ।
साक्षादभण्यत जगद्गुरुमाश्रये तं
गोविन्दसंयमिवरं मम भागधेयम् ॥ ७६

*ஈசன் தானே தனது நாமஸங்கீர்த்தனம் எல்லா பாபங்களையும் போக்கும் என்று நேரில் இவரிடம் சொன்னார். அந்த கோவிந்தர் என்ற சிறந்த துறவியைச் சரணடைகிறேன். அது எனது பாக்கியம். (இவர் ஸ்ரீபோதேந்திரரின் சிஷ்யர்) (76)*

आत्मा शम्भो भवसि खलु नस्सच्चिदानन्दरूपः
त्वय्येतस्मिन् किमिति न भवेज्ज्ञानतां प्रेमबन्धः ।
आत्मत्वेनाभिमतमतदित्यप्रियं तत्प्रसङ्गात्
अन्यच्चेदं पदमनुपदं यत् किलोपप्लुतानाम् ॥ ७७

*சம்புவே ! பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமும் வடிவான நீர் எமது ஆத்மா. அதை அறிந்தவர்களுக்கும் ஏன் உம்மிடம் அன்புப்பிணைப்பு ஏற்படக்கூடாது? ஆத்மாவல்லாததொன்று ஆத்மாவாகக் கருதப்படின் அது பிரியமில்லாதது என்பதுடன் துன்பத்தின் இடமுமாகும். (ஆத்மாவைத் திருப்திப்படுத்தவே வெளிப் பொருளனைத்தும் பிரியமாகிறது. அதனால் ஆத்மா மிக மிகப்பிரியமானது என உபநிஷதம் கூறும்) (77)*

माता तातस्त्वमसि भवसि त्वं हि मित्रं कळत्रं
पुत्रश्चान्यस्त्वमसि बत का दुर्मनीषा ममैषा ।
निस्सीमार्तिप्रणयि तदिदं किन्न सर्वापरोक्षं
तन्मे त्वं त्वं गिरिश भगवन् सच्चिदानन्दमूर्ते ॥ ७८

*கிரிசரே! தாயும் தந்தையும் நீரே! நீரே நண்பனும் மனைவியும் மகனும். நீர் வேறானவர் என்ற இந்த கெட்ட எண்ணம் எனக்கு ஏன் வந்தது? பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமும் வடிவானவரே! பகவானே! கிரிசரே! (மலையில் உறைபவரே) நீர்*

வரையறையற்ற அன்பு கொண்டதும் எல்லோருக்கும் உள்ளுணர்வில் புலப்படுவதுமான அந்த என் ஆத்மப் பொருளல்லவா? (78)

आत्मानं खल्वनिदमुदयास्त्वां गिरस्सङ्गिरन्ते
सन्त्रातारं गिरिश जगतामीशितारं वदन्त्यः ।
आर्तिश्रान्तेश्शरणवरणस्यास्पदं कः कथं वे-
त्यन्तर्ग्लानिर्मम पुनरसावाश्वसित्यन्तरात्मा ।। ७९

தோற்றுவாயற்ற வேதவாக்குகள் உம்மை ஆத்மாவாக விளக்குகின்றன. நீரே காப்பாற்றுபவர், உலகங்களை ஆள்பவர் என்றும் சொல்கின்றன. துக்கம் நீங்குவதற்கு புகலிடமாகத் தேர்ந்தெடுக்கத்தக்க இடம் எது? புகலிடமாயிருக்க வேண்டுவது எவரிடம் எப்படி என உள்ளம் களைத்தாலும் இந்த அந்தராத்மா மறுபடி ஆறுதலளிக்கிறது. (79)

भावं बध्नन्त्यकृतकगिरस्त्वय्यनन्याशयिन्यो
रागोन्मादादपि मुनिधियो धावनैरापतन्ति ।
रूपायास्मै निरुपमितये सुन्दरायेन्दुरेखा-
चूडालाय स्पृहयति विभो वृत्तिरप्यान्तरी मे ।। ८०

ஐயனே! பொய்யா மொழியான வேதங்கள் வேறு கருத்திற்கு இடமின்றி உம்மிடம் உள்ளுணர்வைக் கட்டிப் போடுகின்றன. முனிவர்களின் சித்தப் போக்கும் பற்றால் ஏற்பட்ட மதிமயக்கத்திலிருந்து பயந்து .உம்மிடம் ஓடிவருகின்றன. அழகியதும் சந்திரனின் கீற்றைச் சூடியதும் ஈடிணையற்றதுமான இந்த வடிவத்தைக் காண என் உள்ளப் போக்கும் ஆர்வம் காட்டுகிறது. (80)

त्वादृक्षं मे किमपि दयितं वस्तु नैवास्ति शम्भो
मादृक्षास्ते शतमनुपदं त्वर्थिनो बाधितारः ।
एकोऽप्यस्मिन् जगति कुमुदस्यास्ति चन्द्रायमाणो
नैतादृश्यः कति सुमनसस्सन्ति चन्द्रस्य तस्य ।। ८१

சம்புவே! உம்மைப் போன்று என் மனமுவந்த பொருள் வேறொன்றில்லை. உம்மிடம் கோரிக்கையுடன் சூழ்பவர்கள் என்னைப் போன்று நூற்றுக் கணக்கானவர் இருக்கின்றனர். அல்லிப்பூவிற்குச் சந்திரனுக உதவுகின்ற வேறொன்று இவ்வுலகில் உண்டா? சந்திரனுக்கு அல்லி போன்று எத்தனையோ பூக்கள் உலகில் உள்ளன. (81)

तद्दोषापक्षतिमुपकृतिं स व्यधादार्तिकृद्यः
कः कोपार्हस्तदवमृशतां तत्तु यत् किञ्चिदस्तु।
न्यक्कारस्तु स्मरहर भवद्भक्तिभाजा कृतो यः
सोऽयं त्वद्भक्त्यमृतमधुरीभावितो रोचते मे ॥ ८२

எவன் எனக்குத் துன்பம் தந்தானே அவன் (துன்பத்திற்குக்காரணமான) பாபங்கள் குறைய உதவினான். கோபிக்கத்தக்கவன் யார் என்ற ஆராய்ச்சியில் ஏதேனும் ஒன்று காரணமாகட்டும். மன்மதனை அழித்தவரே! உம்மிடம் பக்திபூண்டவன் என்னை அவமதிப்பது கூட, உம்மிடம் கொண்ட பக்தியாகிய அமுதச்சுவையில் ஊறிநிற்பதனால் எனக்கு இனிக்கிறது. (82)

मा मे स्वप्नोऽप्यहह सहते यस्त्वदन्यं वदान्यं
कामं वाञ्छत्वितर इतरोपासनायासदैन्यम्।
तस्योपास्यो विधिहरिहरेष्वस्तु कोऽपीश सोऽपि
त्वद्भ्रूवल्लीस्फुरणशरणः स्पन्दने विन्दनेऽपि ॥ ८३

ஈச! உம்மைத் தவிர வேறு ஒரு வள்ளலை என் கனவும் பொறுக்காது. மற்றவன் வேறொரு தெய்வத்தை வழிபடுவதில் சிரமமும் தாழ்வும் விரும்பி ஏற்கட்டும். ஈசனே! பிரம்மாவோ ஹரியோ ஹரனோ அவனது வழிபடு தெய்வமாக இருக்கட்டும், அவர்களும் அசையவும் அறியவும் உமது புருவநெரிப்பை அண்டி (அனுமதியை எதிர்பார்த்து) நிற்பவரே. (83)

ब्रह्मप्रष्ठा हर किमपरं भ्रूलताकिङ्करास्ते
भावत्काज्ञां भवति न विना लभ्यसामान्यलाभः।

ऐदम्पर्यादितरविषयादन्यथागत्यभावात्
अन्तर्यामिन्नखिलभजनश्रान्तिरन्वेति तत्त्वाम् ॥

*அந்தர்யாமியே! ஹரனே ! பிரும்மா முதலானோரும் உமது புருவ அசைப்பிற்குப் பணிபவர்களே. உமது அனுமதியின்றி எளிதில் கிடைப்பது கூட கிட்டாது. மற்றது வேண்டாம், இது தான் வேண்டும் என்ற நிலையாலும் இதனைப்பெற வேறு ஒருவரிடமிருந்து உதவிபெற இயலாமையாலும் எல்லோரது கடைசி எதிர்பார்ப்பும் உம்மைச் சார்ந்து நிற்கிறது. (84)*

प्राप्याणां त्वं महदमहतां प्रापकोऽन्यस्त्वशक्तः
सर्वप्रेप्सुस्त्वमतिसदृशस्त्वां तदेवोपरुन्धे ।
तन्नाक्षेप्यं निरुपमचिदानन्दसाम्राज्यलक्ष्मी-
काङ्क्षी यस्त्वां शिव कलयते तत्त्वदव्यस्स धन्यः ॥ ८५

*சிவனே! சிறிதும் பெரிதுமாக அடையத்தக்கதனைத்தையும் கொண்டு சேர்ப்பிக்க மற்றவர் இயலாதவர்கள். எல்லோராலும் அடைய விரும்பப் பெறுபவர் நீரே. உமக்கு இணையாக வேறு எவருமில்லை. அது தான் உம்மைக் கட்டுப்படுத்துகிறது. ஈடிணையற்ற சிதானந்தப் பேரரசின் சிறப்பை விரும்புபவன் உம்மைத்தான் நாடுவான். அது மறுக்கத்தக்கதல்ல. உம்மாலேயே காப்பாற்றத்தக்கவன் என்றுவது பெரும் பாக்கியம் (85)*

एतादृक्षोर्मिळविषयसक्तचन्धकारान्तराळात्
मुक्तो भक्तप्रकरदिविषत्पादपं पादपद्मम् ।
किं भावत्कं गिरिश परमानन्दधानं दधानः
तक्षत्याधीन्न यदपि मनोऽनन्तरानन्तरात्मा ॥ ८६

*கிரிசரே! இம்மாதிரி விஷயங்கள் அலைமோதுபவை. இவற்றில் ஈடுபடுவது பேரிருளில் நுழைவதாகும். இதிலிருந்து விடுபட்டவன் உமது திருவடித்தாமரையைத் தாங்குகிறான். திருவடி பக்தர் கூட்டத்திற்கு கல்பக மரமாக உதவுவது. பேரானந்தத்தின் இருப்பிடம். அந்தத் திருவடியைத் தாங்கியதால்*

*அவனது அந்தராத்மா மனத்துடன் நெருங்கிய நோய்களை சிதைக்கிறதல்லவா? (86)*

**कल्याणी ते गिरिश करुणाकल्पवल्लीमतल्ली**
**गीर्वाणाग्रेसरचितसमुद्दृष्टिपाताङ्कुरश्रीः ।**
**दारुप्रायं परिसरगतं तावदालम्बतां मां**
**अस्या हानिर्न पुनरियता धन्यतैतस्य तु स्यात् ।। ८७**

*கிரிசரே! உமது கருணை எனும் சிறந்த கற்பகக் கொடியானது தேவர்களின் முன் நிற்கிற உமது கடைக்கண் பார்வையிலிருந்து முளைத்து வந்தது. அது அருகில் மரம் போன்று நிற்கிற என்னை சாரட்டும். அதனால் அதற்குக் குறையேதுமில்லை. இவன் பெரிய பாக்யவான் ஆவான். (கொடிக்கு மரம் பிடிப்பாவது உலகநிலை) (87)*

**श्रीकान्ताद्या विबुधतिलकाः श्रीमतीमर्थयन्ते**
**यां ते दृष्टिः स्पृहयति जनस्सैष तस्यै किलास्यै ।**
**अव्यावृत्ता गतिरियमये नाथ तेषामतेषां**
**अप्यातस्ते समुचितमुमाकान्त मन्तुं न मन्तुम् ।। ८८**

*லக்ஷ்மீபதி முதலிய சிறந்த தேவர்கள் சீர்மிக்க உமது பார்வையை நாடுகின்றனர். இவனும் அதனையே விரும்புகிறான் இது தவறல்லாத வழி. அவர்களுக்கும் அவர்களல்லாதவருக்கும் நாதரே! உமாகாந்தரே! அதனால் என் பாபம் பொருட்படுத்தத்தக்கதல்ல. (88)*

**सम्वित्तत्तद्विषयविशदीकारधीरा गिरस्त्वां**
**व्याकुर्वाणा गुणसमुदयैर्लोभनीयाश्च तास्ताः ।**
**श्लाघार्थानां परमपि तथा भूतये विश्वमूर्ते**
**व्यञ्जन्ति त्वां शिव पुनरमूस्तत्र**
**वन्द्योऽपि च त्वम् ।। ८९**

*உலகமே வடிவானவரே! உள்ளறிவால்*

உணரத்தக்கதனைத்தையும் விளக்குவதில் தேர்ந்த வேத வாக்குகள் உம்மை நிரூபிக்கவந்தன. பாராட்டாகிறவற்றைத் தவிர குணச்சிறப்பால் பெரிதும் விரும்பக் கூடிய அந்தந்த நிலைகளை உலகின் நன்மைக்காக விளக்கின. அங்கும் வணங்கத்தக்கவர் நீரே. (89)

मय्यत्र दोषकथनं बहुभिः किमुक्तैः
सिद्धार्थसाधनमसत्यवचोगुणोक्तैः ।
अस्मिन् वराकतिलकेऽप्यहहानुकम्पा
सम्भाव्यते शिव तवैव दयाम्बुराशेः ॥ ९०

சிவனே! வீணுகப் பல பேசி என்ன பயன்? எனது பொய் பேசுவது, துர்குணம் முதலியவற்றைக் கொண்டு என்னிடம் குறை கூறுவது இருப்பதைத் திரும்பக் கூறியதாகும். பயனற்றவர்களின் திலகமான என்னிடமும் பரிவு காட்டுவது கருணைக் கடலான உமக்கே தகும். (90)

आप्यायनाय च निवर्त्यनिवर्तनाय
त्वय्याश्रिते शिव न तत् किमपि प्रतीमः ।
त्वं शिष्यसे पुनरखण्डसुखात्मकस्तत्
किं प्राभवं कृतधियो न जहत्यपि त्वाम् ॥ ९१

சிவனே! போஷிப்பு பெறவும் தடுக்க வேண்டியதைத் தடுக்கவும் (இன்பம் பெறவும் துன்பத்தைத் தவிர்க்கவும்) உம்மை அண்டியபின் எதனையும் நாங்கள் உணரவில்லை. (துன்பம் நீங்கியதாகவோ இன்பம் பெற்றதாகவோ தெரியவில்லை) குறைவற்ற ஆனந்த வடிவினராக நீர் மட்டும் மீதமிருப்பதாகத் தெரிந்தீர். அது என்ன பேராளுமையோ! உறுதிபூண்டவர் அப்போதும் உம்மை விட்டகலவில்லை (91)

महिम्नामाम्नायः स्तुतिषु तव नालं पशुपते
तदस्मिन्नर्थेऽलं तनितुमधरस्पन्दमपि कः ।
तदप्याशा मेऽन्तर्वलति यदयुक्तास्फुटवचो-
निगुम्भो डिम्भोऽपि प्रदिशति मुदं चेतसि पितुः ॥ ९२

பசுபதியே! உமது பெருமைகளைத் துதிக்க வேதங்களும் சக்தியற்றவை. பிரும்மா அந்த விஷயத்தில் உதட்டையசைக்கக் கூட இயலாதவர். அப்படியிருந்தும் என் உள்ளத்தில் ஆசை சுற்றிச்சுற்றி வருகிறது. பொருந்தாத மழலைப் பேச்சுள்ள பாலகன் தந்தையின் உள்ளத்தில் ஸந்தோஷத்தை அளிப்பதில்லையா? (92)

गौरीवल्लभ दुर्लभस्सहि लवः कारुण्यसिन्धून्मिषत्-
कल्लोलप्रसरैरभिन्नवपुषो मामस्पृशत् त्वद्दृशः ।
नो चेत् कायमहं क तावदमृतस्यन्दी भृशं दीनतो-
च्छेदी फल्गिवतरद् भवान्मम परित्रातेत्ययं प्रत्ययः।। ९३

கௌரியின் மணாளரே! கருணைக் கடலின் பேரலை மோதலைக் காட்டிலும் வேறுபடாத உமது பார்வையின் அந்தச் சிறு துளி என்னைத் தொட்டதே, அது கிடைத்தற்கரியது. இல்லாவிடில், நான் எங்கே? அமுதம் பொழிவதும் எனது தாழ்நிலையைப் போக்குவதும் மிகப் பெரிதுமான ''நீர் என்னைக் காப்பவர்'' என்ற திடநம்பிக்கை எங்கே? (93)

अर्धोन्मीलन्नयनमसकृन्निर्गळद्बाष्पधारं
प्रादुर्भूताविरळपुळकं पर्युदस्तापवर्गम् ।
वामाङ्कालङ्करणगिरिजां दिव्यमूर्तिं त्वदीयां
ध्यायन्ध्यायं प्रमदजलधौ नाथ लीनः कदा स्याम् ।। ९४

நாதரே! பாதிக் கண்கள் மூடியவாறு, அடிக்கடி கண்ணீர் தாரையாகப் பொங்குமாறு, இடைவிடாமல் புல்லரிப்பு ஏற்பட்டவாறு மோக்ஷமும் வேண்டாம் எனக் கருதியவாறு, இடது மடியில் மலைமகளை அணைத்த உமது திவ்ய உருவத்தை இடையறாது தியானித்து ஆனந்தக் கடலில் நான் கரைவது எப்போது? (94)

साम्ब स्वामिन् भवदनुगुणा त्वत्प्रसादेन लब्धा
त्वत्तोऽन्यस्मिन्निह विनिहिता चापलात् केवलान्नः ।
शोभेतेयं न खलु भणितिस्सौरभास्फारभङ्गी-
क्रान्ताशान्ता कुणप इव हा रोपिता पुष्पमाला ।। ९५

அன்னையுடன் கூடிய என் நாதரே! இந்த எனது பேச்சு உமக்கு ஏற்றது. உமது அருளால் பெற்றது. அது எமது சபலத்தால் உம்மைக்காட்டிலும் வேறொரு பொருளில் பயன்படுத்தப் பெற்றது. நறுமணம் பொங்கிப் பரவி நிற்கிற பூமாலை பிணத்தின் மீது சாற்றப் பெற்றதைப் போல் அழகிழந்து விட்டதல்லவா? (95)

त्वामाप्तानां भवति भगवन्नष्टधा वर्ष्म भिन्नं
ग्रीवां क्ष्वेलः स्थगयति शिरः किञ्च सिन्धुर्निरुन्धे।
एषा तावत् भवदुपकृतिप्रक्रिया विश्रुतैव
प्रेक्षावन्तस्त्वयि तु बलवत् प्रेम बध्नन्ति चित्रम्॥ ९६

பகவானே ! உம்மை அண்டியவரது உடல் எட்டாக மாறுகிறது. (ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி, ஸூரியன், சந்திரன், ஜீவன் என.) கழுத்தை விஷம் தடுக்கிறது. தலையை ஆறு தடுக்கிறது. இது தான் நீர் உதவுகிற விதம். இது புகழ் பெற்றது. பேரறிவாளரோ உம்மிடம் வலிவு மிக்க அன்பை வைக்கின்றனர். இது வியக்கத் தக்கதல்லவா? (96)

या जातु स्वे पथि कथमपि प्रेक्षितं नो जहाति
ग्लानीश्चास्य क्षपयति भवद्वल्लभत्वञ्च धत्ते।
कल्याणी सा जयति जननी त्वत्पदाम्भोजभक्तिः
चेतश्चैतद् गिरिश तदवष्टम्भधृष्टं भवेत्किम्॥ ९७

கிரிசரே! உமது திருவடியில் ஆழ்ந்த பக்தியானது, தன் வழியில் காணப்படுபவனை எப்போதும் விடுவதில்லை. அவனது சோர்வை அகற்றுகிறது. உனது அன்புக்குரியவனாகச் செய்கிறது. மங்கள மிக்க பக்தித் தாய் இவ்வாறு விளங்குகிறது. இந்த என் சித்தமும் அதனைப் பற்றி நிற்பதால் ஆணவம் மிகுந்ததாக ஆகிவிடுமோ? (97)

जातु भ्रूलतिकानिदेशसरणिं यां ते समुल्लङ्घितुं
नालं पद्मभवो न वा हरिहरौ कुत्रेन्द्रचन्द्रादयः।

सेयं भूतिरपि त्वदीयपरमैश्वर्याम्बुधेश्शीकरः
सौलभ्यं कियदस्य ते शिव भवस्यात्मैव तत्पश्यताम्॥ ९८

*சிவனே! உமது புருவ அசைப்பால் காட்டப் பெறுகிற வழியை பிரும்மாவும் விஷ்ணுவும் சிவனும் கூட மீற முடிவதில்லையெனில் இந்திரனும் சந்திரனும் ஏனையோரும் எங்கே? அந்தப் பெரு நிலையும் உமது பேராளுமைக் கடலின் திவிலையே. ஆனால் அது எளிதில் கிட்டுகிறதே! அந்தப் பேராளுமையைக் காண்பவரின் ஆத்மாவாக நீர் ஆகிவிடுகிறீரே? (98)*

न हि पतितो जीवेयं जनसङ्घाङ्गारघोरवाहिन्याम्।
त्वत्पदकमलामृतरससरसि विशन् शिव कदा नु निर्वृणुयाम्॥

*சிவனே! மக்கள் கூட்டமாகிய பெருந்தணலாலான ஆற்றில் விழுந்தால் பிழைக்கமாட்டேன். உம் திருவடித்தாமரையிலிருந்து பெருகுகிற அமுததாரையில் ஆழ்ந்து நான் அமைதி பெறுவது எப்போது? (99)*

शिव शिव शिव शङ्करेति तारं विपिनतले विजने सदैव जल्पन्।
अविरळविगळद्दृगम्बुरुद्यत्पुळकभरोऽस्तभरः कदा सुखी स्याम्॥

*சிவ! சிவ! சிவ! சங்கர! என்று காட்டின் நடுவே தனிமையில் உரக்கக் கூறிக் கொண்டு, இடைவிடாது கண்ணீர் மல்க, உடல் முழுவதும் புல்லரிப்புடன் சுமையையிறக்கிச் சுகம் பெறுவது எப்போது? (100)*

धत्से दयां मयि न चेत् क्व नु तद्यशः स्यात्
यत्प्रागनेकपरिपालनसम्भवं ते।
शम्भो कुलालचिरनिर्मितकुम्भभङ्गो
दण्डेन किं न भवति क्षणमात्रभावी॥ १०१

*சம்புவே! முன்னர் பலரைக் காப்பாற்றிப் பெற்ற புகழ், என்னிடம் நீர் பரிவு காட்டாவிடில் எங்கோ மறைந்துவிடும்.*

குயவன் வெகு நாட்கள் உழைத்துச் செய்த பானைகளைத் தடி கொண்டடித்து உடைப்பது நொடியில் நடக்குமல்லவா? (101)

**आस्ते भवानस्म्यहमिन्दुमौळे**
**दया तवास्ते मम दैन्यमस्ति।**
**गोप्तासि गोप्योऽस्मि किमन्यदत्र**
**विज्ञापनीयं तव साम्बमूर्ते॥ १०२**

சந்திரனைச் சூடியவரே! நீர் உள்ளீர். நானும் உள்ளேன். உம்மிடம் தயை உள்ளது. என்னிடம் ஏழ்மை உள்ளது. நீர் காப்பவர். நான் காக்கத்தக்கவன். அன்னையுடன் கூடியவரே! (ஸாம்பமூர்த்தியே) வேறு என்ன உம்மிடம் விண்ணப்பிக்க உள்ளது? (102)

**दयोपमन्यौ या शम्भो या मृकण्डुसुते च ते।**
**साम्बमूर्ते दयामूर्ते मय्यार्ते कुरु तां दयाम्॥ १०३**

சம்புவே! ஸாம்ப மூர்த்தியே! தயை வடிவானவரே! உபமன்யுவிடமும் மார்க்கண்டேயரிடமும் காட்டிய தயையை துயரால் வாடி நிற்கின்ற என்னிடம் காட்டுவீர். (103)

**ध्रुवमिव कमलाधवो दयालुः**
**शिशुमुपमन्युमिव त्वमिन्दुमौळे।**
**अव सकरुणमार्तमर्भकं मां**
**शिव न विळम्बितुमर्हसि प्रसीद॥ १०४**

சிவனே! பிறைசூடியவரே! தயை மிக்க லக்ஷ்மியின் பதியான விஷ்ணு துருவனைக் காப்பாற்றியது போல் நீர் சிசுவான உபமன்யுவைக் காத்ததுபோல், துயருற்ற சிசுவான என்னைக் கருணையுடன் காப்பாற்றுவீர். தாமதிப்பது தகாது. அருள் புரிவீர். (104)

**अस्तस्पृहोऽहमभिजातदयोऽखिलेषु**
**पश्यन् भवन्तमपि चैषु नमश्च कुर्वन्।**

ऊर्जस्वलां त्वयि वहन् रतिमुज्झितोप-

तापः कदेश विचराणि तव प्रसादात् ।। १०५

ஈசனே! பற்றற்றவனுக, எல்லோரிடமும் பரிவுகாட்டுபவனுக, எங்கும் உம்மை தரிசித்து வணங்குபவனுக, மனத்தின் தாபத்தை அகற்றி உம்மிடம் மிகத் தீவிர அன்பு பூண்டு உம் அருள் பெற்றவனுக எப்போது நடமாடுவேன்? (105)

नमो वां रोदस्यौ भवतु भवतीभ्यश्च ककुभो

नमो वां चन्द्रार्कौ भवतु च नमो विश्व भवते ।

रतिर्मे युष्माभिर्भगवति शिवे शैलतनया-

सहाये दातव्या मयि रचयितव्या ननु दया । १०६

வானமே! பூமியே! உமக்கு நமஸ்காரம். திசைகளே! உமக்கு நமஸ்காரம். ஸூரிய சந்திரர்களே! நமஸ்காரம். உலகமே! உனக்கு நமஸ்காரம். நீங்கள் பரிவு காட்டி உமைமணுளனை சிவபெருமானிடம் அன்பும் ஈர்ப்பும் ஏற்படும்படி செய்வீர். (106)

दुश्चेष्टिताघपरुषेऽपि सुतेऽतिबाले

माता यथा बत तथा गिरिश त्वदीया ।

द्वेष्ये जनेऽपि विचकास्ति हि साऽनुकम्पा

पारे गिरां मधुरिमा भवदीयतायाः ।। १०७

கிரிசரே! கெட்ட நடைமுறைகளால் கொடுமை புரிகிற சிசுவான தன் மகனிடம் தாய் எவ்வாறு பரிவு காட்டுவாளோ, அவ்வாறே வெறுக்கத்தக்க மக்களிடம் கூட உமது பரிவு விளங்குகிறது. உம்மைச் சார்ந்துள்ள நிலையின் இனிமை சொல்லிற்கு அப்பாற்பட்டது. (107)

मा तावदन्तकरिपो मयि तेऽनुकम्पा

स्याच्चेदलं त्वयि सकृन्मम भावयोगः ।

कीनाशकिङ्करदुरारभटीभराणां

किं तावता न भविता सहसोपमर्दः ।। १०८

யமனின் எதிரியே! உமக்கு என்னிடம் பரிவு இல்லையா? ்டம்மிடம் எனக்கு எண்ணங்களால் ஈடுபாடு இருந்தால் போதும். அவ்வாருனல், யமகிங்கரர்களின் பயங்கர ஆர்பாட்டத்தின் ;ாக்குதல் திடீரென ஏற்படாதல்லவா?(108)

वेहाय गौरीश भवत्पदाम्बुजं विहारयन् दुर्विषयेष्विदं मनः ।
जेघांसुहस्ते स्वशिरः प्रयत्नतः समर्पयन्नस्म्यसमर्थशेखरः ।। १०९

கௌரியின் ஈசனே! உமது திருவடிகளைப் பற்ருமல் பிட்டேன். கெட்ட விஷயங்களில் மனத்தைச் செலுத்தினேன். ›கொலைகாரனின் கையில் வலிவில் தன் தலையைக் கொடுக்கிற அசடுகளின் தலைவனுக உள்ளேன்(109)

केयत् पराङ्मुख्यं त्वयि सुखचिदात्मन्यहह मे
किंयत्यन्यत्रैषा रतिरगतिकोऽपीश तदहम् ।
;तात्मा न ग्राह्यस्तव तु करुणाऽनन्यशरणं
न जह्यात् कल्याणी स्वयमवगुणापह्नवगुणा ।। ११०

ஈசனே! ஆனந்தமும் பேரறிவுமே வடிவாயுள்ள உம்மிடம் ௭ந்த அளவு எனது பராமுகம் உள்ளது? வேறு பொருட்களின் ҕாட்டம் எந்த அளவில் உள்ளது? ஆனுலும் நான் இன்று ;தியற்றவன். தன்னைத்தானே வீழ்த்திக் கொண்டவன். உம்மால் ரற்கத் தகாதவன். எனினும் கதியற்ற என்னை உமது கருணை கை பிடாது. என்னிடமுள்ள கெட்டகுணங்களை மறைப்பதையே அது ;ன் சிறப்பாகக் கொண்டது அல்லவா? (110)

ापीयसो मम भवेद् भवदीयसेवा
नीचस्य विप्रनिकटस्थितिवद्दुरापा ।
ालं कियन्तमिव हा मम दुर्दशेयं
केयं विभो विमुखता मयि ते प्रपन्ने ।। १११

நீசனுக்கு வேதமோதிய அந்தணனின் அருகாமைபோல், ்மக்குப் பணிவிடை செய்வதென்பது பெரும்பாபியான ௭னக்குக் கிட்டாதது. என் இந்த கெட்ட நிலை இன்னும் எத்தனை

நாள் நீடிக்கும்? பெருமானே! உம்மை அணுகி நிற்கின்ற என்னிடம் ஏன் இந்தப் பராமுகம்? (111)

**त्वद्भक्तिसम्पदनुरूपगुणैरुदारैः**
**दूरोज्झितो जगति नीच इव द्विजेन्द्रैः ।**
**आसे कियच्चिरममङ्गळवृत्तिमेतां**
**आधून्वती शिव दया मयि ते कदा स्यात् ॥११२**

சிவனே! என்னிடம் உமக்குப் பரிவு எப்போது ஏற்படும்? நானோ உம்மிடம் பக்தி கொள்வதற்கேற்ற நடை முறைகளால் தூரவிலக்கப்பட்டுள்ளேன். உலகில் உயர்ந்த அந்தணர்களால் நீசர்கள் விலக்கப்பட்டுள்ளது போல் இது. உமது தயை என்னிடம் எப்போது ஏற்படும்? எப்போது மங்களமல்லாத என் நடைமுறைகளை அது தூக்கி எறியும்? (112)

**भक्तिर्हि त्वं शरणमितरत् तुच्छमित्यर्थतन्त्रा**
**बुद्धिस्सेयं प्रमितिकरणस्तोमसंरम्भपात्रम् ।**
**नैनामाप्नोम्यमतिरियता नन्वतृप्तोऽस्मि चोपा-**
**लम्भी शम्भो तव तु सकलज्ञस्य भर्तुर्विनोदः ॥ ११३**

சம்புவே! நீரே அடைய வேண்டிய இடம். மற்றது துச்சம் என்ற நிலை உணர்ந்த அறிவே பக்தியாகும். அந்த அறிவு ஆழ்ந்து ஆராய்ந்து நிர்ணயிக்கும் ஆற்றல் கொண்டது. அதனை நான் பெறவில்லை. இது வரை நான் அறிவற்றவனாகவே உள்ளேன். மன நிறைவின்றி என்னையே நொந்து கொள்கிறேன். எல்லாமறிந்த உமக்கு இது விளையாட்டு. (113)

**सम्राण्निःस्वादपृथगपृथक् सर्वविद्गाढमूढाद्**
**या नो चेद्या पुनरनुचरद् ब्रह्म शक्रादिभूतिः ।**
**शम्भो त्वं मे शरणमिति सम्प्रत्ययानन्यरूपां**
**त्वद्भक्तिं तामहह सुलभां नाथ नाप्नोमि धिङ्माम् ॥ ११४**

சம்புவே! அரசன் ஏழையை விட்டு வேறு இல்லை. பேரறிவாளன் முட்டாளை விட வேறல்ல. அவ்வாறே பிரும்மமும் இந்திரன் முதலானோரின் இருக்கையும் என்றாகுமா? நாதரே! நீரே எனக்குப் புகலிடம் என்ற நம்பிக்கையைக் காட்டிலும் வேறுபடாத பக்தியை, வெகு எளிதில் கிடைக்கக் கூடியதை நான் இதுவரை பெறவில்லையே! நான் ஓர் அவலம். (114)

कृतान्तविध्वंसनृशंसतास्पदं त्रिविक्रमस्वापसुखास्पदाङ्गदम् ।
पदारविन्दं तदुदारमीश ते कदा नु पश्यामि मुदाऽनया दृशा ।। ११५

ஈசனே! பெருமை மிக்க உமது திருவடிகளை மகிழ்ச்சியுடன் இதே கண்களால் எப்போது பார்ப்பேன்? அது யமனை அழிப்பதில் கொடுமை காட்டியது. திரிவிக்ரமனான விஷ்ணுவிற்குப் படுக்கையான ஆதி சேஷனைத் தன் காப்பணியாகக் கொண்டது. பெருமை மிக்கது. (115)

लीलोपात्ता शिव तव तनुर्या शरच्चन्द्रगौरी
गौरीमङ्काभरणितवती चित्सुखैकस्वभावा ।
चन्द्रोत्तंसा विधिहरिहरैर्भक्तिनम्रैरुपास्या
तस्यामस्यामचरमतनोश्चित्तवृत्तिः कुतः स्यात् ।। ११६

சிவனே! நீர் விளையாட்டாக எடுத்தவடிவம் சரத் காலத்துச் சந்திரன் போல் வெண்ணிறம் கொண்டது. சிதானந்த இயல்பு கொண்டது. சந்திரனைச் சூடியது. பிரம்மா ஹரி ஹரர் இவர்களால் பக்தியுடன் வணங்கி வழிபடத்தக்கது. எனக்கு இது கடைசி பிறவியல்ல. என் மனப்போக்கு அவரிடம் அமையுமா? (116)

सोऽहं देहेन्द्रियमुखमहादुःखसिन्धौ निमज्जा-
म्यस्तस्वात्मा हर किमपरं तत्त्वतो न त्वदन्यः ।
भुङ्क्षे तु त्वं सुखचिदनघप्राज्यसाम्राज्यलक्ष्मीं
दूरीकुर्याः कियदिव चिरं मामये त्वामयेऽहम् ।। ११७

ஹரனே! நானோ உடலும் இந்திரியங்களும் காரணமான துயரக்கடலில் தன் நிலை இழந்து மூழ்கிறேன். வேறென்ன?

உண்மையில் நான் உம்மைக்காட்டிலும் வேறுபட்டவனல்ல. நீர் மட்டும் பேரானந்தமும் பேருணர்வும் குறைவற்று நிறைந்த ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை அனுபவிக்கிறீர். என்னை எவ்வளவு நாள் தள்ளிவைப்பீர்? நான் உம்மை அணுகுகிறேன். (117)

तवैश्वर्यं शम्भो निरवधि कृपामप्यनुपधिं
ममापीदं दैन्यं शरणलवशून्यं ननु विदन्।
प्रपद्ये यन्न त्वामहह तदिदं मे विमृशतो
न जाने को हेतुर्दळति शतधा यन्न हृदयम्॥ ११८

சம்புவே! உமது பேராளுமை எல்லையற்றது. கருணை எதிர்பார்ப்பற்றது. வேறு காப்பிடமில்லாதது எனது ஏழ்மை. இதனை உணர்ந்தும் உம்மை நான் சரணடையவில்லை இதயம் நூறாக பிளக்கவில்லையே! காரணம் என்ன? (118)

त्वद्भक्त्यचलाभदवपावकदह्यमानः
तामार्तिमप्ययि न वेद्मि तमोऽभिभूतः।
तज्जानतः स्फुटमुमेश तव ह्युपेक्षा
नाथ त्वदेकगतिके मयि नानुरूपा॥ ११९

உம்மிடம் பக்தியைப் பெறாதது காட்டுத்தீ போல் என்னை எரிக்க, அதனால் ஏற்படுகிற வலியையும் அறியாமை மறைப்பதால் உணராதிருக்கிறேன். உமையின் மணாளனே! இதனை உணர்ந்தும், கதியற்ற என்னிடம் பரா முகமாயிருப்பது உமக்கேற்றதல்ல. (119)

शम्भो भवद्भुवनमङ्गळदिव्यरूपे
शान्तं मनो यदि निषीदति निर्वृतिस्सा।
तां रुन्धतीह सकले किल दुःखरूपे
ताम्यन्ति हन्त सुखदुः खविभागमोहात्॥ १२०

சம்புவே! உலகிற்கு மங்களம் தருகிற உமது திவ்விய வடிவில் மனம் பதிந்து சாந்தியடைந்தால் அது தான் மன நிறைவு. அதனை துயரமே வடிவானதனைத்தும் தடுப்பதால், இன்பமும்

துன்பமுமெனப் பிரித்தனுபவிக்கிற மதிமயக்கத்தால் அனைவரும் திணறுகின்றனர். (120)

यत्ते रूपं त्रिणयनमुमाकान्तमर्धेन्दुचूडं
तन्मे हातुं क्षणमपि न सम्मन्यते नाथ चित्तम्।
तत्प्रत्यूहा विषयविषमग्रावपातार्तिधाराः
बाधन्ते मां तव तु करुणा स्यात् कदा वा न जाने ॥ १२१

நாதரே! முக்கண்கள் கொண்டதும் உமையைக் கவர்வதும் பாதி நிலவைச் சூடியதுமான உமது வடிவைப் பிரிய என் மனம் நொடிப் பொழுது கூட ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால் அதற்கு இடையூறான வெளிப் பொருள் நாட்டமாகிற கல்லடியால் நேர்கிற வேதனைகள் என்னை வாட்டுகின்றன. உமக்கு கருணை எப்போது ஏற்படும் என்பதை நான் அறியேன். (121)

आरोपिताऽपि मम धीर्भवदङ्घ्रिमस्माद्
आप्लुत्य दिव्यमणिपीठतटाच्छुनीव।
तुच्छेष्वियं पतति दोषमिमं धियोऽस्याः
भङ्क्त्वेश यच्छ सुदृढां भवदङ्घ्रिनिष्ठाम् ॥ १२२

ஈசனே! திவ்யமான ரத்தின பீடம் போன்ற உம் திருவடிமீது என் அறிவை நான் ஏற்றி அமர வைத்திருந்த போதிலும் நாய் போல் அதிலிருந்து தாவி அற்பப் பொருள் மீது குதிக்கிறது. இந்த அறிவின் குறையை நீக்கி உமது திருவடிகளில் திடமான பக்தியைத் தந்தருள்வீர். (122)

दुष्कूपगः श्वहतकोऽतिदुरासदोऽपि
किन्नु प्रसह्य दययोद्ध्रियते न कैश्चित्।
एवं हि मूर्खतम एष शिव प्रसह्य
पाल्यस्तवास्मि भगवन् परमानुकम्प्यः ॥ १२३

பாழுங்கிணற்றில் விழுந்த அந்த அற்ப நாய் எளிதில் அணுக முடியாதிருக்கிறது. அதனையும் சிலர் பரிவுடன் வலிவில் வெளியே தூக்கி விடுவதில்லையா? அவ்வாறே மிகவும்

மூர்க்கத்தனம் கொண்ட இந்த நான் உம்மால் காப்பாற்றத்தக்கவன். சிவனே! உமது பரிவிற்குப் பெரிதும் தகுதி கொண்டவன். (123)

**द्राक्षावनी ननु खरैरिव मेऽवसादं**
**अक्षाळिरेति विषयैरियमक्षनेतः ।**
**अस्याश्शिवङ्करममुं त्वयि भक्तियोगं**
**आकल्पयोर्जितमये गिरिश प्रसीद ।। १२४**

இந்திரியங்களை வழிநடத்துபவரே! கிரிசரே! திராக்ஷைத் தோட்டம் கழுதைக் கூட்டத்தால் நாசப்படுவது போல் என் இந்திரிய வரிசை புறப் பொருட்களால் நாசமடைகிறது. அதற்கு மங்களம் தருகிற பக்தியிணைப்பைத் திடமாக அமைப்பீராக! அருள் புரிவீர். (124)

**कालं कियन्तमहह त्वदयोगखेदो**
**नालं किमीश वद सोऽयमिदं चिरं मे ।**
**त्वत्पादपङ्करुहकिङ्करवृत्तिमेकां**
**उत्पादयाशु मम सङ्क्षपयार्तिमेताम् ।। १२५**

ஈசனே! உமது பிரிவால் துயருறுவது எத்தனை நாட்களுக்கு? இது போதாதா? இந்தத்துயரம் வெகுநாட்களாக உள்ளது. உம் திருவடிகளுக்குப் பணிவிடை புரிவதை வாழ்க்கை முறையாக்குவீர். என் துயரை நன்கு குறைப்பீர்(125)

**तुच्छः किलायमिति चेद्दयसे न मे त्वं**
**तुच्छो जनस्तव न चेद्दयया गृहीतः ।**
**न त्वद्दया यदि विना त्वयि भक्तियोगं**
**सोऽयं घटेत कथमीश दयां विना ते ।। १२६**

ஈசனே! இவன் அற்பன் என்று எண்ணி என்னிடம் தயை புரியாதிருந்தால், இந்த அற்பனை நீர் பரிவுடன் ஏற்காவிடில், பக்தியால் உம்மிடம் இணையாவிடில் உமது தயை இல்லை எனில் இவையனைத்தும் உன் தயையின்றி நடைபெறுமா? (126)

बन्धुक्षयादिविपदि स्थितवानतज्ज्ञो
बालो यथा शिव तथैव हसन् हसद्भिः ।
त्वद्भक्त्यलाभपरमापदि हास्म्यखिन्नः
त्वं तद्विदन्मम न किं दयसे दयाब्धे ।। १२७

*சிவனே! ஒரு சிறுவன் தன் உற்றுரை இழந்தான் . அவன் தன் நிலையை உணரவில்லை. சிரிப்பவர்களுடன் சிரித்து விளையாடினுன். அவனைப் போல் நானும் உம்முடன் பக்தியால் இணையாதிருப்பதான பேராபத்தில் சிக்கியும் துயரற்றவனுக நடமாடுகிறேன். தயைக் கடலே! நீர் அதனை உணர்ந்தும் என்னிடம் பரிவு காட்டாதிருக்கிறீரே! (127)*

असूयेर्ष्यालोभस्मरदुरभिमानस्मयतमः-
प्रमादक्रोधादिर्मदवगुणवर्गो निरवधिः ।
कदाऽस्मादुत्तीर्णः कथय निरयादन्तकरिपो
पतेयं देव त्वत्पदकमलयोरार्तिहरयोः ।। १२८

*யமனின் எதிரியே! தேவனே! அஸூயை, பொறுமை, பேராசை, காமம், கெட்ட இறுமாப்பு, மெத்தனம், அறியாமை, தடுமாறுதல், கோபம் முதலிய என் கெட்ட குணங்கள் எல்லையற்றவை. இந்த நரகத்திலிருந்து வெளிப்பட்டு துயர் நீக்குகிற உமது திருவடிகளில் என்று விழுவேன்?(128)*

अस्यन्तमात्महितमन्तिकमाश्रयन्तं
बालं प्रसूः किमु न पालयतीश्वरैवम् ।
जातु प्रपत्तिकलनाज्जनितानुबन्धं
हातुं न मूर्खमपि मां दययाऽर्हसि त्वम् ।। १२९

*ஈசனே! தனக்கு இதமானதைப் புறக்கணித்து விட்டுத் தன் அருகில் வருகிற தன் குழந்தையை தாய் காப்பாற்றுவதில்லையா? மூர்க்கனுயினும் எப்போதோ ஒரு தடவை உம்மைப் புகலடைந்ததால் தொடர்பு கொண்ட என்னைப் பரிவின் காரணமாக புறக்கணிப்பது தகாது.(129)*

चिन्तयन्मम दुरात्मतां यदि त्वं तनोषि न दयां मयि श्रिते ।
अन्तकान्तक गतिर्विना त्वया नान्तकान्तिकगतान्तरस्य मे ॥

*யமனின் எதிரியே! எனது கெட்ட உள்ளத்தைக் கருத்தில் கொண்டு புகலடைந்த என்னிடம் நீர் தயை வைக்காவிடில் யமனை அணுகிக் கொண்டிருக்கிற எனக்கு வேறு எவர் கதி.? (130)*

शठो लुब्धः क्रुद्धश्चलमतिरसूयैकवसतिः
जडो मूर्खः स्तब्धः कुमतिरतिसन्धानरसिकः ।
अघानामाधारः पुनरहमथापि स्मररिपो
दयाळो देव त्वच्चरणशरणोऽनन्यशरणः ॥ १३१

*மன்மதனின் எதிரியே! நான் நேர்மையற்றவன், பேராசைக்காரன் , நிலையற்றவன், அஸூயையின் ஒரே இருப்பிடம், ஜடன், மூர்க்கன், திமிர் பிடித்தவன். அறிவு கெட்டவன், பிறரை ஏமாற்றுவதில் ரஸிகன், பாபங்களின் இருப்பிடம். என்றாலும் தயாளுவே! தேவனே! வேறு கதியின்றி உமது திருவடிகளைச் சரணடைந்தவன். (131)*

सद्रूपं न स्फुरति न हि ते शर्व कुर्वे किमेषा
नान्तश्शान्तिं तिरयति दुरध्यासपर्याकुला धीः ।
दोषस्तोमोन्मिषितवपुषा प्रीतिमत्प्रत्ययेन
ग्रस्ताऽऽशैव क्षपयति परिस्फूर्तिरस्फूर्तिखेदम् ॥ १३२

*சர்வரே! உமது நித்தியமான வடிவம் உள்ளத்தில் தெரியாமலில்லை. என்ன செய்வேன்? தவறாகப் புரிந்து கொண்டதால் கலங்கியுள்ள இந்த அறிவு உள்ளத்தின் அமைதியை குறைக்கவில்லை. அன்பால் ஏற்பட்ட நம்பிக்கை என்னிடம் குவிந்துள்ள குறைகளால் விழித்துள்ளது. நம்பிக் கையால் உண்டான எதிர்பார்ப்பு, உள்ளத்தில் நீர் துலங்காதிருப்பதால் உண்டான துயரைக் குறைக்கிறது அதனால் அதுவே உம்மை உள்ளத்தில் துலங்க வைக்கிறது. (132)*

शक्नोष्यार्तिं क्षणमपि न नस्सोढुमीदृक् दया क्व
कैनश्चक्रक्रमविरमसापेक्षता रक्षितुं ते।
ईश क्षाम्य त्वमखिलविदस्येकमत्युच्यतेऽदः
सिष्णासुः किं प्रहसनपदं नोर्मिमालिन्यनूर्मौ ॥ १३३

ஈசனே! எனது துயரைக் கண நேரம் கூடப் பொறுக்க விடாத இத்தகைய தயை எங்கே? என்னைக் காப்பாற்ற இந்தப் பாபச் சுழல் ஒய்வதை நீர் எதிர்பார்த்திருப்பது எங்கே! மன்னிப்பீர். நீர் எல்லாமறிந்தவர். கடலில் அலை ஓய்ந்த பின் நீராட விரும்புபவரானீர். இது கேலிக்கிடமல்லவா? எல்லை மீறிப் பேசுகிறேனோ? (133)

अन्ते हितेऽपि विदिते तदनुत्सुकोऽयं
रुग्णो यथा त्वयि तथाऽवधृते शरण्ये।
हा केन वास्मि कृत एवमनुत्सुकोऽहं
हार्या त्वयैव कृपयेश ममेयमार्तिः ॥ १३४

ஈசனே! நீர் தான் சரண் புகத்தக்கவர் என்று ஏற்கப்பட்டிருந்தும், கடைசியில் இது தான் ஹிதமானது எனத் தெரிந்திருந்தும் நோயாளி போல் ஆர்வம் காட்டாதிருக்கிறேன். யார் என்னை இவ்வாறு ஆர்வமற்றவனைகச் செய்தார்? என் துயரம் உம்மால் மட்டுமே கருணையால் அகற்றத்தக்கது. (134)

त्वद्भक्त्याख्यं पदमनुपमोत्तुङ्गमस्पृष्टभङ्गं
वेलोल्लङ्घिप्रतनसुकृतश्रेणिनिश्रेणिगम्यम्।
आरोढुं द्रागहमनिपुणस्त्वत्कृपापाङ्गभङ्गी-
दाम्ना तावद् गिरिश भवतैवायमारोपणीयः ॥ १३५

கிரிசரே! உம் மீது பக்தி என்பது ஈடற்ற உயரத்திலுள்ளது. வளைந்து கொடுக்காதது. எல்லை மீறிய முன் செய்த புண்ணியமாகிற ஏணிப்படிகளால் மட்டுமே ஏறக் கூடியது. நான் அவ்வழியே ஏறத் திறமையற்றவன். உமது கிருபை ததும்புகிற

கடாட்சம் என்கிற கயிறு கொண்டு உம்மால் மட்டுமே ஏற்றிவிடத்தக்கவன். (135)

उन्मादयन्ति मुदितानि यदिन्द्रियाणि
खिन्नानि चेद्विपदुदन्वति मज्जयन्ति ।
इत्येवमाकुलित ईश्वर नात्मनीने
दक्षोऽस्म्यनन्यशरणश्शरणं गतस्त्वाम् ॥ १३६

ஈசுவர! என் இந்திரியங்கள் மகிழ்ச்சியுற்ருல் பித்து பிடித்துவிடும். துயருற்ருலோ ஆபத்தாகிற கடலில் ஆழ்த்திவிடும். அதஞல் என்னளவில் செய்யத்தக்க பணியில் குழம்பிக் கையாலாகாதவஞகி விட்டேன். வேறு கதியின்றி உம்மை சரணடைந்துள்ளேன். (136)

त्वत्पादपद्मविमुखस्य दुरात्मनो मे
दाहोऽन्यदुर्विषयसक्तिदवानलेन ।
अर्हस्स एष हर किन्तु दयाम्बुधे मद्-
दौरात्म्यहान्यकरणं तव नानुरूपम् ॥ १३७

ஹரனே! உமது திருவடித் தாமரையிடமிருந்து விலகிய இந்த புத்தி கெட்டவனுக்கு மற்ற கெட்ட விஷயங்களில் நாட்டம் என்ற காட்டுத் தீ பற்றிச் சாம்பலாவது தக்கமுடிவே. தயைக் கடலே! ஆஞல் என் அறிவு கெட்ட நிலையை மாற்ருதிருப்பது உமக்கு ஏற்றதல்ல. (137)

अजिघ्रतार्थान्तरमाशयेन श्रीशम्भुचिन्तामृतशीतलेन ।
स्यां किं सुखी तिष्ठतु तद्ब्रुवे किं मनोरथोऽप्येष सुदुर्लभो मे ॥

உள்ளத்தால் வேறு பொருளை நாடாதிருப்பதாலும் சிவபெருமானின் சிந்தனை என்ற அமுதத்தின் குளிர்ச்சியாலும் நான் ஆனந்த மடைவேஞே? அது மனக் கோட்டையாகவே இருக்கட்டும். அது கூட எனக்கு எளிதில் கிட்டாததே!. (138)

त्वद्भक्त्यलाभविपदार्तिनिदह्यमानः
सोऽहं तदार्तिमनलेन विदह्यमानः ।
वृक्षस्तदार्तिमिव नालमुपैतुमेतत्
मद्दौस्थ्यमीश तव किन्न दयां प्रसूते ।। १३९

*ஈசனே! நெருப்பில் எரிந்து கொண்டிருக்கிற மரம் தானே தன் வேதனையைக் குறைத்துக் கொள்ள இயலாது. அவ்வாறு, உம்மிடம் பக்தி கிட்டாத பாபத்தால் எரிந்து கொண்டிருக்கிற நான் என் வேதனையைத் தணித்துக் கொள்ள இயலாது. எனது இந்த வேதனை உம்மிடம் தயையை உண்டாக்கவில்லையா?.(139)*

सभाहृद्या विद्या निरुपहतयो भूतिततयो
गुणोदारा दारा इति ह विषयेष्वप्यभिरतिः ।
अयं तावद्धावत्यमृतरसनिष्यन्दिनि विभो
न यावद् भावत्के हर चरणपद्मे परिचयः ।। १४०

*ஹர! பெற்ற கல்வி ஸபையின் இதயத்திற்கு இதமாயுள்ளது. சொல் வரிசையும் தடங்கலுறுமல் உள்ளது. மனைவியும் குணத்தால் பெருமனம் கொண்டவள் என்று ஒவ்வொரு பொருளிலும் ஈடுபாடு உள்ளது. பெருமானே!உமது அமுதம் சொரிகிற திருவடித் தாமரையுடன் பழக்கம் ஏற்படாதவரை, இவன் அந்தப் பொருளைப் பின் தொடர்ந்து ஓடுகிறுன்.(140)*

हितार्थी नन्वस्यादिशसि सुखसिन्धौ त्वयि रतिं
विपत्त्युद्गारिभ्यो विषयविसरेभ्यश्च विरतिम् ।
दयां ते सोपाधिं नियतमियताऽहं निगमया-
म्यहो मूर्खः पाल्यश्शिव तव कृपाळोरुपनतः ।। १४१

*சிவனே! எனது இதத்தை நாடுகிற நீர் ஆனந்தக் கடலான உம்மிடம் ஈடுபாட்டையும், ஆபத்தை வெளியிடுகிற பொருள் நாட்டத்திலிருந்து விடுபடுவதையும் கடை பிடிக்கச் சொல்கிறீர். அதனுல் உமது தயை (எதிர்பார்ப்பற்றதல்ல)*

கட்டாயம் இவ்வாறு எதிர்பார்ப்புள்ளது என்பதை நிரூபிக்கிறேன். இந்த மூர்க்கன் காப்பாற்றத்தக்கவன். தயாளுவான உம்மை அணுகியுள்ளேன். (141)

आत्मानं त्वां निरवधिसुखाम्भोनिधिं पर्युदस्यन्
नात्राप्येतेष्वतिविसदृशेष्वप्यदृश्शीकराणून्।
शम्भो मज्जन्नयमनलमुन्मस्तमातोऽपहास्यः
क्रीडापात्रं मिळित इति किं नोद्धरस्यञ्जसा माम्॥

சம்புவே! நீர் எல்லையற்ற ஆனந்தக் கடல். என் ஆத்மா. உம்மைத் தவிர்த்தேன். முற்றிலும் மாறுபடுகிற இந்தப் பொருள்களில் ஆனந்தத்திவிலையைக் கூட அடையாமல், தலை குப்புற நெருப்பில் மூழ்கிற இவன் கேலிக் கிடமாகிறான். விளையாட்டுக்கு ஒரு பொருள் கிட்டியது என்ற நோக்கில் நீர் உடன் வெளியே எடுத்து விட மாட்டீரா? (142)

जगदीश ममागसां गणैः करुणाब्धे किमिति प्रकम्पसे।
रुषमुद्वहते पदाहतैर्गुरुरुत्सङ्गचरस्य किं शिशोः॥ १४३

கருணைக்கடலே! உலகின் ஈசனே! என்பாபக்குவியலைக் கண்டு ஏன் நடுங்குகிறீர்! பெற்றோர் மடியில் படுத்துள்ள குழந்தையின் கால் உதைப்பால் கோபமடைவரா? (143)

न कुतो दयते विभो भवानपराधाननुचिन्तयन् मम।
प्रहरन्नपि किन्न फल्गुनो भवताऽरक्षि दयापयोनिधे॥ १४४

பெருமானே! தயைக் கடலே! என் குறைகளை மட்டும் கருத்தில் கொண்டு என்னிடம் பரிவு காட்ட மாட்டீரா? உம்மை (வில்லால்) அடித்துக் கொண்டேயிருந்த அர்ஜுனன் உம்மால் காப்பாற்றப் படவில்லையா?. (144)

अपराधिषु नैव मे समः क्षमया गोप्तृषु नैव ते समः।
तदुपैषि किमित्युदासिकां अनुकम्पां कुरु शङ्कर प्रभो॥ १४५

சங்கரரே! பெருமானே! குற்றம் புரிபவர்களில் எனக்கு ஈடானவரில்லை. குற்றத்தைப் பொறுத்துக் காப்பவரில் உமக்கு

*ஈடானவரில்லே. ஏன் பராமுகமாக உள்ளீர்? பரிவைக் காட்டுவீர். (145)*

**सदसच्च जनस्समं तनोत्यनुशिष्टो भवताऽन्तरात्मना।**
**अपराधकथा कथं नु तन्मयि कारुण्यनिधे महेशितुः ॥ १४६**

*நீர் அந்தராத்மாவாக இருந்து தூண்ட, மக்கள் நல்லதையும் கெட்டதையும் செய்கின்றனர். கருணாநிதியே! பேராளுனரான உம்மிடம் நான் தவறிழைத்ததாகக் கூறுவது எப்படி? (146)*

**भगवन् विरळा गुणा नृणां अपराधास्तु शतं पदे पदे।**
**यदि पालनकीर्तिकामना भवतस्तद्भवतूत्तरोऽधरः ॥ १४७**

*பகவானே! மக்களிடம் குணங்கள் மிகக் குறைவு. தவறுகள் ஒவ்வொரு அடியிலும் நூற்றுக் கணக்கில் காணப்படும். மக்களைக் காப்பதாகப் புகழை விரும்பினால், தலைகீழாகக் காண்பீர். (147)*

**सकलज्ञ विभो विपद्द्रुतं किमु गोप्ता यदि किङ्करं न माम्।**
**न हि दुष्पथगामिनं पशुं पशुनाथः प्रतियन्नुपेक्षते ॥ १४८**

*எல்லாமறிந்த பெருமானே! ஆபத்தால் விரட்டப் பெறுகிற உம் பணியாளான என்னைக் காக்கமாட்டீரா? தவறான வழியில் செல்கிற தன் பசுவை, அதன் எதிரில் வருகிற உடமையாளன் அசட்டை செய்வானா? (148)*

**परावज्ञानिष्ठापरुषवचनानां प्रसवभूः**
**स्वदोषाणां गोप्ता स्वरसगतिरेनस्स्वहमिदम्।**
**कराळं हि ध्वान्तं कथमिव तराणीश्वर कदा**
**चराणि स्वैरं त्वच्चरणनखचन्द्रप्रमुदितः ॥ १४९**

*ஈச்வர! பிறரை அவமதிப்பதில் தீவிர ஈடுபாடு கொண்ட வரட்டுப் பேச்சின் தோற்றுவாயான நான், என் குறைகளை மறைப்பவன். தவறான வழியில் விருப்பப்படி நடப்பவன். எவ்வாறு என் எதிரிலுள்ள கடும் இருட்டைக் கடப்பேன்? உமது*

*திருவடிகளின் நக நிலவொளியால் மகிழ்ச்சியுற்று விருப்பப்படி நடமாடுவேன்?(149)*

अपराधिधुरोर्जितं भवत्यपि तन्वन्नपराधमन्वहम्।
करुणाकर शङ्कर त्वया परिपाल्योऽयमतोऽनुबन्धतः ॥ १५०

*கருணை புரிபவரே! சங்கர! குற்றவாளி என ஊர்ஜிதமாகும் படி உம்மிடமும் தினமும் குற்றம் புரிகிற இவன் இந்தத் தொடர்பால் காப்பாற்றத்தக்கவன்.(150)*

त्वच्चिन्तनादिषु तदुत्थसुखे च नाहं
योग्योऽस्मि तत्तदनुचिन्तनजान्तरायाः।
हा क्रन्दनेऽपि कति मे मयि तेऽनुरूपा
नाथ त्वदेकगतिके किमिवात्युपेक्षा ॥ १५१

*நாதரே! உம்மை நினைப்பது முதலானவற்றிற்கும் அவற்றால் பெறுகிற ஸுகத்திற்கும் நான் ஏற்றவனல்ல. இவ்வாறு புலம்புவதற்குக் கூட அததனை கோர்வையாக நினைப்பதற்கு இடையூறுகள் பல. உம்மை மட்டும் நம்பியுள்ள என்னிடம் ஏன் இந்த பாராமுகம்?(151)*

अपि मनुष्यजनुष्यजनीह चेत् मम न शङ्करकिङ्करतासुखम्।
अहह कं प्रति किं प्रतिपादये मम हि पङ्कमशङ्कमनङ्कुशम् ॥ १५२

*மனிதப் பிறவியாகப் பிறந்தும் சங்கரரது ஏவலாளராக இருப்பதன் சுகம் எனக்குக் கிட்டவில்லை. இதனை யாரிடம் கூறுவேன்? எனது பாபம் நிச்சயமாக தடையுறுதது. (152)*

प्रियमप्रियमप्रियं प्रियं विदधत्या भवदीयमायया।
परमार्थगतिर्दवीयसी क्रियते नाथ कृपा कदाऽस्तु ते ॥ १५३

*பிரியத்தைப் பிரியமல்லாததாயும் பிரியமல்லாததைப் பிரியமாயும் அமைத்துத் தருகிற உமது மாயையால் உண்மைப் பொருளை அடைவது வெகு தூரத்திற்கப்பாற் பட்டதானது. நாதரே! உமது கிருபை எப்போது வரும்?.(153)*

शम्भो पदाब्जकटकं तव योऽधिशेते
देवस्य तस्य चरणाम्बु दयाम्बुधे त्वम् ।
मौळौ वहन् प्रथयसि श्रितवत्सलत्वं
तं त्वामसावहमहो न भजामि धिङ्माम् ।। १५४

*சம்புவே ! உமது திருவடியின் காப்பின் (ஆதிசேஷனின்) மீது படுத்துள்ள தேவனது (விஷ்ணுவின்) கால்களிலிருந்து பெருகிகுகிற நீரை (கங்கையை) தலையால் தாங்குகிற நீர் தம்மை அண்டியவனிடம் அன்பு காட்டுகிற தன்மையை வெளிப்படுத்துகிறீர். அந்த உம்மை நான் வழிபடாதிருக்கிறேன். நான் பயனற்றவன். (154)*

त्वत्पादपद्मरसिकेष्वहमप्युमेश
कश्चिद् भवेयमिति मेऽनुचितापि काङ्क्षा ।
ऐन्द्रे पदे शुन इवेयमहो भृशं मां
अन्तस्तुदत्यजहती शिव किं करोमि ।। १५५

*சிவனே! உம் திருவடித்தாமரையைக் கண்டு களிப்பவர்களில் நானும் ஒருவனுவேன் என்ற என் மனக் கோட்டை தவறுனதே. இந்திரனின் பதவிக்கு ஒரு நாய் ஆசைப்படுவது போன்றது இது. என்னை விடாமல் அந்த ஆசை மனத்தினுள் குத்துகிறது. நான் என்ன செய்வேன்?. (155)*

गास्त्रातवान् सखितयाऽऽदतवान् कपींस्त्वं
भूषात्मनाऽहिचयमाप्ततया पिशाचान् ।
गृह्णास्यमीषु यदि मामपि कश्चिदीश
का हानिरस्य भवतः कृपया तु भाव्यम् ।। १५६

*ஈசனே! நீர் பசுக்களை மேய்த்தீர். குரங்குகளை நண்பர்களாக மதித்தீர். பாம்புகளை அணிகளாகக் கொண்டீர். பிசாசுகளை நம்பத்தக்கவராகக் கொண்டீர். இவர்களில் ஒருவராக என்னையும் கொண்டீராஞல் உமக்கு நேர்கிற குறை என்ன?. உமது கிருபை இதற்கு உதவ வேண்டுமல்லவா?. (156)*

भवत्पदाम्बुजे भक्तिं भवरोगविनाशिनीम् ।
देहि मे पाहि मां शम्भो देवदेव दयानिधे ।। १५७

*தேவர்களின் தேவனே! பரிவின் வைப்பிடமே! சம்புவே! உமது திருவடித்தாமரையில் பக்தியை அருள்வீர்! என்னைக் காப்பீர். (157)*

अविवेकनिधिर्निराश्रयो न रुषां तेऽस्मि पदं दयस्व मे ।
कथय द्रुहिणास्त्रभाजनं भुवने किं कलविङ्कपोतकः ।। १५८

*பகுத்தறிவின்மையின் இருப்பிடமான நான் கதியற்றவன். உம் கோபத்திற்கு இடமல்லாதவன். என்னிடம் பரிவு காட்டுவீர். உலகில் பிரும்ஹாஸ்திரத்திற்கு இலக்கு சிட்டுக்குருவியா? சொல்வீர் (158)*

अतिसंहत एष दस्युभिस्सुचिरादन्तरवस्थितैः प्रभो ।
किमिवाकरवं न वेद्मि तन्मयि मन्तुं न हि मन्तुमर्हसि ।। १५९

*பிரபுவே! வெகு நாட்களாக உள்ளே மறைந்திருந்த (காமம் முதலிய) திருடர்களால் மிகவும் தாக்கப்பட்டுள்ளேன். என்ன செய்தேன் என்பதை நானறியேன். என் குறையை நீர் பொருட்படுத்தக் கூடாது. (159)*

विषयाभिनिवेशदुर्विषग्लपितं दुस्सहमोहरूषितम् ।
शिव मा स्म भवानुदास्त मां परिपुष्णातु दयासुधारसैः ।। १६०

*சிவனே! நான் வெளிப் பொருள் நாட்டம் எனும் விஷத்தால் தீய்ந்துள்ளவன். தாங்க இயலாத மதிமயக்கத்தால் கலங்கியவன். நீர் என்னை உதாஸீனப் படுத்தாதீர்! தயை எனும் அமுதநீர் கொண்டு போஷணை செய்வீர். (160)*

उद्यत्कृतान्तसविधेऽस्मि पदे पदेऽहं
वध्यो वधस्थलमिव प्रतिनीयमानः ।
त्वामन्तकान्तकमसौ न भजामि धिङ्मां
अस्मीश ते किमपरं प्रसभानुकम्प्यः ।। १६१

*ஈசனே! கொலே தண்டனே பெற்றுக் கொலேக் களத்திற்கு இட்டுச் செல்லப்படுபவன் போல் நான் சூழ்ந்து நிற்கிற யமனின் அருகாமையை அடி அடியாக நெருங்கிக் கொண்டிருக்கிறேன். யமனே அழித்த உம்மை நான் இது காறும் வழிபடவில்லே. நான் ஒரு உதவாக்கரை. வேறு என்ன?.வலிவில் வந்து பரிவு காட்டத்தக்கவனுயுள்ளேன். (161)*

रुन्धन्ति मामिह षडम्बुधयः स्मराद्याः
पारं परं त्वमधिगत्य विभासि चैषाम् ।
साम्ब प्रभो भवदपाङ्गलवप्लवे स-
त्येतांस्तराणि विहराणि च सन्निधौ ते ।। १६२

*ஸாம்பரே! பிரபுவே! காமம் கோபம் முதலிய ஆறு கடல்கள் (லோபம் மோஹம் மதம் மாத்சரியம் உள்பட) என்னேச் சூழ்ந்து தடுக்கின்றன. நீரோ அக் கரையில் சுகமாக உள்ளீர். உமது கடாக்ஷத்தின் லேசத்தை ஓடமாகக் கொண்டு இக் கடல்களேக் கடந்து உமது எதிரில் இனிது வாழ விரும்புகிறேன். (162)*

देहात्मताख्यनरके स्थितमेतदुत्थ-
श्रेयस्तदन्यसमवाप्त्यपनोदनिष्ठम् ।
दावानलस्थमदसीयसुगन्धिधूमा-
धूमान्तराप्तिविगमाभिरतं प्रतीमः ।। १६३

*உடலே தான் என்ற அகந்தை எனும் நரகத்திலிருப்பவன் உடலால் நன்மை பெறவும் துன்பத்தைத் தவிர்க்கவும் இயலும் என்று நம்புவான். காட்டுத் தீயினுள் அமர்ந்து இது நறு மணமுள்ள புகை இது கெட்ட மணமுள்ள புகை என ஆராய்ந்து அடைவதற்கும் தவிர்ப்பதற்கும் இது ஒப்பாகும். (163)*

अहन्ते हन्ताहं तव कितववृत्त्या विषभरं
किरन्त्या दूनस्स्यां कियदिव चिरं वीतशरणः ।
प्रसीदातः शातक्रतवमपि वा वैधसमपि
त्वयाऽस्माकं मा भूत्पदमपि भवत्यै नम इदम् ।। १६४

*அகந்தையே! விஷக்குவியலை என் மீது வாரி இறைக்கிற உனது வஞ்சக நடைமுறையால், கதியற்ற நான் வெகு நாட்களாக துன்புறுத்தப்படுகிறேன். அருள் புரிவாய்! இந்திர பதவியோ பிரும்மனின் பதவியோ உன்னால் எமக்குக் கிட்ட வேண்டாம். உனக்கு நமஸ்காரம்.(164)*

**तृणगणिताखिलजगतामपि करकलितत्रयीरहस्यानाम्।**
**श्लाघावारवधूटीघटदासत्वं तु दुर्निरसम्॥ १६५**

*உலகனைத்தையும் அவர்கள் புல்லாக மதித்துப் பொருட்படுத்தாதவர்களே. வேதங்களின் ரஹஸ்யத்தைக் கைத்தலத்தில் அடக்கிக் கொண்டிருக்கலாம். அவர்களும் பாராட்டு எனும் இளம் பெண்ணிற்கு அடிமையாவது தவிர்க்க இயலாது.(165)*

**संविल्लेशद्रविणकणिकासन्निकर्षप्रसूतैः**
**दर्पैः क्रान्ता विधिहरिमुखोदासिकादेशिकैर्ये।**
**त्वय्यप्येषां शिव न गणना का कथाऽन्येषु तेषाम्**
**दुस्साध्यो हि त्वमसि शरणं मादृशानां कृशानाम्॥१६६**

*சிவ! சிறிதளவு அறிவெனும் செல்வத் துளியைப் பெற்றதால் ஏற்பட்ட அவர்களிடமுள்ள திமிர் பிரும்மா ஹரி முதலானவரையும் உதாஸீனப்படுத்த வழிகாட்டுகிறது. உம்மையும் அவர்கள் பொருட்டாக மதிக்கவில்லை. மற்றவர்களைப் பற்றி என்ன சொல்ல?. அவர்களுக்கு நீர் எளிதில் கிட்டாதவர். என்னைப் போன்ற எளியவர்கு நீரே புகலிடம். (166)*

**क्व वा शमसुधोर्मिलाः क्व परमार्थधीनिश्चलाः**
**कदा ननु भजेम तानिति परिभ्रमामो वयम्।**
**निमित्तलवनिस्पृहानवधिकोपधूपायितान्**
**उपासितुमपासितुं बत वृथा वयो नेश्महे॥ १६७**

*புலனடக்கமெனும் அமுத அலை வீசுபவர்கள் எங்கு உள்ளனர்?. உண்மைப் பொருளை உணர்ந்ததால் மனச்*

*சலனமற்றவர் எங்கு உள்ளனர்? அவர்களை எப்போது சென்றடைவோம்?. என நாங்கள் குழம்பி நிற்கிறோம். காரணம் எதனையும் எதிர்பார்க்காதவர்களை அண்டி நிற்பதற்கும் எல்லையற்ற கோபத்தால் புகைந்து கொண்டிருப்பவர்களை விலக்குவதற்கும் வயதை வீணடிப்பதற்கு இயலாதவர்களாக உள்ளோம்.(167)*

**आरोपयद्भिरपरं महिमानमन्यैः**
**आकृष्टधीरननुसन्दधदात्मनैच्यम् ।**
**नष्टोऽस्मि दुष्टदुरहङ्क्रियया हतस्त्वां**
**नैवास्मरं शिव कथं मयि ते दया स्यात् ।। १६८**

*இல்லாத பெருமையை இருப்பதாக ஏற்றிப் புகழ்பவரிடம் மனமிழந்து, தனது தாழ் நிலையை உணராமல் கெட்ட அஹங்காரத்தால் அடிபட்ட நான் என்னை இழந்து விட்டேன். உம்மை நான் நினைக்கவில்லை. என்னிடம் எவ்வாறு உமக்குத் தயை ஏற்படும்? (168)*

**वेद्यं न किञ्चिदपि वेद्म्यखिलज्ञताऽभि-**
**मानस्तु मेऽनवधिरीश न चात्मनीनम् ।**
**कुर्वे किमप्यथ महान् कृतकृत्यताभि-**
**मानः कथं नु मयि मूर्खतमे दयेथाः ।। १६९**

*ஈசனே! அறியத்தக்க எதனையும் நான் அறியவில்லை. எனினும் எல்லாமறிந்தவன் என்ற இறுமாப்பு அளவிற்கு மீறி உள்ளது. நான் செய்ய வேண்டிய எதனையும் நான் செய்யவில்லை. ஆனால் செய்ய வேண்டியதைச் செய்து விட்டதாக நிறைவுணர்வு நிறைய உள்ளது. மிகப் பெரும் முட்டாளான என்னிடம் பரிவு காட்டுவீர்.(169)*

**परमधने पुरमथने करमथ नेये स्मृतेऽन्यगामिन्या ।**
**कामनया कां अनया नाम नयापेतया श्रियं यायाम् ।। १७०**

*கையில் அடக்கத்தக்க பெருஞ் செல்வமான புரஹரனை சிவனை நினைவிற் கொண்ட பிறகு, வேறொன்றை நாடுகிற -*

வழிதவறிய - நப்பாசையால் எந்தச் செல்வத்தை அடையப் போகிறேன்? (170)

प्रपन्नं नागोभ्युं प्रभवसि महेशोऽसि जगतां
शिव त्वं सर्वज्ञो न हि तव गुणान् वेदितुमलम्।
प्रपत्तिश्च त्राता त्वमिति धिषणा त्वां हि करुणा
नियच्छत्येवं तन्मम तरणतर्कोपकरणम्।। १७१

சிவ! நீர் உலகின் பேராளுனர். அதனுல் உம்மைச் சரணடைந்தவரைக் காப்பாற்ருதிருக்க முடியாது. நீர் எல்லாமறிந்தவராயினும் உமது குணங்களை நீர் அறியாதவரே. உம்மைச் சரணடையச்செய்வது நீர் காப்பாற்றுபவர் என்ற அறிவே. உமது கருணை உம்மை அவ்வாறு கட்டுப் படுத்துகிறது. அதுவே எனக்குத் துயரக் கடலைத் தாண்டுவதற்கான சிந்தனைக்கு உதவுகிறது.(171)

साम्राज्यं वा करकलितमस्त्वस्तु वाऽकिञ्चनत्वं
सार्वज्ञ्यं वा भवतु भवतून्मस्तकं वापि मौढ्यम्।
एतत् त्वीहे कुरु शिव कृपामेतु मा च प्रहासीत्
एकः क्षेमङ्करकुलगुरुर्मां भवद्भक्तियोगः।। १७२

சிவ! பேரரசாளும் நிலை கைக் கெட்டியதாக இருக்கட்டும். அல்லது ஏழ்மை இருக்கட்டும். எல்லாமறிந்த நிலையோ தலைக்கு மேலுள்ள முட்டாள் தனமோ இருக்கட்டும். இதனை மட்டும் விரும்புகிறேன். உன் கிருபை என்னை அடையட்டும். உம்முடன் பக்தியால் இணைப்பு ஒன்றே எனக்கு க்ஷேமம் தருகிற குல குரு. அது என்னை விட்டகலாதிருக்கட்டும்.(172)

यत्त्वा हित्वा स्फुरति यदपि त्वां विनाऽहं समस्तं
प्रत्येतुं तद् गिरिश न मया पार्यते नापरैर्वा।
सङ्गोप्ता मे सकलविधया जागरूकस्समन्ताद्
एवं तावद्भवसि भगवन् तद्भयस्योद्भवः कः।। १७३

கிரிசரே! நீர் இன்றி இயங்குவதையோ நீர் இன்றிஒரு பொருள் இருப்பதையோ என்ஞலோ மற்றவராலோ நம்ப முடியாது. எல்லா வகையிலும் கவனத்துடன் என்னைக் கட்டி காப்பவராக நீர் இருக்கிறவரை பயம் எப்படித் தோன்றும்? (173)

यदात्मनीनं तदवेत्य वाञ्छितुं न हि क्षमोऽस्मीह
तदप्यवाञ्छितुम् ।
विमूढमेतादृशमिन्दुचूड मां यदीशिषे गोप्तुमये तदीशिषे ।।

சந்திரனைச் சூடியவரே! என்னைச் சார்ந்தது என்று ஒன்றை உணர்ந்து அதனைப் பெற விரும்பவோ, சாராததென உணர்ந்து அதனை விரும்பாமலிருக்கவோ என்ஞல் இயலாது. இத்தகைய அறிவிலியான என்னை உம்மால் காக்க முடியுமாஞல் நீர் தான் ஈசன்(காப்பாளர்) (174)

सद्वाऽसद्वाप्यकृतमकृतं यत्कृतं तत्कृतं तत्
खेदं मोदं न पुनरुपयात्यन्तरात्मा स एषः ।
ज्ञातं तत्त्वं शिव तव कृपाविग्रहाद्देशिकेन्द्रात्
प्रारब्धं तत्क्षपयितुमसावस्ति कालप्रतीक्षा ।। १७५

சிவ! நல்லதோ கெட்டதோ எது செய்யப்படவில்லையோ அது செய்யப்படவில்லை. எது செய்யப்பட்டதோ அது செய்யப்பட்டது. இந்த அந்தராத்மா துயரையோ மகிழ்ச்சியையோ அடையவில்லை.உமது அருளே வடிவான குருமுகமாக இதன் உண்மை நிலை உணரப்பட்டது. அந்த பயன் தரத் தொடங்கியுள்ள வினையைக் குறைப்பதற்குரிய காலத்தின் எதிர்பார்வையுள்ளது.(175)

निधिं निरवधिं धुतव्यवधि चन्द्रचूडाभिधं
सुखं न खलु मन्यसेऽलसतयाऽत्र हा हन्यसे ।
अवस्तुनि सुखानुकारिणि विपद्गणोद्गारिणि
प्रधावसि वृथाऽवसीदसि किमर्थमित्थं मनः ।। १७६

ஏ மனமே! சந்திரனைச் சூடியவர் (சந்திர சூடர்) எனப் பெயர் கொண்ட எல்லையற்ற நிதியை மறைப்பற்ற ஸுகமாக நீ கருதவில்லை. சோம்பேறியாகி அதனை உணராததால் நீ துயரில் அடி படுகிறாய். பொருட் படுத்த வேண்டாததும் ஸுகம் என வேஷம் போட்டதும் துன்ப வரிசையை உமிழ்வதுமானதொன்றை நோக்கி வீணே ஓடுகிறாய். ஏன் இப்படி?.(176)

अन्यस्य दृष्टिसरणावपतन् स्वदोष-
चिन्ताभ्रशान्तदुरहङ्कृतिचण्डतापः ।
तस्मिन् भवद्गुणवितत्यमृताम्बुराशौ
मज्जन् कदा मदनसूदन निर्वृतः स्याम् ।। १७७

மன்மதனை அழித்தவரே! பிறரது பார்வையில் படாமல், தன் தவறுகளைப் பற்றிச் சிந்திப்பதாகிற மேகத்தால் கெட்ட அகந்தையின் கொடும் தாபத்தை அடக்கியவனாக, உமது குணவரிசையாகிய கடலில் ஆழ்ந்து மூழ்கியவனாக என்று அமைதி பெறுவேன்?.(177)

दुःखानि मे खलु दिशन् दुरितप्रवृत्ति-
भङ्गाय दर्शयसि भर्ग दयाम्बुधे त्वम् ।
पुत्रे पितेव शुभबुद्धिकृते प्रहर्ता
तन्नैष वेद्मि कुमतिस्तदये दयेथाः।। १७८

பர்க்கரே! (பாபத்தை வறுத்துச் சக்தி இழக்கச் செய்பவரே) தயைக் கடலே! கெட்ட வழியில் செல்வதைத் தடுக்க, எனக்குத் துக்கங்களை தருகிறீர். தந்தை நல்ல புத்தி வருவதற்காகப் புதல்வனை அடிப்பது போல் இது. அதனை நான் அறியவில்லை. தயை புரிவீர்.(178)

तुष्यन्तु केऽपि मयि दोषमुदाहरन्तः
सन्तं विदन्ति यदि चेत् स हितोपदेशः ।
चेदन्यथा पुनरयं भ्रमजः प्रलापः
कौतूहलाय घटते किमितीह कोपः ।। १७९

எனது குறையைக் கூறுபவர் அதனால் திருப்தி அடையட்டும். இருக்கும் குறையை எனக்குச் சுட்டிக் காட்டி உணர்த்தினால் அது ஹிதோபதேசமாகும். இல்லாவிடில் பிரமையால் ஏற்பட்ட புலம்பலாகி விடும். அல்லது அவர்களது பொழுது போக்காகும். இதில் கோபிப்பது எதற்கு?.(179)

सर्वं भवान् गिरिश तत्सकलस्य चास्य
कार्याऽमुनाऽपचितिरेष करोमि नैताम् ।
हा तत्र तत्र कलयेऽवमतिश्च धिङ्मां
दौःस्थ्यं त्विदं मम कदेश धुनन् दयेथाः ॥ १८०

கிரிசரே! இதனைத்திற்கும் நான் பரிஹாரம் செய்ய வேண்டும். அதனை நான் செய்யவில்லை. அவ்வப்போது நான் அசட்டை செய்கிறேன். நான் உருப்பெறாதவன். எனது இந்த தவறான வழியை எப்போது போக்கி அருள் புரிவீர்? (180)

संरक्षति त्वयि समस्तमिदं प्रपञ्चं
तद्भारमात्मनि तमोविवशोऽधिरोप्य ।
सम्बम्भ्रमीति तनुभृत् सकलं तदेतत्
पश्यन् हसन्विहरसि प्रमथप्रभो त्वम् ॥ १८१

பிரமத கணங்களின் தலைவரே! இந்த உலகமனைத்தையும் நீர் காத்து வரும் போது, அறியாமையின் வசப்பட்டு அதன் சுமையை தன் மீது ஏற்றிக் கொண்டு மனிதன் தடுமாறுகிறான். இதனையும் நீர் பார்த்தும் சிரித்தும் விளையாடுகிறீர். (181)

कातर्यं समुदेति किञ्चिदपि न भ्रातर्यमात् किन्नु ते
चेतस्साधु विचिन्तय स्मरभिदा त्रातः प्रपन्नो नरः ।
एतावन्ति जनूंषि हन्त विषयैरेव प्रविध्वंसिता-
न्येकं जन्म शिवार्पणं यदि कराण्येतेन का ते हतिः ॥ १८२

சகோதரனே! மனமே! யமனிடம் உனக்குப் பயம் சிறிதும் இல்லையா?. நன்கு சிந்திப்பாய். சரணடைந்தவன் சிவனால் நன்கு

காப்பாற்றப்படுகிறுன். இத்தனை பிறவிகள் விஷயப் பற்ருல் நாசமடைந்தன. ஒரே ஒரு பிறவியை சிவனுக்கு அர்ப்பணம் செய்வாய். அதனுல் என்ன குறைந்து விடும்?.(182)

**जनश्चिदानन्दसमस्तविग्रहं जहद् भवन्तं प्रभवन्तमीश यः ।**
**दुरीशमन्विष्यति तुष्यति स्वयं परं धनायैष्यति मुग्धधीर्जनः ॥**

ஈச! எத்தனையும் சாதிக்க வல்லவரும் பேரறிவும் பேரானந்தமும் நிரம்பிய வடிவினருமான உம்மைத் தவிர்த்துப் பின் வேறு ஒரு கெட்டவனை ஈசனுக அடைந்து மகிழ்கிற இந்த அசட்டு மனிதன் பணத்திற்காக வருவான்.(183)

**शिव एव समायाति शिवङ्करकृपाङ्कुरः ।**
**तत्रैकविप्रताबुद्धिः कथं सञ्जायते तव ॥ १८४**

மங்களம் தருகிற கருணை முளைத்து வெளிவந்துள்ள சிவனே உன் எதிரில் வருகிறுர். அவர் ஒரு அந்தணர் என்ற எண்ணம் உனக்கு ஏன் வருகிறது?. (ஒற்றைப் பிராம் ஹணன் என்று நோக்க அபசகுனம். சிவன் என நோக்க மங்களம்.) (184)

**ऐन्द्रब्रह्मादिमपदलसद्बुद्बुदात्यद्भुतानां**
**विध्यण्डाक्रान्त्यनुपमयशःफेनषण्डोद्धतानाम् ।**
**भावत्कानां गिरिश करुणास्रोतसां किं नवीनं**
**मादृङ्नीचप्रवणसरणिष्वानुरूप्यं निरूप्यम् ॥ १८५**

கிரிசரே! உமது கருணை ஊற்று இந்திர பதவி பிரும்ம பதவி முதலியவற்றைக் கொப்பளித்து அற்புதமாக வெளிக் கொணர்கிறது. பிரும்மாண்டங்களைக் கடந்து பரவி நிற்கிற புகழாகிய நுரைக் குவியலால் தலை தூக்கி நிற்கிறது. அதில் என்ன புதுமை? ஆனுல் என்னைப் போன்ற நீசனின் வழித்தடம் அதற்கேற்றவாறு அமைய வேண்டும்.(கருணை ஊற்ருகக் கொப்பளித்துக் கொண்டு வருகிறது.பிரும்ம பதவிபோன்ற ஆயிரக்கணக்கான கொப்புளங்கள் காணப்படுகின்றன. அவற்றின் மீது உன் புகழ் நுரை வெண்ணிறத்துடன் பரவி என்

போன்றவரை வரவேற்கிறது. என்னைப் போன்றவர் தான் அதனை நோக்கிச் சென்று நீராடிப் பருகி ஆனந்தம் பெற வேண்டும்).(185)

स्वच्छन्दं सुरधेनवोऽङ्कणतटीमञ्चन्तु मुञ्चन्तु वा-
हैमं वाऽम्बुमुचो रमा च वहतु भ्रूवश्यतां दृश्यताम्।
कन्दर्पायुतसुन्दरस्य भवतश्शम्भो मुखाम्भोरुहा-
लोकेनैव भवन् भवेन्मम न तैरामोदभूमोदयः ॥ १८६

சம்புவே! நூறு மன்மதருக்கொப்பான அழகுள்ள உமது முகத் தாமரையைக் காண்பதாலேயே எனக்குக் அளவற்றப் பேரானந்தம் கிட்டும். என் வீட்டு வாசலில் காமதேனுக்கள் உலாவட்டும். அல்லது வெளியேறட்டும். மேகங்கள் தங்க மழை பெய்யட்டும். அல்லது ஓய்ந்து நிற்கட்டும். லக்ஷ்மி அழகிய புருவ நெரிப்புடன் காணப்படட்டும். அதனால் எனக்கு ஆவதொன்றுமில்லை. (உம்மைக் காண்பதை விட இவை பெரிதல்ல) (186)

निर्धूय दुःखनिवहं निखिलं पुरारे
संसेविनां वितरति त्वयि मोदलक्ष्मीम्।
अन्नं दिशेति वसनं वितरेति भोगान्
देहीति मन्दमतयो वयमीरयामः ॥ १८७

புராரியே! தன்னை அண்டியவரின் துக்கக் குவியலை அகற்றி விட்டு பேரானந்தம் எனும் லக்ஷ்மியை நீர் தானே வழங்கிக் கொண்டிருக்கும் போது, உணவிடுவாய். ஆடை அளிப்பாய்! என்று அறிவிலிகளான நாங்கள் யாசிக்கிறோம்.(187)

स्वामिन् पदं शिवपदं त्वकुतोभयं तु
त्वय्यात्मकृत् प्रणमनादपि साम्बमूर्ते।
हासास्पदं भवति कुत्सितलिप्सुरेषः
कौपीनकाम इव कल्पतरुं प्रपन्नः ॥ १८८

ஸாம்ப மூர்த்தியே! எங்கும் பயமற்ற சிவ நிலை என்ற இடம் உம்மை வணங்கிய உடனேயே தனதாகி விடுகிறது. பிறகு

மட்டமான பொருளைப் பெற விரும்புபவன் கேலிக் குரியவன். கற்பக மரத்திடம் கௌபீனத்தைக் கோரி அணுகுபவன் போன்றவன் அவன். (188)

सुत इति सुदतीति द्रव्यमित्येषु मग्नो
ऽसुखदमिदमशेषं सौख्यदं वेत्ति मर्त्यः ।
मलकलुषजलान्तर्मज्जनोन्मज्जनाद्यैः
किटिरिव मनुते स्वं केवलानन्दरूपम् ॥ १८९

இவன் என் மகன். இவள் என் மனைவி. இது எனது செல்வம் என்று ஸுகம் தராத பொருளை ஸுகம் தருவதென்று மனிதன் உணர்கிறான். பன்றி சேறும் அழுக்கும் நிறைந்த குட்டையில் மூழ்கி எழுந்து பேரானந்தம் பெற்றதாக நினைப்பது போன்றது இது. (189)

सेवन्ते किमिति प्रभूननुपदं हा दृप्यतः कुप्यत-
स्त्वेतावत्युपसर्पणे च जठरापूर्याप्तिधूर्यापिणः ।
स्मर्तुर्जाग्रति चन्द्रचूड भवति स्वात्मानमेवं दद
त्यैश्वर्येण कृतास्पदं जगदलङ्कर्मीणदृक्कोटिना ॥ १९०

சந்திரனைச் சூடியவரே! தன்னை நினைப்பவருக்குக் கடாக்ஷத்தால் உலகையே அழகுபடுத்துகிற ஐச்வரியம் இடம் பெறச் செய்கிற தன்னையே வழங்கும் நீர் முன் நிற்கும் போது, மற்ற பிரபுக்களை நாடுகிறார்களே! அது ஏன் ? அவர்களோ ஒவ்வொரு நொடியிலும் செறுக்கை காட்டிக் கோபிக்கிறார்கள். எப்படியாவது அணுகுபவர்களுக்கு வயிறு நிரம்ப உணவிடுவது வரை பொறுப்பைக் காண்பிப்பவர்கள். (ஒரு பிடி சோற்றுக்கு அலைய விடுகிற பிரபுக்கள்) எங்கே? பேராளுமை பெற்ற தன்னையே வழங்கக் காத்திருக்கிற ஈசன் எங்கே?) (190)

वैवस्वताननगतस्य तथाविधेन
किं मे परेण किमु वास्य मया सतीत्थम् ।
अस्म्यन्यभागहह दौस्थ्यमिदं विधून्वन्
तन्वन्नतिं त्वयि ममेश कदा दयेथाः ॥ १९१

*ஈசனே! யமனின் வாயில் வீழ்ந்த எனக்கு யமனின் வாயில் வீழ்கிற மற்ெருருவஞல் ஆவதென்ன? அவனுக்கு அத்தகைய என்ஞல் ஆவதென்ன? இந் நிலையில் எப்போதும் பிறரை அண்டி நிற்கிற எனது கெட்ட நிலையை வீசி எறிந்து விட்டு உம்மிடம் அன்பு மிக்க ஈடுபாட்டை எனக்கு எப்போது அருள்வீர்? (191)*

इत्थं ममेयमरतिर्भवतीतरत्र
चेत्थं रतिर्बत किटेरिव कुत्सितेऽर्थे ।
धिङ्मां परं त्वधमवृत्तिरुपाश्रितस्य
त्वां मे यदीत्थमयशस्करमीश तत्ते ।। १९२

*பன்றிக்குச் சகதி போன்ற வெறுப்புக்குரிய பொருளிடம் நாட்டம் உண்டாவது போல் எனக்கு வெளிப் பொருளில் நாட்டமும் உம்மிடம் ஈடுபாடின்மையும் உண்டாகிறது. ஈசனே! நான் அருவருப்பிற்குரியவன். ஆஞல் உம்மை அண்டியவனுக்கு இத்தகைய கீழ் மன நிலை என்பது உமக்குக் கெட்ட பெயரைத் தரக் கூடியது. (192)*

वधूपुत्रकादीन् प्रति प्रस्तुतोऽयं
बलीवर्दभावः कदा मेऽपयातु ।
भवत्पादपद्मामृतास्वादधन्या
दशा सा भवित्री कदा साम्बमूर्ते ।। १९३

*ஸாம்பமூர்த்தி! (அம்மையுடன் கூடிய அழகிய வடிவினரே!) மனைவி மக்களுக்காக ஏற்ற இந்த பளு சுமக்கிற எருது நிலை என்று என்னை விட்டகலும்? உமது திருவடித்தாமரையிலிருந்து பெருகுகிற அமுதைச் சுவைக்கும் பாக்யம் எனக்கு எப்போது கிட்டும்? (193)*

कियदिव दुरवाप्यप्रान्तवक्रान् कदाचित्
ननु धनिकवराकान् नित्यमाराधयामः ।
सकृदवनतवश्यं साम्बमूर्तिं कदा वा
सकलजगदधीशं त्वामुपासीमहीमे ।। १९४

அருகில் நெருங்க முடியாதவர்களும் வக்கிரப் போக்குள்ளவர்களுமான பணக்கார மக்களைத் தினமும் எவ்வளவோ திருப்திப் படுத்துகிறோம். எல்லா உலகங்களுக்கும் ஈசனும் ஒரு தடவை அணுகினாலேயே வசப்படுகிறவரும் அம்மையுடன் உருவெடுத்து நிற்பவருமான உம்மை எப்போது அணுகி வழிபடுவோம்?.(194)

**उत्तरङ्गितवृथाकुतूहलो यत्तरङ्गचपलेष्वमीष्वहम् ।**
**श्वक्रमन्तमिममुद्धरेः कदा वक्रमन्तकरिपो दयानिधे ।। १९५**

தயை நிதியே! யமனின் எதிரியே! அலை போல் நிலையற்ற இந்தப் பொருட்களில் வீணாக ஆர்வம் கொண்டு நாய் போன்று அலைகின்ற இந்த வக்கிரனை எப்போது தூக்கி விடுவீர்? (195)

**श्रीमन् वृश्चिक सन्दश द्विरसन त्वं चुम्ब शार्दूल न-**
**न्वासन्नोऽनुगृहाण ऋक्षवर दोरुल्लासमुल्लासय ।**
**तांस्तानित्थमनर्गळादरभरेणाभ्यर्थितैर्यद्भवेत्**
**क्षान्तिर्यद्भवता जिता बत सखे तद्दुःख दिव्यं सुखम् ।।**

பெருமை மிக்க தேளே! கடி. பாம்பே! முத்தமிடுவாய்! புலியே! அருகில் வருவாய்! கரடியாரே! தோளைக் குலுக்குவீர். இப்படி ஒவ்வொருவரையும் தடையற்ற ஆதரவுடன் வேண்டிப் பெறுவது வாட்டமே. அந்த வாட்டம் சிவநாமஸ்மரணத்தால் நீங்கி விட்டது. நண்பரே! திவ்யமான ஸுகத்தை அனுபவிப்பீர்.(196)

**विभोऽमुष्मिन्नस्य स्वजननिवहस्य प्रणयिता**
**स्वघातायोन्मीलत्यधिगृहकिटि स्वामिन इव ।**
**स्वघातोदर्कं तत् कुमतिरविदन्नत्र मुदमे-**
**त्यसौ हित्वा विगळतु कदा मे विपदियम् ।। १९७**

இவனிடம் இவனைச் சார்ந்தவர் காட்டுகிற பிரியம் இவனை அழிப்பதற்கே! பன்றி வளர்ப்பவர் பன்றியிடம் காட்டுகிற பிரியம் பன்றியைக் கொல்வதற்கே. தன்னை அழிப்பதை

முன்னிட்டு இவர்களது நடைமுறையை அறியாத இந்த முட்டாள் உம்மை விட்டகன்று மகிழ்ச்சியடைகிறுன். இந்த ஆபத்து எப்போது விலகும்?.(197)

प्रथमसुजनाय तुभ्यं मह्यमपि प्रथमदुर्जनाय नमः ।
सर्वं हतः कृतौ यौ सकृदुपकारापकाराभ्याम् ॥ १९८

நல்லோர்களில் முதல்வரான உமக்கும், கெட்ட மனிதர்களில் முதல்வனுன எனக்கும் நமஸ்காரம். நல்லோரில் முதல்வர் ஒரு தடவை உதவுவதால், செய்த கெட்டதை அழிப்பார். கெட்டவரில் முதல்வன் ஒரு தடவை அபகாரம் செய்து செய்த நல்லதை அழிப்பான்.(198)

धीरितरं भूरितरं दूरितरम्यगुणमेत्य किं लभताम् ।
खेदहरं वेद हरं चेदहरन्तस्सहर्षचन्द्रमसम् ॥ १९९

சந்திரனை மகிழ்வித்தவரும் துயரை அகற்றுபவருமான ஹரனை உள்ளத்தினுள் தினமும் இந்தபுத்தி உணரட்டும். நற்குணங்களை விட்டு விலகிய மற்றவரை அதிக அளவில் அணுகி எதனைப் பெற விருக்கிறது?.(199)

मृद्वीका रसिता सिता समशिता स्फीतं निपीतं पयः
स्वर्यातेन सुधाऽप्यधायि बहुधा रम्भाऽधरः खण्डितः ।
सत्यं ब्रूहि मदीय जीव भवता भूयो भवे भ्राम्यता
रामेत्यक्षरयोरये मधुरिमोद्गारः क्व वाऽऽस्वादितः ॥

என் ஜீவனே! திராக்ஷை சுவைத்தாய். சர்க்கரை அதிக அளவில் சாப்பிட்டாய. நிறையப் பால் குடித்தாய். ஸ்வர்கம் சென்று அமுதம் பருகினுய்! ரம்பைக்கு முத்தமிட்டாய்? உண்மையைச் சொல். மறுபடி மறுபடி பிறந்து சுழன்ருய்? அந்தப் பிறவிகளில் ராம என்ற இரு அக்ஷரங்களின் இனிமை ததும்பிய உச்சரிப்பின் சுவை வேறு எங்கு உன்னுல் உணரப்பட்டது?.(200)

आबिभ्रत्या तरुणतरुणीश्रीमदस्तेनमङ्गं
देव्या स्मेराननकमलयाऽलङ्कृतोत्सङ्गसीमम् ।

चूडाऽऽपीडस्फुरितशशभृत्कन्दलं मन्दलक्ष्य-

श्रीमद्दन्ताङ्कुरदरहसं तन्महः स्तात्पुरस्तात् ॥ २०१

இளம் யுவதிகளின் அழகின் செறுக்கைத் திருடுகிற உடலமைப்பைக் கொண்டவளும் மலர்ந்த தாமரை போன்ற புன் சிரிப்புள்ள முகமுள்ளவளுமான தேவியால் அழகூட்டப் பெற்ற மடியுள்ளதும், தலையில் கேசக் கற்றையில் அழகிய சந்திரனாகிய மொட்டைச் சூடியதும், அழகிய பற்களினிடையே மெல்லிய புன்சிரிப்புள்ளதுமான அந்தப் பேரொளி என் முன் துலங்கட்டும் (201)

परिधावत भो यमस्य दूताः निकटे धूर्जटिरागतस्स एषः ।

परितो धवळं निपश्यतैतन्मकुटीचन्द्रकलामयूखपुञ्जैः ॥

யமனின் தூதர்களே! ஓடி விடுங்கள்! தூர் ஜடி (கங்கையைத் தலையில் கொண்ட சிவன்) அருகில் வந்து விட்டார். (அவரது) மகுடத்திலுள்ள சந்திர கலையின் ஒளிக்கதிர்களால் சுற்றுவெளி வெண்ணிறமாயுள்ளது. கவனித்துப் பார்ப்பீர். (202)

विलग्नं कोटीरे किमपि कुसुमं ते विजयते

निलिम्पक्षुद्दैन्यप्रशमनयशोवैभवपदम् ।

तुलाकोटीकोटिः स्फुरति धृतविश्वम्भरतया

विभो विश्वत्राणं न खलु तव संरम्भविषयः ॥ २०३

பெருமானே! உமது சடை முடிப்பில் சிக்கிய பூ ஒன்று (சந்திரன்) தேவர்களின் பசி வாட்டத்தைக் குறைப்பதால் புகழ்பெற்றது. உலகைத் தாங்கும் உம்மை எடை போடுகிற தராசுக் கோலின் முள்ளாக விளங்குகிறது. நீர் உலகைக் காப்பது பரபரப்பிற்கு உள்ளாகாதது. (அதனால் தராசு முள் போன்ற சந்திரன் ஆடாது நிற்கிறது.) (203)

नमत्सुरपरम्परामणिकिरीटकोटिस्फुरन्-

मणीकिरणधोरणीमहितपादपङ्केरुहम् ।

जगज्जननरक्षणक्षपणदक्षशिक्षाक्रमं

विषादहरमाश्रये विषहरेश्वरं शङ्करम् ॥ २०४

நான் விஷத்தை நீக்குகிற ஈசன் சங்கரனை அணுகுகிறேன். தேவர்கள் வரிசையாக வந்து வணங்க, அவர்களது ரத்தின கிரீடங்களின் நுனியில் ஒளிர்கிற ரத்தினங்களின் ஒளிக் கதிர்களால் பெருமைப்படுத்தப் பெறுகிற திருவடித்தாமரையுள்ளவர். உலகைப் படைப்பதிலும் காப்பதிலும் ஒடுக்குவதிலும் தேர்ந்த நடை முறையுள்ளவர். துயரைத் தீர்ப்பவர்.(204)

प्रसूनगृहशोभितं प्रसवचापकोटिप्रभं
मनोहरहिरामणीगणविभूषणालङ्कृतम्।
सुगन्धिचिकुरावृतं सुकृतिलोकनेत्रामृतं
विलोचनसुखं पिबाविहति मातृभूतेश्वरम्॥ २०५

கண்ணே! தாயுமானவரைத் தடையுறுமல் இனிது பருகுவாய். அவர் மலர்களாலான வீட்டில் விளங்குபவர். கோடி மன்மதர்களின் ஒளி கொண்டவர். மனத்தைக் கவர்கிற வைர மணிகள் பதித்த அணிகள் பூண்டவர். ஸுகந்தி குந்தலையால் அணைக்கப்பட்டவர். புண்ணியம் செய்தவரின் கண்களுக்கு அமுதமானவர்.(205)

अन्तक दुरहन्ते ते माभूदन्तश्चकास्ति पुरहन्ता।
चिन्तय मनसि पतन्तं दक्षमखान्ते च ते पितुर्दन्तम्॥ २०६

யமனே! கெட்ட அகந்தை உனக்கு வேண்டாம். என் உள்ளத்தில் புரங்களின் எதிரி விளங்குகிறுர். தக்ஷனின் வேள்வியின் இறுதியில் கீழே விழுந்த உன் தந்தை ஸூரியனின் பற்களை மனத்தில் சிந்திப்பாய். (வீரபத்திரன் ஸூரியனின் கன்னத்தில் அடிக்க ஸூரியனது பற்கள் உதிர்ந்தன.) (206)

त्वत्पादाब्जे तनुभृति तदालम्बिते वा मनोवाक्-
कायोपायस्सजतु गिरिजाकान्त हेतोः कुतोऽपि।
तत्सौभाग्यं ननु परिणतं नाथ तेषां नतिर्नः
तापानेतान् दळयितुमलं धातुमभ्युन्नतिं वा॥ २०७

*மலைமகள் மணாளரே! உமது திருவடிகளிலோ அதனைச் சார்ந்துள்ளவரிடமோ மனத்தாலும் வாக்காலும் உடலாலும் ஏதேனும் காரணத்தைக் கொண்டு நெருங்குவது பழுத்த பெரும் பாக்கியத்தின் பலன். அவர்களை வணங்குவது உள்ளம் வாக்கு உடல் இவற்றில் ஏற்படுகிற தாபத்தை அடக்கவும் உயர்வைத் தரவும் தேர்ந்தது. (207)*

**अन्तर्यामिन् शिव तव चिदानन्दसाम्राज्यभर्तुः**
**यद्धामान्तःकरणमुचितोद्बोधवैधुर्यधुर्यः।**
**वर्ते तुच्छैरहह विषयैः कीर्णयन् दुर्णयं तं**
**वात्सल्यान्मा गणय तदसम्भूतये शाधि चाग्रे ॥ २०८**

*அந்தர்யாமியான சிவனே! தேவையான உள்ளுணர்வுத் தூண்டுதலற்ற நான், பேரறிவும் பேரானந்தமுமான ஸாம்ராஜ்யத்தின் பேராளுனரான உமது பெருமை உள் வாங்குதலை அற்பமான வெளி விஷய நாட்டங்களால் குழப்பி வாழ்கிறேன். அது எனது தவறான போக்கு. அதனை என் மீதுள்ள வாத்ஸல்யத்தால் பொருட்படுத்தாதீர். அந்தக் குழப்பம் மறைய ஆக வேண்டியவற்றை உத்தர விடுவீர். (208)*

**कोपस्तेऽयं खल इति मयि स्याद्यदि स्यान्निरोद्धा**
**को वा किं वाऽननुगुणमिदं त्वं पिताऽहं सुतोऽस्मि।**
**अन्यत् किं मामकलुषमनेनाभ्युपैतुं त्वमर्ह-**
**स्यात्मानं त्वत्पदकमलयोरर्पयामीन्दुमौळे ॥ २०९**

*சந்திரனைச் சூடியவரே! இவன் ஒரு துஷ்டன் என என்னிடம் கோபமிருந்தால் அதனைத் தடுக்க எவரால் முடியும்? நீர் தந்தை, நான் புதல்வன் என்பதால் இது பொருந்தாததோ? வேறென்ன? இதனால் குற்றமற்றவன் என என்னை ஏற்கக் கடவீர். உமது திருவடித் தாமரைகளில் என்னை ஸமர்பணம் செய்கிறேன். (209)*

**स्थाने धन्याः कतिचिदिह यत्प्रेरणा वारणा वा**
**श्रौतीः स्मार्तीरपि पुनरनुल्लङ्घयन्तस्त्वदाज्ञाः।**

आशासानाः शिव भवदनुग्राह्यतामासतेऽस्यां
अस्याशा मे परमनुपधित्वत्कृपैकावलम्बा ॥ २१०

*சிவனே! வேதத்தின் வழியிலும் ஸ்மிருதிகள் வழியிலும் வெளியிடப் பெறுகிற உமது ஆணைகளை அவை செயல்களில் தூண்டுதல்களாகவோ செயல்களைத் தடுப்பவைகளாகவோ இருந்தாலும் மீறுத சிலர் பாக்யசாலிகள். உமது அருளுக்குரியவராவதை வேண்டுபவர்களாக அவர்கள் வாழ்கிறார்கள். இந்த எனது ஆசையும் எதனையும் எதிர்பாராத உமது கருணையை மட்டும் பிடிப்பாகக் கொண்டதே. (210)*

मन्दात्मासौ मननजरठस्तावकाज्ञाः श्रुतिस्मृ-
त्यादेशाख्या बत परिभवत्येव सर्वस्तथापि ।
स्पन्दोऽपि त्वन्नियमनविनाभाव्यभावी यदेषा
भावत्काज्ञानुसृतिरियता मे दयाळो दयेथाः ॥ २११

*தயை நிரம்பியவரே! இவன் மந்த அறிவுள்ளவன். சிந்தித்துச் சிந்தித்தே முதியவனானவன். வேதத்தாலும் ஸ்மிருதியாலும் இடுகிற உமது ஆணைகளை எல்லோரும் மீறுகின்றனர். எனினும் சிறு இயக்கமும் உமது கட்டுப்பாடின்றி நடவாது. அந்த அளவில் உமது ஆணையைப் பின்பற்றுகிறோம். அதனால் தயை புரிவீர். (211)*

सकृदपि शिव पाहीत्येतदाकर्ण्य दूरात्
सरभसमुपयान्त्योस्त्वत्कृपावीक्षयोः किम् ।
मदवनविधिकेळ्यां मातृभूतेश्वरासीत्
अहमहमिकयाऽऽजिस्तेन मन्ये विळम्बम् ॥ २१२

*தாயுமான ஈசுவரனே! ஒரு தடவை ''சிவனே? காப்பாற்றுவீர்'' எனத் தூரத்தில் கேட்டதும் பரபரப்புடன் ஓடி வருகிற உமது பரிவு மிக்க இரு கடாக்ஷங்களின் இடையே, என்னைக் காப்பாற்றுகிற விளையாட்டில், நான் முந்தி, நான் முந்தி எனப் போட்டி எழுந்து அதனால் தாமதமாயிற்று என நினைக்கிறேன். (212)*

हा हन्त तात शिव का तव मय्युपेक्षा
कष्टां दशां उपगतेऽपि मखान्तकारे।
छेत्तुर्विधातृशिरसः किमु तल्लिपीनां
उन्मार्जनादुपहतिः किमु दुष्करा ते॥ २१३

தக்ஷனின் வேள்வியையும் யமனையும் அழித்தவரே! தந்தையே! சிவனே! மிகக் கஷ்ட தசையை அடைந்த என்னிடம் உமக்கு ஏன் இந்த மெத்தனம்? ஐயோ பரிதாபம்! பிரும்மாவின் தலையைக் கிள்ளியவருக்கு அவரது எழுத்தை அழிப்பதால் அந்த எழுத்தின் விளைவைத் தடுப்பது கடினமா?.(213)

तारानायकशेखराय जगदाधाराय धाराधर-
च्छायाधारककन्धराय गिरिजासङ्गैकशृङ्गारिणे।
नद्या शेखरिणे दृशा तिलकिने नारायणेनास्त्रिणे
नागैः कङ्कणिने नगेन गृहिणे नाथाय सेयं नतिः॥ २१४

என் நாதருக்கு இந்த நமஸ்காரம். அவர் சந்திரனைத் தலையணியாகக் கொண்டவர்,உலகின் ஆதாரம், மேக வண்ணம் கொண்ட கழுத்துள்ளவர், மலைமகளுடன் இணைவதில் காமமுள்ளவர், கங்கை நதியைத் தலையணியாகக் கொண்டவர். நெற்றிக் கண்ணைத் திலகமாகக் கொண்டவர். நாராயணனை அம்பாகக் கொண்டவர், பாம்புகளைக் கங்கணங்களாகப் பூண்டவர்,மலையை இருப்பிடமாகக் கொண்டவர்.(214)

आर्तः क्वानवलम्बनः क्व विपदोऽमुष्यापनेष्ये कदे-
त्यश्रान्तोत्कलिकार्तमिन्दुकलिकाचूडाल विश्वप्रभुम्।
आपं त्वां दुरवापमित्यहमतो दृष्टोऽथ दृष्टोऽसि चेत्
अस्पृश्यो विपदामहो शिव भवस्यात्मैव यत्पश्यताम्॥ २१५

சந்திர கலையைச் சூடியவரே! சிவனே! உம்மைக் காண்பவரின் ஆத்மா நீரே.வேறு பிடிப்பற்ற இவன் எங்கே?. இவனுக்கு நேர்ந்த ஆபத்துகள் எங்கே? எப்படி எப்போது அவற்றை விலக்குவேன் என்று ஓயாத ஆர்வத்தால் மனம் வாடிய

*வரும், உலகின் எஜமானரும் அடைய முடியாதவருமான உம்மை அடைந்தேன். அதனால் மகிழ்ந்தேன். உம்மைக் கண்டவனை விபத்துகள் நெருங்கா.(215)*

स्त्यायत्तृष्णाविषयविसरदुस्सहोष्मण्यदभ्रे
मोहश्वभ्रे विषयदृषदां पातनैरेभिरेवम् ।
रूक्षैरक्षैरहमिह न हा पारयाम्यस्यमानः
स्वामिन्मामुद्धर हर कृपापाङ्गहस्तार्पणेन ।। २१६

*ஐயனே! ஹர!விஷயப் பற்று இறுகித் தாங்க இயலாத தாபம் கொண்ட பெரிய மோகக் குழியில் தள்ளி வெளிப் பொருள் நாட்டம் என்ற கற்களை வீசிக் கொடூர இந்திரியச் செயல்களால் அடிபடுகிற நான் செயலற்றவனானேன். உமது கருணை ததும்புகிற கடாக்ஷம் என்ற கை கொடுத்து என்னை மேலே தூக்கிவிடுவீர்.(216)*

कामं कामप्रभृतय इमे निस्सपत्नास्सपत्नाः
मामस्यन्ति स्वपरिकरपारम्परीसम्परीताः ।
किं सान्द्रापद्धृशाकबळिते किङ्करे शङ्करेदं
रूक्षोपेक्षाव्रतमिह तवाद्यापि नोद्यापनीयम् ।। २१७

*சிவனே! இந்த காமம் முதலிய எதிரிகளுக்கு வேறு எதிரிகள் இல்லை. அதனால் தன் பரிவாரங்கள் தம்மை வரிசையாகச் சூழ என்னை விரும்புமளவு அடிக்கிறார்கள். மங்களம் புரிபவரே! இறுகிய ஆபத்தால் முழுவதும் விழுங்கப்பெற்ற என்னிடம் நீர் கொண்டுள்ள வரண்ட பாராமுக விரதத்தை இன்னமும் முடிவுக்குக் கொண்டுவர வேண்டாமா? 217*

यत्संसर्गाच्चितमपि सुखं व्यञ्जती चित्तवृत्तिः
व्यङ्गं स्वान्तं शिव विदधती सच्चिदानन्दमूर्ते ।
तुभ्यं द्रुह्यत्यहह कलया चैनया तैः खलैर-
प्यर्थैस्सङ्गादहमिह महामन्तुकारी तवास्मि ।। २१८

*பேரிருக்கையும் பேரறிவும் பேரானந்தமும் வடிவானவரே! துஷ்டர்களான ரூபம் மணம் முதலிய காட்சிப்பொருட்களின் தொடர்பால் பெறுகிற இன்பத்தை சித்தப்போக்கு வெளிப்படுத்துகிறது. காட்சிப்பொருளின் தொடர்பற்ற உள்ளத்தை அங்கவீனமாக்குகிறது. இந்த வஞ்சக் கலையால் உமக்குத் துரோகம் செய்கிறது. இந்த துஷ்டர்களான காட்சிப் பொருட்களின் தொடர்பால் நானும் உம்மிடம் பெருந்தவறிழைத்தவனுகிறேன். (என் உள்ளம் வெளியிலுள்ள காட்சிப்பொருளால் தான் நிறைவு பெற்றதாக உணர்கிறது. காட்சிப்பொருள் இல்லாவிடில் தான் அங்கக்குறைவுள்ளவன் என நினைக்கிறது. இந்த பலவீனத்தை உணர்ந்த விஷயங்கள் சித்தத்தை ஆட்டிப்படைக்கின்றன. உம்மிடம் தவறிழைக்க நேரிடுகிறது. குற்றம் ஓரிடம்; பழி ஓரிடம்) (218)*

**अन्यद्दैन्यं कथय किमितो यत्समीहासहस्रा-**
**जस्राकृष्टं हृदयमितरास्त्वापदो नोपदेश्याः ।**
**संसृत्यूर्मिष्वलमलममीष्वाभिराघूर्णनाभिः**
**विश्रान्तिं मे वितर गिरिश श्राम्यतस्त्वं दयेथाः ।। २१९**

*கிரிசரே! இதைவிடக்கையாலாகாத்தனம் வேறு உண்டா? என் இதயம் ஆயிரம் எதிர்பார்ப்புகளால் எப்போதும் இழுக்கப்பட்டுள்ளது. இதனுல் ஏற்படுகிற விபத்துகளைப்பற்றி நினைவூட்டுவது அவசியமல்ல. போதும்! போதும்! என்ற அளவிற்கு ஸம்ஸார அலைகளில் புரண்டேன். எனக்கு ஓய்வு தருவீர். களைத்த என்னிடம் பரிவு காட்டுவீர். (219)*

**त्वन्मूर्त्यालोकनसुखभरे मज्जयन्नेत्रयुग्मं**
**निध्यानाध्वन्यपि विवशयन् स्वान्तमत्यन्तशान्तम् ।**
**त्वत्पूजायां वपुरपि कुरु त्वत्कथायाश्च वाचं**
**त्वच्चिन्तायां हृदयमहह स्वैरचारी हतोऽहम् ।। २२०**

*என்னை என் விருப்பப்படி நடக்கவிட்டால் நான் அழிவேன். அதனுல் உமது உருவத்தைக் காண்பதில் பெறும் இன்பத்தில் என் கண்களை ஆழ்ந்து முழுகச் செய்வீர். உம்மை*

*தியானிக்கிற வழியில் மிகவும் அமைதி பெற்றதாக என் உள்ளத்தை பரவசப்படுத்துவீர். உமது வழிபாட்டில் உடலையும் உம்மைப்பற்றிப் பேசுவதில் என் வாக்கையும் உம்மை நினைப்பதில் உள்ளத்தையும் ஈடுபடுத்துவீர். (220)*

**गात्रोत्कम्पः करणपटलीविप्रकारोऽन्तरात्म-**
**स्थेमध्वंसोऽशरणशरणत्वानुसन्धानजन्मा ।**
**नाभिव्यञ्जन्त्यहह किममी नाथ मे दुर्दशां तत्**
**मा भैषीरित्यभयवचसा मामुमेशाद्रियेथाः ॥ २२१**

*உமையின் கணவரே! உடலின் நடுக்கம், இந்திரியங்களின் தளர்வு, வேறு கதியற்றவருக்கு நீரே கதி என்று தொடர்ந்த நினைவால் ஏற்படுகிற அந்தராத்மாவிடமிருந்த உறுதி இழப்பு, இவை எனது கெட்ட நிலையை வெளிப்படுத்த வில்லையா? நாதரே! பயப்படாதே என்று அபயவாக்கால் எனக்கு ஆதரவு தாரீர். (221)*

**कामं गळग्राहिणि शत्रुवर्गे का मङ्गळप्रार्थनया नयाप्तिः ।**
**मज्जन्मनः शम्भुपदेऽर्थवत्वं मज्जन् मनस्साधय हृष्य च त्वम् ॥**

*எதிரிகளின் கூட்டம் கழுத்தை நெரிக்கும் போது மங்களம் தரவேண்டுவதால் லாபம் என்ன? மனமே! எனது பிறவி பயனுள்ளதாக ஆக சிவனது திருவடிகளில் பதிந்து நீயும் மகிழ்ச்சி அடைவாய்! (222)*

**विष्वङ्मूर्च्छद्विषयगरळापन्नमुज्जीवय त्वद्-**
**दिव्यापाङ्गव्यतिकरसुधाधारया मां पुरारे ।**
**अस्मिन् दोषग्रहणमुचितं हा किमस्यां दशायां**
**तत्त्वं किं त्वां तुदति न कृपैतादृशामीक्षमाणम् ॥ २२३**

*புரங்களின் எதிரியே! குறுக்கிலும் நெடுக்கிலும் பரவுகிற விஷயப்பற்றென்ற விஷம் தீண்டிய என்னை உமது தெய்வீக சக்திபெற்ற கடைக்கண்பார்வை என்ற அமுத தாரையால் பிழைக்கவைப்பீர். இந்நிலையில் இவனிடம் குற்றம் காண்பது*

*உசிதமா? இந்நிலையைக் காண்கிற உம்மை கிருபை தூண்டவில்லையா? உண்மை என்ன? (223)*

त्वं कोटीरे सह समदधाः किं किरातस्य शम्भो
गण्डूषं न त्रिदशसरितोपानहश्चेन्दुना वा ।
भक्त्या क्रीतो भवसि भगवन् सा च भावप्रभेदः
तस्यामस्यां मम विमुखतैतावती हन्त धिङ्माम् ।। २२४

*சம்புவே! நீர் வேடனுடன் சடைமுடியில் கூடினீரா? கங்கையுடன் வாய்கொப்பளிப்பில் கூடினீரா? சந்திரனுடன் காலணிக்காகக் கூடினீரா? (பக்தியுணர் வைமெச்சி அர்ஜுனனின் வில்லடியையும் கங்கையின் வீழ்ச்சியையும் காலடியில் சந்திரன் விழுந்ததையும் உபசாரமாக ஏற்றீர்.) நீர் பக்தியால் விலைக்கு வாங்கப்படுகிறீர். பக்தி என்பது ஒரு தனி உணர்வு. அத்தகைய என் உணர்வில் உமக்கு ஏனோ வெறுப்பு? நான் இருப்பது வீண் (224)*

ब्रूते जन्मनि यश्शिवेत्यपि सकृन्नाम प्रमादेन वा
मद्भक्तैरुदितं शृणोति यदि वा रुद्राक्षभस्माङ्कितैः ।
तस्यात्युत्कटमृत्युमन्तसमये हन्मीति कारुण्यतः
किञ्चित् कुञ्चितकोमलैकचरणं चित्ते शिवं कुर्महे ।। २२५

*சிவ என்று என் பெயரை வாழ்நாளில் ஒரு தடவையாவது கவனக்குறைவாலாவது சொன்னாலும் ருத்ராக்ஷமும் விபூதியும் அடையாளமாகக் கொண்ட என் பக்தர் சொல்லக் கேட்டாலும், அவனது இறுதிநாளில் கொடுமை மிக்க மரணத்தை நான் அழிப்பேன் எனக் கருணையுடன் தனது மென்மை மிக்க திருவடியைச் சிறிதுதூக்கி நிற்கிற சிவனை உள்ளத்தினுள் வைப்போம். (225)*

संसाराख्यविशालनाटकगृहे सर्वाणि रूपाण्यहो
धृत्वाऽधोमुखयोनिकायवनिकां निर्हृत्य निर्गत्य च ।
सर्वज्ञस्य दयापरस्य तव देवाग्रे चिरं नृत्यतः
श्रान्तस्यापि ममालमित्युचितवागेवास्तु विश्राणनम् ।।

*தேவனே! ஸம்ஸாரம் எனும் விசாலமான நாடக அரங்கம். அதில் எல்லா வேஷங்களையும் பூண்டு, கீழ்நோக்கியுள்ள யோனி எனும் திரை நீக்கி வெளிப்பட்டு, எல்லா மறிந்த தயைமிக்க உமது எதிரே வெகு நாட்களாக நடனமாடிக் களித்த என்னிடம் 'இது போதும்' என்று கூறுவதே பெருந்தானமாக இருக்கட்டும். (226)*

**मेधे तवास्ति यदि मन्मथशासनाख्ये**
**गाधेतरामृतसरस्वति खेलनेच्छा ।**
**बाधेत को नु भवतीं रसनामपास्त-**
**बाधे तरङ्गय सुखं गिरिशाभिधाने ॥ २२७**

*மேதையே! (சிறந்த சிற்றறிவே) ஆழம் மிக்க அமுத ஓடையான மன்மதனின் எதிரி என்ற பெயர் கொண்டவரிடம் நீந்தி விளையாட விருப்பம் எனில், உன்னை எவர் தடுப்பர்? தடையில்லாத கிரிசனின் பெயராகிய ஓடையில் நீந்தி இனிது அலை மோதச் செய்வாய்! (227)*

**प्रसवशररिपो त्वत्पादपद्मानुसन्धा-**
**तृणितवलभिदम्भोजोद्भवादिश्रियां नः ।**
**स्वजनकभृतये न त्वय्यपीहार्थिमुद्रा-**
**विहृतिरलमुदेतुं का कथान्यत्र तस्याः ॥ २२८**

*பூ அம்பு கொண்டவனின் எதிரியே! உமது திருவடித்தாமரையைத் தொடர்ந்து தியானிப்பதன் முன் இந்திரன் பிரும்மா முதலியவரின் பதவிச் சிறப்பு எமக்குப் புல்லுக் கொப்பானது. என்னைச் சார்ந்த மக்களின் நல்வாழ்வுக்காக உம்மிடம் கெஞ்சிக்கேட்கிற வேஷம் இனி எழாது எனில் மற்றவரிடம் கெஞ்சுவதற்கு இடம் ஏது?*

*ஸ்துதி பத்ததி முற்றிற்று.*



शिवाभ्यां नमः

# ५ शिवभक्तिकल्पलतिका

# 5. சிவபக்திகல்பலதிகா

श्रीकान्तपद्मजमुखैर्हृदि चिन्तनीयं
श्रीमत् क शङ्कर भवच्चरणारविन्दम्।
काहं तदेतदुपसेवितुमीहमानो
हा हन्त कस्य न भवाम्यपहासपात्रम्॥ १

*சங்கர! விஷ்ணு, பிரும்மா முதலிய தேவர்களால் இதயத்தில் தியானிக்கத்தக்க பெருமை மிக்க உமது திருவடித் தாமரை எங்கே? அதனை வழிபட முயன்று வருகிற நான் எங்கே? எவனுக்கும் நான் கேலிக்குரியவன் ஆவேன் அல்லவா? (1)*

अद्राक्षमङ्घ्रिकमलं न तवेति यन्मे
दुःखं यदप्यनवमृश्य दुरात्मतां स्वाम्।
पादाम्बुजं तव दिदृक्ष इतीदृगागः
पातोऽनले प्रतिकृतिर्गिरिशैतयोर्मे॥ २

*கிரிசரே! உமது திருவடித்தாமரையை நான் கண்டதில்லை என்று துக்கம் உண்டு. அது எனது உள்ளம் கெட்டுள்ளதை உணராததால் வந்தது. உமது திருவடித்தாமரையைக் காண விரும்புகிறேன் என்பதும் பாபமே. இவ்விரு பாபங்களுக்கும் கழுவாய் நெருப்பில் விழுவதே. (உம் திருவடிகளை காணத்தகுதி என்னிடம் இல்லை. தகுதியற்றவன் தன் எல்லை மீறி விரும்புவது பெரும் பாபம்) (2)*

दौरात्म्यतो मम भवत्पददर्शनेच्छा-
मन्तुस्तथापि तव सा भजनात्मिकेति।
स्यादीशितुर्मयि दयैव दयामकार्षीः
अश्मादिभिः प्रहृतवत्सु न किं विभो त्वम्॥ ३

*பெருமானே! உம்திருவடிகளைக்காணும் விருப்பம் என் உள்ளம் கெட்டிருப்பதால் நேர்ந்த பாபச் செயல். எனினும் அது உம்மைச் சார்ந்திருக்க விரும்புவதாகும். அது எல்லாவற்றையும் ஆள்கிற உமது தயையால் வந்தது. கல் முதலியவற்ருல் உம்மை அடித்தவர்களிடமும் நீர் தயை காட்டவில்லையா? (3)*

**दुःखानलोदरनिपातनधूर्वहेष्वे-**
**ष्वर्थाङ्गनासुतमुखेष्वनुराग आगः ।**
**स्यात्ते रुषे तव दयालुतया त्वदान-**
**त्याद्यैर्विभो तदवधूय बिभर्षि चास्मान् ।। ४**

*பெருமானே! பொருள், மனைவி, மக்கள் முதலானவை துன்பம் எனும் நெருப்பின் நடுவே விழும் செயல்களில் முன் நிற்பவை. அவற்றில் பற்று வைப்பது உமது கோபத்திற்கு ஆளாக்கும். தயையால் உம்மை வணங்குவது முதலியவற்றைக் காரணமாக்கி எம் தவற்றைப் புறக்கணித்து எங்களைத் தாங்குகிறீர். (4)*

**ईशान रक्षितुमिमान् यदपेक्षसे त्वं**
**नत्यादिकं तदपनेतुमतिप्रसङ्गम् ।**
**किं हीयते तदनुपाधिकृपालुता ते**
**संवित्सुखस्य न हि ते प्रियमप्रियं वा ।। ५**

*ஆள்பவரே! இந்த எங்களைக் காக்க நீர் எம் பாபத்தை நீக்க நமஸ்காரம் முதலியவற்றை எதிர்பார்க்கிறீர் என்பது தேவையற்றது. நமஸ்காரம் முதலியவை செய்யாவிடில் உமக்குக் குறை என்ன ஏற்படும்? உமக்கோ எதனையும் எதிர்பார்க்காமல் தயை புரிவது இயல்பு. பேரறிவும் பேரானந்தமுமே உருவான உமக்கு விரும்பிய பொருளும் விரும்பாத பொருளும் உண்டா? (5)*

**अप्याहर-प्रहर-संहर-वाग्वदस्य**
**त्राताऽस्युपात्तममुना मम नाम हीति ।**

एवं विभो तनुभृतामवनेऽप्युपाया-

न्वेषी कथं परमकारुणिकोऽसि न त्वम् ॥ ६

*பெருமானே! ஆஹர ப்ரஹர ஸம்ஹர என-கொண்டுவா! அடிப்பாய்! அழிப்பாய்! என்ற பொருள் கொண்ட சொற்களைச் சொன்னவனை அவன் (ஹர என்ற) என் பெயரைச் சொல்லிவிட்டான் என்று காப்பாற்றுகிறீர். இவ்வாறு காப்பாற்ற ஏதேனும் சாக்குபோக்கு கிட்டாதா எனத் தேடுபவரான நீர் பெருங்கருணை கொண்டவர் அல்லவா?(6)*

त्राता दयाजलनिधिः स्मृतिमात्रलभ्यः

क्षन्ताऽऽगसामिति भवद्यशसा हृतात्मा ।

स्वामस्मरन् बत मलीमसतामलज्जो

भक्तिं भवत्यभिलषामि धिगस्तु यन्माम् ॥ ७

*நீர் காப்பவர், தயைக்கடல், நினைத்தவுடன் கிடைப்பவர், பாபத்தை மன்னிப்பவர் என்ற உமது புகழால் உள்ளமிழந்த நான் எனது குறைகளை (பாப அழுக்கை) மறந்து நாணமின்றி உம்மிடம் பக்தியை விரும்புகின்றேனே! அட சே! (7)*

शर्माप्तिरार्तिविहतिश्च भवत्प्रसादं

शम्भो विना न हि नृणां स च नान्तरा याम् ।

यस्यां विधिः श्वभुगपि क्षमते समं तां

त्वद्भक्तिमिच्छतु न कः स्वविनाशभीरुः ॥ ८

*சம்போ! இன்பம் பெறுவதோ துன்ப நீக்கமோ உமது அருளின்றி மனிதனால் பெற இயலாது. அந்த அருள் உம்மிடம் பக்தியில்லாமல் கிட்டாது. அந்த பக்தி பெற பிரும்மாவும் நாயடித்து உண்பவனும் சமத்தகுதியுள்ளவரே. தன் அழிவைப்பற்றிப் பயப்படுகிற எவனும் உம்மிடம் பக்தி விரும்பலாமல்லவா? (8)*

भक्तिर्विभात्ययि महत्यपरं तु फल्गिव-

त्येवं ग्रहो ननु भवत्कृपयैव लभ्यः ।

लब्धस्त्वसौ फलममुष्य लभे न किं वा
तां हन्त ते तदयशो मम हृद्रुजा च ।। ९

*பக்தியே பெரிது, மற்றது அற்பமே என்ற எண்ணமும் உமது கிருபையாலேயே பெறத்தக்கது. அது கிட்டிவிட்டது. அதன் பலனைப் பெறமாட்டேனோ? அவ்வாறாயின் உமது புகழ் குன்றுமே! இதுவே என் உள்ளத்து வேதனை. (9)*

त्वद्भक्त्यसम्भवशुचं प्रतिकारशून्यां
अन्तर्वहन्निखिलमीश सुखञ्च दुःखम् ।
उद्बन्धलग्न इव दुःखतयैव मन्ये
सन्ताम्यतीति मयि हन्त कदा दयेथाः ।। १०

*ஈச! உமது பக்தி கிட்டாததால் உண்டாகிற துன்பம் பரிஹாரம் இல்லாதது. அதனை உள்ளத்தில் சுமக்கிற நான் ஸுகத்தையும் துக்கத்தையும் தூக்கில் மாட்டிக்கொண்டவன் போல் துக்கமாகவே கருதிக் குமுறுகிறேன். எப்போது பரிவு காட்டுவீர்? (10)*

भक्तिं भवत्यविहतां वहतस्तु तद्वि-
शेषोपलम्भविरहाहितमस्तु दुःखम् ।
तस्याः प्रतीपततिभिर्हतिजं कथं वा
दुःखं सहे मयि कदेश कृपा भवेत्ते ।। ११

*ஈச! உம்மிடம் தடையற்றுப்பக்தி கொண்டவனுக்குப் பக்தியின் உயர்நிலை கிட்டாததால் ஏற்படுகிற துக்கம் வரும். எனக்கோ பக்திக்கு இடையூறுகளால் தடை நேர்வதால் துக்கம் உள்ளது. அதனை எப்படி சகிப்பேன்? உமது கிருபை எப்போது உண்டாகும்? (11)*

लग्नः कृतान्तवदनेऽस्मि लभे च नाद्या-
प्यच्छां रतिं त्वयि शिवेत्यवसीदतो मे ।

त्वद्विस्मृतिं कुविषयाभिरतिप्रचारैः
तन्वन् हि मां हसपदं तनुषे ब्रुवे किम् ।। १२

*சிவ! யமனின் வாயில் சிக்கிக்கொண்டுள்ளேன். இப்போதும் எனக்கு தெளிவு மிக்க பக்தி உம்மிடம் ஏற்பட வில்லை என்ற வருந்துகிற எனக்கு, கெட்ட விஷயங்களில் மனத்தை ஈடுபடச் செய்து உம்மைப் பற்றிய நினைவின்மையை வலிவில் ஏற்படுத்தி என்னைக் கேலிக்குரியவனுக்குகிறீரே! என்ன சொல்வேன்? (12)*

बद्धस्पृहं रुचिरकाञ्चनभूषणादौ
बालं फलादिभिरिव त्वयि भक्तियोगे ।
आशाभराकुलमहो करुणानिधे मां
अर्थान्तरैर्हृतधियं कुरुषे किमेवम् ।। १३

*கருணையின் இருப்பிடமே! சிறுவனைப் பழம் முதலியவற்றைக் காட்டி ஏமாற்றுவது போல், உம்மிடம் பெரிதும் ஈடுபட்ட என்னை, அழகிய தங்க நகை முதலியவற்றில் நாட்டம் பெறச் செய்து வேறு பொருட்களில் உள்ளத்தைப் பறி கொடுக்கச் செய்கிறீரே! ஏன் இப்படி? (13)*

तिक्तग्रहोऽधिमधुरं मधुरग्रहोऽधि-
तिक्तं यथा भुजगदष्टतनोस्तथाहम् ।
त्वय्यस्तरक्तिरितरत्र तु गाढमग्नः
शोच्योऽश्मनोऽपि हि भवामि किमन्यदीश ।। १४

*ஈச! பாம்பு கடிபட்டவன் தித்திப்பதைக் கசப்பதாகவும் கசப்பதைத் தித்திப்பதாகவும் உணர்வது போல் உம்மிடம் ஈடுபாடின்மையும் மற்றவற்றில் மிகுந்த ஈடுபாடும் கொண்டவனுன நான் ஓட்டாஞ்சல்லிக்கும் தாழ்ந்தவனுக இரக்கத்திற்குரியவனுகிவிட்டேனே! வேறென்ன! (14)*

त्वत्संस्मृतित्वदभिधानसमीरणादि-
सम्भावनास्पदममी मम सन्तु शोकाः ।

मा सन्तु च त्वदनुषक्तिमुषः प्रहर्षाः
मां त्वत्पुरःस्थितिपुषेश दृशाऽनुपश्य ।। १५

*உம்மை நினைப்பது உம்பெயர் கூறுவது முதலானவை நேருமா என்ற கவலைகள் எனக்கு ஏற்படட்டும். ஆனால் உம்முடனான தொடர்பைத் திருடுகிற இனிய நிகழ்ச்சிகள் நேராதிருக்கட்டும். உம் முன் எனது இருப்பைப் போஷிக்கிற கண்ணால் என்னைப்பார்ப்பீர். (15)*

सम्पातनं ननु सुखेषु निपातनं वा
दुःखेष्वथान्यदपि वा भवदेकतानम् ।
यत्कल्पयेर्ननु धिया शिव तद्विधेहि
नावैम्यहं मम हितं शरणं गतस्त्वाम् ।। १६

*சிவ! ஸுகத்தில் ஆழ்த்துவதோ துக்கத்தில் தள்ளுவதோ இதன் மாறுபாடோ அனைத்தும் உம்மிடம் மட்டும் உள்ளது. எதனை யோசித்துத் திட்டமிடுகிறீரோ அதனைச் செய்வீர். எனக்கு ஹிதமானதை நான் அறியேன். உம்மைச் சரணடைந்தேன். (16)*

दुःखं प्रदित्सुरयि मे यदि न प्रदद्याः
दुःखापहं पुरहर त्वयि भक्तियोगम् ।
त्वद्भक्त्यलाभपरिचिन्तनसम्भवं मे
दुःखं प्रदेहि तव कः पुनरत्र भारः ।। १७

*புரஹர! துக்கத்தைத் தரவிரும்பி, துக்கத்தைத் தருகிற உம்முடன் பக்தியாலான இணைப்பைத் தராதிருப் பதாயிருந்தால், உம்மிடம் பக்தி ஏற்படாததை நினைத்துத் துயரடைவதைத் தருவீர். உமக்கு அதனால் அதிகச்சுமையா? (உம் முடன் பக்தியால் இணையாதது துயரைத்தருகிறது. துயரைத் தருவதே உம் லட்சிய மெனில் அந்தத்துயரைத் தரலாமே!) (17)*

भक्त्या त्वयीश कति नाश्रुपरीतदृष्ट्या
सञ्जातगद्गदगिरोत्पुळकाङ्गयष्ट्या ।

धन्याः पुनन्ति भुवनं मम सा न हीति
दुःखेऽपि का नु तव दुर्लभताविधित्सा ॥ १८

*ஈச! கண்ணீரால் கலங்கிய பார்வையுடன், தழதழத்த குரலுடன் மயிர் சிலிர்த்த உடலுடன், உம்மிடம் பக்தியுடன் பாக்ய சாலிகளாக பூமியைப் புனிதப்படுத்துபவர்கள் பலர். அந்த பக்தி என்னிடமில்லை என்ற வருத்தம் உள்ள போதிலும் எனக்கு நீர் கிடைப்பதற்கரியவர் என்ற நிலையை ஏற்படுத்துவது ஏன்? (18)*

त्वद्भक्तिरेतदनवाप्तिशुगप्युदारा
श्रीस्सा च तावकजनाश्रयणे च लभ्या।
उल्लङ्घ्य तावकजनान् हि तदर्थनाग-
स्त्वय्याःसहस्व तदिदं भगवन्नमस्ते ॥ १९

*பகவானே! இந்த உம்மைக் காணப்பெறாத வருத்தமும் உன் வள்ளல் தன்மை படைத்த பக்தியால் தான். அந்தச் சீரான நிலையும் உம்மைச் சார்ந்தவர்களை அண்டுவதால் எளிதில் கிடைக்கக் கூடியதே. உம்மைச் சார்ந்தவர்களைத் தாண்டி உம்மிடம் நேரில் அதனைக் கூறுவது பாபமே! இதனையும் பொறுத்தருள்வீர். உமக்கு நமஸ்காரம். (19)*

सेवा त्वदाश्रयवतां प्रणयश्च तेषु
सिद्ध्येद्दृढो मम यथाशु तथा दयार्द्राम्।
दृष्टिं तवार्पय मयीश दयाम्बुराशे
मैवं विभो विमुखता मयि दीनबन्धो ॥ २०

*ஈச! உம்மை அண்டியவர்களுக்குப் பணிவிடையும் அவர்களிடம் அன்பும் சித்திக்குமளவு தயையால் ஈரமான பார்வையை என்மீது செலுத்துவீர். தயைக்கடலே! பெருமானே! எளியவருக்கு உறவினரே! என்னிடம் இந்தப் பராமுகம் வேண்டாம். (20)*

गौरीसखं हिमकरप्रभमम्बुदाभं
श्रीजानि वा शिववपुस्तव तज्जुषो ये ।
ते त्वां श्रिता वहसि मूर्ध्नि तदङ्घ्रिरेणुं
तत्सेवनं मम कथं नु दयां विना ते ।। २१

*சந்திரனைப் போன்று ஒளியுள்ள கௌரியின் மணாளரோ மேகவண்ணனான லக்ஷ்மீபதியோ, உமது மங்களமான வடிவமாகும். அந்த வடிவில் தோன்றுபவரை எவர் அண்டி வாழ்கிறாரோ அவரது திருவடித்தூசியை தலையால் நீர் தாங்குகிறீர். அத்தகைய அடியார்களுக்குப் பணிவிடை புரிவது உமது தயையின்றி எப்படிக்கிட்டும்?(21)*

त्वद्भक्तिकल्पलतिकां कृपयार्पयेश
मच्चित्तसीम्नि भवदीयकथासुधाभिः ।
तां वर्धय त्वदनुरागफलाढ्यमौलिं
तन्मूल एव खलु मुक्तिफलं चकास्ति ।। २२

*ஈச! உமது பக்தியாகிய கற்பகக் கொடியை கிருபையுடன் எனக்கு அளிப்பீர்! அதனை என் உள்ளமெனும் நிலத்தில் உமது கதையாகிய நீர் வார்த்து வளர்ப்பீர். உம்மிடம் பற்றென்ற பழம் அதன் உச்சியில் காய்த்துப்பழுக்கும். அதன் வேரில் தான் முக்தி என்ற பழமும் விளங்குகிறது. (22)*

निस्स्वो धनागम इव त्वदुपाश्रितानां
सन्दर्शने प्रमुदितस्त्वयि सान्द्रहार्दः ।
आलोकयन् जगदशेषमिदं भवन्तं
कार्यस्त्वयेश कृपयाऽहमपास्तखेदः ।। २३

*ஈச! செல்வமில்லாத ஏழை செல்வம் வந்ததும் மகிழ்ச்சி அடைவது போல், உமது அடியார்களைக் கண்டதும் உள்ளம் கசிந்து உலகமனைத்தையும் நீர் (சிவன்) எனக் காண்பவனாக, துயர் நீக்கப்பெற்று மகிழ்ச்சியடையுமாறு கிருபை செய்வீர் (23)*

यो भक्तिकल्पलतिकाभिधमिन्दुमौळेः
एतं स्तवं पठति तस्य तदैव देवः ।
तुष्टः स्वभक्तिमखिलेष्टदुहं ददाति
यां प्राप्य नारदमुखैरुपयाति साम्यम् ।। २४

*பிறை சூடியின் பக்தி கல்பலதிகா என்ற இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவனுக்கு அந்த ஸ்தோத்திரமே தேவனுகி மகிழ்ந்து விரும்பிய தனைத்தையும் தர வல்ல தனது பக்தியை வழங்குவார். அதனைப் பெற்றதும். நாரதர் முதலானோருடன் ஸமநிலை பெறுவான் (24)*

*சிவபக்தி கல்பலதிகை முற்றிற்று.*

शिवाभ्यां नमः

## ६. शिवभक्तलक्षणम् ।।

## 6. சிவபக்தலக்ஷணம்

नाथ त्वदीयमभिधानमुपाश्रितानां
क्रोधस्मरादिककुवृत्तिपिशाचिकाभिः ।
आभिः कथं परिभवो भगवन्नमीषां
अन्तर्निषीदति भवान् खलु शूलपाणिः ।। १

*நாதரே! பகவானே! உமது திரு நாமத்தைப் பற்றியவர்களுக்கு கோபம் காமம் முதலிய கெட்டமனப் போக்காகிய பிசாசுகளால் தோல்வி ஏற்படாது. ஏனெனில் அவர்களது உள்ளத்தில் சூலமேந்திய நீர் அல்லவா அமர்ந்திருகிறீர்? (1)*

दर्पस्मरप्रभृतिदावविदह्यमानं
लोकं विलोक्य कृपयेश कृपां तवास्मिन् ।
वाञ्छन्ति यान्ति च मुदं वयमेतदापत्-
त्यक्ताः किलेति शरणीकृततावकाख्याः ।। २

*ஈச! உமது பெயரைச் சரணடைந்தவர்கள், கர்வம், காமம் முதலிய காட்டுத்தீயில் வெந்து கொண்டிருக்கிற மக்களைக் கண்டு பரிவுடன், இவர்களிடம் உமது பரிவு காட்டப்பெறுவதை விரும்புகின்றனர். பரிவு கிட்டியதும் நாம் அந்த ஆபத்திலிருந்து விடுபட்டோம் எனப் பெருமகிழ்ச்சியடைகின்றனர். (2)*

**कायस्य हेयनिधितां मृतिरुग्जरार्त्या-**
**द्यानन्त्यमप्यलमवेत्य विमुक्तसर्वाः ।**
**शम्भो चरन्ति विरुजस्त्वयि बद्धभावाः**
**ये सादरास्तव हि नाम्नि महानुभावाः ॥ ३**

*சம்போ! மரணம், நோய், மூப்பு முதலிய எல்லையற்ற துயரம் நேர்வதால் உடல் என்பது தவிர்க்கத்தக்கது என்பதை நன்கு உணர்ந்து, எல்லாவற்றையும் துறந்து, உம்மிடம் உள்ளத்தை நிறுத்தி வேதனையற்றவராக, உமது நாமத்தில் நன்மதிப்புடன், பேரனுபவம் பெற்ற சிலர் நடமாடுகின்றனர். (3)*

**त्वन्नामकीर्तनवरौषधमाश्रितेऽस्मिन्**
**अस्मै खलु स्मरहर स्वदसे त्वमेकः ।**
**अन्यत्तु किञ्चिदपि न स्वदते तदेतद्**
**आखण्डलस्य पदमस्तु विधेः पदं वा ॥ ४**

*மன்மதனை அழித்தவரே! இவன் உமது நாமமாகிய சிறந்த மருந்தை நம்பி ஏற்றதால், நீர் ஒருவரே அவனுக்கு ருசிக்கிறீர். இந்திர பதவி அல்லது பிரும்மாவின் பதவி எதுவும் சிறிது கூட ருசிக்கவில்லை. (நாமம் மிகச் சிறந்த மருந்து. அதனைச் சாப்பிட்டதும் நாமம் ஒன்றைத் தவிர வேறெதனையும் ருசித்து ஏற்க முடியவில்லை.) (4)*

**आकाङ्क्षितुं कमलजादिभिरप्यलभ्यं**
**आप्तुञ्च तन्निरुपहत्यथ वर्तितुं च ।**
**सन्मौळिलाळनपदं पदमीशते किं**
**गौरीश ये त्वदभिधानरतास्तदन्ये ॥ ५**

கௌரியின் ஈச! பிரும்மா முதலானவருக்கும் கிட்டாத நல்லோர் வணங்கி எழுகின்ற உமது திருவடி நிழலை விரும்பவும், அதனைத் தடையின்றி பெறவும் அதில் வாழவும் உன் நாமத்தைக் கூறுவதில் ஈடுபட்டவரால் இயலும். மற்றவரால் இயலுமா? (5)

**एकं भवद्भजनमेव सुखं तदन्यद्**
**आर्त्यात्मकं सकलमेतदिति प्रबोद्धुम्।**
**स्थातुं च मुक्तसकलं भवदेकतानं**
**ईशास्त एव शिव ये तव नाम्नि सक्ताः ॥ ६**

சிவ! உமது பஜனம் ஒன்றே ஸுகம். மற்றதனைத்தும் துன்பமே என்று கண்டறியவும். மற்றவற்றில் பற்றற்று, உம்மிடமே நிலைத்து நிலை பெறவும் உம் நாமத்தில் ஈடுபாடு உள்ளவர்களால் மட்டுமே இயலும். (6)

**दुःखात्मकत्वमखिलस्य तवातिवेला-**
**नन्दात्मताञ्च समवेत्य झटित्यशेषम्।**
**त्यक्त्वाऽनलार्तवपुषस्सरसीव शम्भो**
**त्वय्यापतन्ति समुपाश्रिततावकाख्याः ॥ ७**

சம்புவே! அனைத்தும் துக்கமானவை. நீர் ஒருவரே வரையற்ற ஆனந்தமானவர் என உணர்ந்து உடன் எல்லாவற்றையும் துறந்து நெருப்பில் வாடியவன் ஓடையில் இறங்குவது போல், உமது திருநாமத்தையே பிடிப்பாகக் கொண்டு, உம்மிடம் மூழ்கின்றனர். (7)

**आख्यापरास्तव विभो भवदात्मकत्वं**
**अस्याखिलस्य तव चित्सुखरूपताञ्च।**
**आबुद्ध्य बद्धहृदयास्तव शर्म विन्द-**
**न्त्यन्तः किमप्यगणितद्रुहिणादिभोगाः ॥ ८**

எங்கும் நிறைந்தவரே! உமது நாமத்தை நம்புபவர்கள், உலகில் காணப்படுவதனைத்தும் உம்வடிவில் அடங்குவதாக,

நீர் பேரறிவும் பேரானந்தமுமாக இருப்பதாக உணர்ந்து, உள்ளத்தைக்கட்டுப்படுத்தி, பிரும்மனின் ஆனந்தம் முதலியவற்றைப் பெரிதும் மதிக்காமல், உள்ளத்தில் உமது ஆனந்தத்தை உணர்கின்றனர். (8)

द्वेष्यप्रियादि सकलं भवदीयरूपं
बुद्ध्वा त्वयि प्रणयतः प्रणयार्द्रदृष्ट्या ।
पश्यन्त एतदवलम्बिततावकाख्याः
पश्यल्ललाट विचरन्ति जगत् पुनन्तः ।। ९

நெற்றியால் பார்ப்பவரே! (நெற்றிக்கண்ணரே!) வெறுப்புக்குரியதும் விருப்பிற்குரியதும் அனைத்தும் உமது வடிவென உணர்ந்து உம்மிடம் அன்பு கொண்டமையால் உலகை அன்பால் நனைந்த பார்வையால் பார்ப்பவர்களாக, உமது பெயரையே பிடிப்பாகக் கொண்டு உலகைப் புனிதப்படுத்துபவர்களாக நடமாடுகின்றனர். (9)

रागादिकृद्विविधमेष महानटः ख-
ल्वानृत्यतीत्थमिति तत्वदृशेक्षमाणाः ।
क्षोभं न यान्ति दधते च मुदं स्मरन्तः
त्वद्वैभवं त्वदभिधाननिबद्धभावाः ।। १०

உமது நாமத்தில் கட்டுண்ட மனம் கொண்ட அவர்கள் உமது பெருமையை எண்ணி எண்ணி, மகிழ்கின்றனர். "இந்தப் பெரும் நடிகரான நீர் காமம் முதலியவற்றைத் தூண்டிப் பலவிதமாக ஆட்டம் போடுகிறீர் என்று தத்துவநோக்கால் உலகியலைச் சீர் தூக்கிப் பார்ப்பதால் கலங்குவதில்லை. (10)

शम्भो कथं नु चतुरास्तव नाम्नि सक्ताः
शश्वत्कृतेऽप्यपद एव पराभवेऽन्यैः ।
अस्तोद्यमाः प्रतिकृतावपयात्वमीषां
एषा कदार्तिरिति तेषु दयां वहन्ति ।। ११

*சம்புவே! உமது நாமத்தில் ஈடுபட்ட அவர்கள் மிகவும் தேர்ந்தவர்கள். பிறர் காரணமின்றித் தன்னை அவமதிக்கும் போது, அதற்கு எதிர் நடவடிக்கையில் முயற்சி எடுக்காமல், தன்னை எதிர்ப்பவர்களின் கஷ்டம் எப்போது விலகும்? என அவர்களிடம் பரிவு காட்டுகின்றனர். (11)*

**त्वन्नामधेयरसिकास्तरुणेन्दुमौळे**
**दुःखं न यान्ति किमपीति हि वादमात्रम्।**
**तेऽमी किल स्वविपदीव वहन्ति दुःखं**
**दृग्गोचरं व्रजति दुःखिनि जन्तुमात्रे ॥ १२**

*இளஞ்சந்திரனைச் சூடியவரே! உமது நாமத்தின் ருசி கண்டவர்கள் சிறிதும் துயரமடைவதில்லை என்பது சொல்லளவில் தான். துயருற்ற எவரேனும் இவர்கள் கண்ணில்பட்டால், தனக்கு ஆபத்து நேர்ந்துவிட்டதாக துக்கப்படுகின்றனர். (12)*

**सर्वत्र वत्सलतया त्वदवेक्षया चो-**
**दारा महान्त इति धीनिगळेन मुक्ताः ।**
**प्रेम्णा खलु त्वयि विभो तृणिताखिलार्थाः**
**त्वन्नामधेयरसिकाः कृतिनो जयन्ति ॥ १३**

*எங்கும் நிறைந்தவரே! உமது நாமருசி கண்டவர்கள், உம்மிடம் அன்பால், பொருளனைத்தையும் புல்லாக மதிக்கிறார்கள். எல்லோரிடமும் அன்புடன் பழகுவதாலும் எங்கும் எதிலும் உம்மைக் காண்பதாலும் ''நான் பெரும் வள்ளல், நான் மகான்'' என்ற அறிவுத்தளையிலிருந்து (அகந்தை-மமதையிலிருந்து) விடுபட்டவராகிறார்கள் (13)*

**नाथ त्वदीक्षणवशादखिलेष्वमीषु**
**न काप्यगौरवदृगात्मनि तु प्रकामम्।**
**नैच्यग्रहस्त्वयि तु रक्तिरनर्गळेति**
**काधीतवन्त इदमादृत तावकाख्याः ॥ १४**

நாதரே! உமது நாமத்தில் பெருமதிப்பு கொண்ட இவர்கள், எல்லாவற்றிலும் உம்மைக் காண்பதால், எதனையும் குறைத்து மதிக்காதிருத்தலும் தன்னை வினயத்தால் தாழ்த்திக் கொள்வதும் உம்மிடம் தடையற்ற ஈடுபாடும் கொண்டவர்கள். இவற்றை எங்கு கற்றுக்கொண்டனர்? (14)

अत्युन्नतिं वितरतीति यशोऽतिवेलं
अस्याश्चकास्ति शिव तावकनाम्नि सक्तेः ।
आख्यायतां किमियमातनुते नितान्तं
आनम्रमेतमखिलेषु चराचरेषु ॥ १५

சிவ! உமது நாமத்தில் ஈடுபாடு பெரும் உயர்வைத்தரும் என்ற எல்லை மீறிய புகழ் விளங்குகிறது. ஆனுல் அசைவதும் அசையாததுமான அனைத்தின் முன் நாமபக்தி இவனை எப்போதும் வணங்கி நிற்பவனுக்குகிறது. இதனை பலரறியச் சொல்லலாமா? (15)

त्वन्नामकीर्तनजुषोऽनिशमेकतानाः
त्वत्सेवनं विदधतोऽपि न तत्र तृप्तिम् ।
विन्दन्ति हन्त सति विघ्नलवे भवन्ति
वह्निप्रवेश इव दुस्सहतापभाजः ॥ १६

உமது நாம கீர்த்தனம் செய்பவர்கள் எப்போதும் ஒரே நோக்கத்துடன் உம்மை வழிப்பட்டாலும் அதில் திருப்தி அடைவதில்லை. சிறிதளவு தடை ஏற்பட்டாலும் நெருப்பில் விழுந்தவர் போல் தாங்க முடியாத தாபத்தை அனுபவிக்கிருர்கள். (16)

अस्तस्पृहं मुनिमहं समदर्शनं स-
मन्वेमि तच्चरणपद्मरजोऽभिलाषात् ।
इत्यादितावकगिरां गिरिशास्पदं त्व-
दाख्यापराः पुनरमूनवितुं क्षमः कः ॥ १७

*மலையில் வசிப்பவரே! பற்றற்று எதிலும் ஸமநோக்குள்ள முனிவரை அவரது திருவடித்தூசி பெறுகிற எண்ணத்துடன் பின் தொடர்ந்து செல்கிறேன்" என்ற உமது சொல்லிற்கு உரியவர் உன் நாமத்தையே பெரிதாக மதிப்பவர் தான். இவர்களைக் காக்க வேறு எவரால் இயலும்? (17)*

**त्वत्सौहृदादिसुगुणामृतशीतळास्त्व-**
**दाख्यापरा इति तवेश यशोऽभिगोप्तुम्।**
**अस्मानपि त्वदभिधानजुषो जुषस्व**
**स्वच्छं यशस्तदपदे ननु माऽपनैषीः ॥ १८**

*ஈச! உமது பெயரைப் பெரிதும் மதித்துக் கூறுபவர் உமது இனிய நட்பு நல்லெண்ணம் என்ற அமுதத்தால் குளிர்ந்தவர்கள் என்ற உமது புகழைக்காப்பாற்ற, உமது பெயரைச் சரணடைந்த எம்மையும் தன்னவராக்குவீர். உமது தூயபுகழை வீணே இழக்காதீர். (18)*

**क्रोधस्मराद्युपशमं त्वयि रागिताञ्च**
**देहीश मे न यदि मे श्वमुखेभ्य एभ्यः।**
**किं भेदकं त्वदभिधां मम गृह्णतोऽस्य**
**फल्गुस्थितिस्त्वदयशोभरहेतुरेषा ॥ १९**

*ஈசனே! கோபம் காமம் முதலியவற்றைத் தணித்து உம்மிடம் ஈடுபாட்டைத்தருவீர். இல்லாவிடில் நாய் முதலானவற்றிற்கும் இவனுக்கும் இடையே வேற்றுமை எதுவுமில்லை. உமது நாமங்களைக் கூறும் இவனுக்கு நேர்கிற தாழ்நிலை உமது புகழ் கெடக் காரணமாகும். (19)*

**त्वन्नामकीर्तनसुधारसधारयाऽस्त-**
**विच्छेदया भृशविशृङ्खलसौहितीकः।**
**वेद्यान्तराण्यकलयन् विचराणि सोऽहं**
**शान्तः कदा शशिवतंस तव प्रसादात् ॥ २०**

சந்திரனைச் சூடியவரே! உமது நாமங்களைப் பாடுவதென்ற அமுத நீர் தடையுருமல் பெருகுகின்றது. அதில் முழுவதும் ஆழ்ந்து குளிர்ந்து இதம் உணர்ந்து உணரத்தக்க வெளிப்பொருளை நாடாமல், அமைதியுள்ளவனுக அருளால் எப்போது நான் நடமாடிக் கொண்டிருப்பேன் ? (20)

**मत्प्राणवल्लभ मदीयनिधे मदात्मन्**
**साम्ब प्रभो शिव शशाङ्कविभूषणेति ।**
**त्वन्नामदीव्यदमृतोदधिवीचिडोळा-**
**न्दोळैर्विधेहि विरुजं कृपया विभो माम् ।। २१**

என் உயிர்த் தோழரே! என் செல்வமே! என் ஆத்மாவே! அம்மையுடன் கூடியவரே! எல்லாம் வல்லவரே! மங்களமானவரே! சந்திரனை அணியாகக் கொண்டவரே! எங்கும் நீக்கமற நிறைந்தவரே! உமது நாமமாகிய அமுதக்கடலின் அலைகளாகிய ஊஞ்சலில் ஆடச் செய்து கிருபையால் துயரை நீக்குவீர். (21)

சிவபக்தலக்ஷணம் முற்றிற்று.

**शिवाभ्यां नमः**

## ७. तारावली स्तोत्रम्

## 7. தாராவளீஸ்தோத்திரம்

ஸ்ரீ ஸ்ரீதர அய்யாவாள் திருச்சியில் வசித்தபோது தாயுமானவரைத் தரிசனம் செய்து வருகையில் ஒரு தாய் தன் குழந்தை கடும் நோயால் பாதிப்பு அடைந்துள்ளதைக் காட்டி நோய் நீக்க வேண்ட, அய்யாவாள் மாத்ரு பூதேசரைப் பாடக் குழந்தையின் நோய் நீங்கிய தென்பர். தன்னையே ஏதுமறியாப்பாலனுக அறிவித்து பாபத்தையும் அதன் பின் விளைவான பயத்தையும் நீக்க இந்தத் துதியால் சிவனிடம் வேண்டுகிருர் எனக்கூறுபவருமுண்டு அபிஜித் என்ற நக்ஷத்திரத்துடன் 28 நக்ஷத்திரங்கள் தாரா எனப்படுபவை. அவற்றின் உருவில் 28 சுலோகங்கள் அடங்கியது இந்தத் துதி.

சம்பு: - மங்களங்கள் தோன்றுமிடம். ஸாம்பமூர்த்தி: அம்பாளுடன் கூடிய வடிவமுள்ளவர்.

निरवधिकरुणार्द्रैर्निह्नुताशेषदोषैः
अमृतरसझराणां अन्तरङ्गैरपाङ्गैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १

எல்லையற்ற கருணையால் நனைந்தவையும் எல்லாக் குற்றங்களையும் மறைத்தவையும் அமுத நீர்ப்பெருக்கிற்கு நெருங்கிய அங்கமானவையுமான கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (1)

श्रियमवनतिभाजां श्रेयसामादधानैः
अमृतरसतरङ्गश्रीधुरीणैरपाङ्गैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २

தன்னை வணங்குபவருக்கு மேன்மையின் சிறப்பைத் தருபவையும் அமுத நீர்ப்பெருக்கலைகளின் பொறுப்பை ஏற்றவையுமான கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (2)

गजमुखशरजन्मप्रेमगाढोपगूढैः
नगदुहितुरमन्दानन्दमूलैरपाङ्गैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ३

கணபதியையும் குகனையும் அன்புடன் இறுகி அணைத்துக் கொண்டவையும் மலைமகளின் வேகமிக்க ஆனந்தத்தின் காரணமானவையுமான கடைக்கண்களால் சம்புவான

ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (3)

गिरिवरतनयायाः केळिकोपे नतस्त-
चरणनखरुचिश्रीवर्मितैरीक्षणैर्द्राक् ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ४

மலைமகளின் விளையாட்டிற்கான கோபத்திடம் வணங்கியவராக, அவளது திருவடி நகங்களின் ஒளியைக்கவசமாக்கிக் கொண்ட கடைகண்ணால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (4)

स्मरहर दयनीयाऽस्मीत्युमायां वदन्त्यां
दरहसितमुखेन्दुस्तामपाङ्गैः पिबद्भिः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ५

மன்மதனை அழித்தவரே! உமது பரிவிற்கு நான் உகந்தவள் என உமை கூறும் போது மெல்லிய புன்சிரிப்பு கொண்ட சந்திரன் போன்ற முகம் கொண்டவராக, அவளைப் பருகுகிற கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (5)

नमदमरकिरीटक्रीडदुद्दण्डशुण्डा-
मुखमिभमुखमारादापिबद्भिः कटाक्षैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ६

தன்னை வணங்குகிற தேவர்களின் கிரீடங்களுடன் விளையாடுகிற தடித்த தும்பிக்கை கொண்ட

*யானைமுகத்தோனை ஆசையுடன் பருகுகிற கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (6)*

**समदधत मृकण्डोरात्मजे चोपमन्यौ**
**समभिलषितसिद्धिं ये कटाक्षाङ्कुरास्तैः ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ७**

*மிருகண்டுவின் புதல்வரான மார்கண்டேயருக்கும் உபமன்யுவிற்கும் அவர்கள் விரும்பியது நிறைவு பெறும்படி செய்த கடைக்கண்களிலிருந்து வெளியான முளை போன்ற ஒளிகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (7)*

**मकुटशशिकिशोरस्यन्दिपीयूषधारा-**
**मधुरशिशिरभावस्तोमचोरैरपाङ्गैः ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ८**

*தன் கிரீடத்திலுள்ள இளஞ்சந்திரனிடமிருந்து பெருகுகிற அமுத தாரையின் இனிமையையும் குளிர்ச்சியையும் மொத்தமாகத் திருடுகிற கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (8)*

**प्रणमदमरमौळिप्रस्फुरद्रत्नबृन्द-**
**प्रसृमरकिरणश्रीदत्तहस्तैरपाङ्गैः ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। ९**

*தன்னை வணங்குகிற தேவர்களின் கிரீடங்களிலுள்ள ஒளி மிக்க ரத்னக் கூட்டத்திலிருந்து வெளியாகிற கதிரொளிக்குக்கைப் பிடிப்பு தருகிற கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி*

*இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (9)*

**प्रणमनकृति सृष्टा शम्भुना पद्मपङ्क्ति-**
**प्रविततिरियमित्यध्यस्यमानैरपाङ्गैः ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ १०**

*தன்னை வணங்குபவர் மீது சிவனால் எறியப்பட்ட தாமரைக் கொத்தோ எனக்கருதப்படுகிற கடைக்கண்பார்வைகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (10)*

**प्रणमनपरसंसन्मोक्षसाम्राज्यलक्ष्मी-**
**वरणकमलमालोदारयाऽपाङ्ग भङ्ग्या ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ ११**

*தன்னை வணங்குவதில் ஆர்வம் கொண்டகுழுவினரை மோக்ஷ ஸாம்ராஜ்ய லக்ஷ்மி வரிக்க ஏற்ற ஸ்வயம்வரமாலை போன்று பெருமை மிக்க கடைக்கண் அழகால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (11)*

**गदगणगळनायुः कल्पनोदूढदीक्षैः**
**अभिमतसकलार्थादानदक्षैः कटाक्षैः ।**
**अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः**
**सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ १२**

*நோய்க் கூட்டத்தை அழிக்கவும் ஆயுளை வளர்க்கவும் விரதம் பூண்டவையும் விரும்பியதனைத்தையும் வழங்குவதில் தேர்ந்தவையுமான கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (12)*

भवभरतपतापोपप्लुतानां नतानां
श्रमहृदमृतवृष्ट्या सान्द्रकारुण्यदृष्ट्या ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १३

*ஸம்ஸாரச் சுமையால் தாபமடைந்த வணங்குபவருக்குக் களைப்பைப் போக்குகிற அமுதம் பொழிகிற கருணையால் கனத்த பார்வையால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (13)*

दळमपि कुसुमं वा दत्तवद्भ्यो जनेभ्यो
विधिवलमथनश्रीविक्रयिण्या दृशा द्राक् ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १४

*இலையையோ பூவையோ தனக்களித்த மக்களுக்கு பிரும்மா இந்திரன் இவர்களின் பெருமையைப் பண்டமாற்றாகத் தருகிற பார்வையால் விரைவாக சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (14)*

अवनमनपराणां आत्मतत्त्वावबोध-
प्रकटनपटुदीपैः प्रस्फुरद्भिः कटाक्षैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १५

*தன்னை வணங்குபவருக்கு ஆத்ம தத்துவஜ்ஞானத்தைப் புகட்டுவதில திறம் பெற்ற தீபமாக விளங்குகிற ஒளிமிக்க கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (15)*

अवनमनपराणां आयुरारोग्यवृद्धिं
निजचरणरतिश्चोदश्चयद्भिः कटाक्षैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १६

*வணங்குவதில் ஈடுபட்டவரின் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் வளர்ப்பதையும், தன் திருவடிகளில் பற்றையும் தூக்கிவிடுகிற கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (16)*

हृदि विनतजनानां भक्तिकल्पद्रुवल्ली-
जनिकृदमृतसेकैर्विस्फुरद्भिः कटाक्षैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १७

*வணங்கிய மக்களின் உள்ளத்தில் பக்தி எனும் கற்பகச் செடியை முளைக்கச் செய்கிற அமுத நீரைப் பொழிவதில் துடிதுடிப்புடன் உள்ள கடைக்கண்களால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (17)*

गजवदनकराग्राकीर्यमाणस्वचूडा-
तटवरसरिदूर्म्यासेचनैस्तापहारी ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। १८

*யானை முகத்தோன் துதிக்கை நுனியால் தன் சடையில் தங்கியுள்ள கங்கை நீரை வாரி இறைக்கும் போது அந்நீர்த் தெளிப்பால் தாபத்தைப்போக்குகிற சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (18)*

निजमकुटतटाभ्रनिम्नगावीचिविप्रुट्-
प्रकरविकसनेन प्रापयन् तापशान्तिम् ॥
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ १९

*தன் சடாமகுடத்திலுள்ள கங்கையின் அலையில் தெறித்து வெளியாகிற நீர்த்துளியின் பரவலான தெளிப்பால் தாபத்தை குறையச் செய்கிற சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (19)*

प्रथमभिषगधीशख्यातिमूर्जस्वलां स्वां
प्रविदधदवनम्रव्यूहसर्वार्तिहृत्या ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ २०

*தன்னை வணங்குகிற மக்கள் கூட்டத்தின் தாபமனைத்தையும் நீக்குவதால், (ருத்ரானுவாகம் கூறுகிற) முதல் சிறந்த மருத்துவர் என்ற புகழை மேலும் வலுப்படுத்துகிற சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (20)*

प्रवणजनविमोहध्वान्तविध्वंसकेळी-
पटुतरदरहासप्रस्फुरच्चन्द्रिकाभिः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ॥ २१

*அடக்கமுள்ள மக்களின் மதிமயக்கம் என்ற இருளை அழிப்பதெனும் விளையாட்டில் அதிகத்திறமையுள்ள புன்சிரிப்பால் வெளியாகிற நிலவொளியால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (21)*

कुपितशिखरिकन्याचित्तशीतांशुकान्त-
द्रुतिषु शशिमयूखैः सुन्दरैर्मन्दहासैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २२

*தன்னிடம் கோபித்துக் கொண்ட மலைமகளின் சித்தமெனும் சந்திரகாந்தக்கல்லை இளக்குவதில் தேர்ந்த நிலவொளி போன்ற அழகிய புன்னகைகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (22)*

प्रणमति विहरद्भिस्तत्र सम्प्रीतिदत्त-
प्रविमलतरहारभ्रान्तिदैर्मन्दहासैः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २३

*வணங்குபவரிடம் விளையாடுபவையும் அங்கு அன்பளிப்பாகத் தந்த தூயமாலை போன்று பிரமிக்க வைப்பவையுமான புன்சிரிப்புகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (23)*

स्फुटविचकलितार्यातुङ्गवक्षोजकुम्भ-
श्रितकुवलयमालेनामलेन स्मितेन ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २४

*மலர்ந்து பிரிந்து விம்மி நிற்கிற அம்பாளின் கலசம் போன்ற மார்பகத்தின் மீது அமர்ந்த அல்லிப்பூ மாலை போன்ற தூயதான சிரிப்பால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (24)*

स्फुरदधररुचिश्रीसङ्गिना पद्मराग-
द्युतिकवचितहीराभेन मन्दस्मितेन ।

अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २५

துடிக்கின்ற உதட்டின் நிறத்துடன் ஒட்டி, பத்மராக ரத்தின ஒளியால் மூடப்பட்ட வைரம் போன்ற புன்சிரிப்பால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (25)

सुकृतिहृदयसौधप्रोल्लसच्चन्द्रिकाभिः
दरहसितरुचीभिर्दारितार्तिच्छटाभिः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् । २६

நற்செயல் புரிபவரின் இதயமாளிகையில் ஒளிர்பவையும் துயரின் வீச்சைத் தடுப்பவையுமான சிரிப்பொளிகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (26)

कमलजठरनिर्यच्चन्द्रिकाभ्रान्तिकृद्भिः
शुभतरदरहासैराननाब्धिःसरद्भिः ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २७

தாமரையின் நடுப்பகுதியிலிருந்து வெளியாகிற நிலவொளியோ என்ற பிரமை தருபவையும் முகத்திலிருந்து வெளியாகுபவையுமான மங்களப் புன்னகைகளால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (27)

श्रितजनघनपुण्यश्रेणिमल्लीमतल्ली-
कुसुमसमुदयेनोदारमन्दस्मितेन ।
अघमखिलमपास्यन्नस्य डिम्भस्य शम्भुः
सकलभयनिवृत्तिं साम्बमूर्तिर्विधत्ताम् ।। २८

*அண்டிய மக்களின் கனத்த புண்யவரிசையாகிற சிறந்த மல்லிகைப் பூக்குவியல் போன்ற பெருந்தன்மை கொண்ட புன்னகையால் சம்புவான ஸாம்பமூர்த்தி இந்தச் சிறுவனின் தீவினை அனைத்தையும் அகற்றி எல்லா பயங்களையும் நீக்கட்டும். (28)*

**तारावलीस्तुतिमिमां तरुणेन्दुमौळेः**
**शृण्वन्ति ये भुवि पठन्ति शिवः स तेषाम् ।**
**दीर्घायुरुन्नतविभूतिसुतर्द्धिशम्भु-**
**भक्त्याद्यभीष्टमखिलं प्रददाति हृष्टः ॥ २९**

*இளம் சந்திரனைச் சூடிய சிவ பெருமானின் இந்த தாராவளீ ஸ்துதியைக் கேட்பவருக்கும் படிப்பவருக்கும் சிவபெருமான் நீண்ட ஆயுளையும் உயர்ந்த செல்வத்தையும் நன்மக்களையும் சிவபக்தியையும் மற்ற விருப்பங்களையும் மகிழ்ச்சியுடன் வழங்குகிறார். (29)*

*தாராவளீ ஸ்தோத்திரம் முற்றிற்று.*

शिवाभ्यां नमः

## ८. आर्तिहरस्तोत्रम्

## 8. ஆர்த்திஹரஸ்தோத்திரம்.

**श्रीशम्भो मयि करुणाशिशिरां दृष्टिं दिशन् सुधावृष्टिम् ।**
**सन्तापमपाकुरु मे मन्ता परमेश तव दयायाः स्याम् ॥ १**

*சீர்மிக்க சம்புவே! கருணையால் குளிர்ந்த அமுதம் பொழிகிற உமது பார்வையை என் மீது செலுத்தி என் தாபத்தை அகற்றுவீர். பரமேச்வர! உமது தயையை நான் உணர்ந்தவனாவேன். (1)*

**अवसीदामि यदार्तिभिरनुगुणमिदमोकसोऽम्हसां खलु मे ।**
**तव सन्नवसीदामि यदन्तकशासन न तत्तवानुगुणम् ॥ २**

*யமனை அடக்கியவரே! நான் துயரங்களால் வாடுகிறேன். அது நான் செய்த பாபக்குவியலுக்கு ஒத்துள்ளது. உம்மைச் சார்ந்தவனுகிய பின்னரும் வாடுகிறேன். அது உமக்கு ஒத்துள்ளதல்ல. (2)*

**देव स्मरन्ति तव ये तेषां स्मरतोऽपि नार्तिरिति कीर्तिम् ।**
**कलयसि शिव पाहीति क्रन्दन् सीदाम्यहं किमुचितमिदम् ॥ ३**

*தேவனே! உம்மை நினைப்பவருக்குத் துயரமில்லை என உம்புகழை கொண்டுள்ளீர். சிவ! காப்பாற்றுவீர் என்று புலம்புகிற நான் வாடுகிறேன். இது உசிதமா? (3)*

**आदिश्याघकृतौ मामन्तर्यामिन्नसावघात्मेति ।**
**आर्तिषु मज्जयसे मां किं ब्रूयां तव कृपैकपात्रमहम् ॥ ४**

*உள்ளத்திலிருந்து கட்டுப்படுத்துபவரே! என்னைப் பாபச் செயல் புரியத் தூண்டுவிட்டுப் பின் இவன் பாபி என்று துயரத்தில் மூழ்கடிக்கறீர். என்ன சொல்வேன்? நான் உமது கிருபைக்குத் தனி உரிமை பெற்றவன். (4)*

**मन्दाग्रणीरहं तव मयि करुणां घटयितुं विभो नालम् ।**
**आक्रष्टुं तां तु बलादलमिह मद्दैन्यमिति समाश्वसिमि ॥ ५**

*நான் அறிவு மந்தமானவர்களின் முன் நிற்பவன். உமது கருணையை என்னிடம் பொருத்துவதற்கு இயலாதவன். அதனை வலிய இழுத்து வரச்சக்தியற்றவன். இது என் இரக்கத்துக்குரிய நிலை என்று சமாதானம் செய்து கொள்கிறேன். (5)*

**त्वं सर्वज्ञोऽहं पुनरज्ञोऽनीशोऽहं ईश्वरस्त्वमसि ।**
**त्वं मयि दोषान् गणयसि किं कथये तुदति किं दया न त्वाम् ॥**

*நீர் எல்லாமறிந்தவர். எல்லாம் வல்லவர். நான் அறிவற்றவன். எதற்கும் இயலாதவன். நீர் என்னிடம் குற்றம் காண்கிறீர். என்ன சொல்வேன்? தயை உம்மை (எனக்கு நலம்புரிய) த் தூண்டவில்லையா? (6)*

**आश्रितमार्ततरं मामुपेक्षसे किमिति शिव न किं दयसे।**
**श्रितगोप्ता दीनार्तिहृदिति खलु शंसन्ति जगति सन्तस्त्वाम्॥**

*சிவ! உம்மை அண்டியவன், மிகக் துயருற்றவன். இந்த என்னை ஏன் அசட்டை செய்கிறீர்? ஏன் தயை புரியாதுள்ளீர்? உலகில் நல்லோர் அண்டியவரைக்காப்பவர், எளியவனின் துயரை அகற்றுபவர் என உம்மை பாராட்டுகிறூர்களே (7)*

**प्रहराहरेतिवादी फणितमदाख्य इति पालितो भवता।**
**शिव पाहीतिवदोऽहं श्रितो न किं त्वां कथं न पाल्यस्ते॥ ८**

*ப்ரஹா (அடிப்பாய்) ஆஹர (கொண்டுவாய்) எனப் பேசுபவன், என் (ஹர என்ற) பெயரைக் கூறுபவன் என்று உம்மால் காப்பாற்றப்படுகிறுன். (அவன் வேறு பொருளில் ஹர என்று கூறினுன்.) சிவ! காப்பாற்றுவீர் என்று (நேரிடையாக உம்மிடமே) கூறி அணுகியுள்ளேன். நான் காப்பாற்றத்தக்கவன் இல்லையா? (8)*

**शरणं व्रज शिवमार्तीस्स तव हरेदिति सतां गिराऽहं त्वाम्।**
**शरणं गतोऽस्मि पालय खलमपि तेष्वीश पक्षपातान्माम्॥ ९**

*சிவனைச் சரணடைவாய். அவர் உனது துயரங்களை அகற்றுவார் என்ற நல்லோர் வாக்கால் உம்மைச் சரணடைந்துள்ளேன். ஈச! அவர்களது சொல்லைப் பொருளுள்ளதாக்க (அதனிடம் பக்ஷபாதம் காட்டி) துஷ்டனுயினும் என்னைக் காப்பீர். (9)*

*ஆர்த்திஹரஸ்தோத்திரம் முற்றிற்று*

शिवाभ्यां नमः

# ९. कुळीरेशाष्टकम्

# 9. குளீரேசாஷ்டகம்

*திருந்து தேவன் குடி, திருத்தேவன் குடி, நண்டாங்கோவில் என்ற ஈசனின் ஆலயம் திருவிசலூர் அருகில் உள்ளது. ஈசன் கர்கடகேசுவரர் எனும் குலீரேசர். தேவி அபூர்வ நாயகி எனும் அருமருந்தம்மை. நண்டு வழிபட்ட ஸ்தலம். ஸ்ரீ ஸ்ரீதர அய்யாவான் இங்கு ஈசனைப் பாடியத் துதி இது. குலீரம்-கர்கடகம்-நண்டு)*

तवास्याराद्धारः कति मुनिवराः कत्यपि सुराः
तपस्यासन्नाहैः सुचिरममनोवाक्पथचरैः ।
अमीषां केषामप्यसुलभममुष्मै पदमदाः
कुळीरायोदारं शिव तव दया सा बलवती ॥ १

*ஈசனே! எத்தனை முனிவர்கள் எத்தனை தேவர்கள் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத தவமுறைகளால் வெகுநாட்கள் உம்மை வழிபட்டு வந்திருக்கின்றனர்? இவர்களுக்கு எளிதில் கிட்டாத இடத்தை நண்டுக்குப் பெருமனத்துடன் அளித்தீரே! அந்த தயை வலிவுமிக்கது. (1)*

अकर्तुं कर्तुं वा भुवनमखिलं ये किल भव-
न्त्यलं ते पादान्ते पुरहर वलन्ते तव सुराः ।
कुटीरं कोटीरे त्वमहह कुळीराय कृतवान्
भवान् विश्वस्येष्टे तव पुनरधीष्टे हि करुणा ॥ २

*இந்த உலகமனைத்தையும் படைப்பதற்கும் படைக்காமலிருக்கவும் திறமை பெற்ற தேவர்கள் உமது திருவடியைச் சுற்றி வருகின்றனர். புரஹரரே! நீரே உமது சடாமகுடத்தில் நண்டிற்கு இடமளித்தீர். நீர் உலகைக் கட்டுப்படுத்துபவர். கருணை உம்மைக் கட்டுப்படுத்துகிறது. (2)*

तवारूढो मौळिं तदनधिगमव्रीळनमितां
चतुर्वक्त्रीं यस्त्वच्चरणसविधे पश्यति विधेः ।
कुळीरस्यास्यायं कुलिशभृदलक्ष्यः शिव भव-
दया सेयं त्वामप्यधरितवती किं न कुरुताम् ।। ३

*உமது தலை மீது ஏறிய நண்டு உமது திருவடியருகில் பிரும்மாவின் நான்கு முகங்களும் உம் தலையை அறிய முடியாமல் வெட்கத்தால் குனிந்து நிற்பதைப் பார்க்கிறது. சிவ! இந்திரனால் காணமுடியாத தலை நண்டுடையதாகிவிட்டது. உம்மையே தாழ்ந்தவராக்கிவிட்ட உமது தயை எதைத் தான் செய்யாது.? (3)*

श्रुतिस्मृत्यभ्यासो नयनिचयभूयःपरिचयः
तथा तत्तत्कर्मव्यसनमपि शुष्कश्रमकृते ।
त्वयि स्वान्तं लग्नं न यदि यदि लग्नं तदियता
जिता कैवल्यश्रीः पुरहर कुळीरोऽत्र गमकः ।। ४

*புரஹரரே! உம்மிடம் உள்ளம் பதியாவிடில் வேதங்களையும் ஸ்மிருதிகளையும் கற்றுப்பழகுவது, நியாயங்களை (மீமாம்ஸா சாஸ்திரத்தில் கூறப்படுபவற்றை) மேலும் மேலும் அறிமுகப்படுத்திக்கொள்வது. அந்தந்த கருமங்களை வழக்கமாகப்பின்பற்றுதல் என எல்லாமே வரண்ட உழைப்பால் ஏற்படுகிற களைப்பைத் தருவதாகும். உம்மிடம் உள்ளம் பதிந்துவிட்டால். மோக்ஷ பதவியை வென்றுவிட்டதாகும். நண்டு அதை நிரூபிக்கிறது. (4)*

तपोभिः प्राग्जन्मप्रकरपरिनम्रैः पुररिपो
तनौ यस्यां कस्यामपि स हि भवार्तिप्रतिभटः ।
त्वयि स्याद्धीबन्धस्तनुरचरमा सैव चरमा
कुळीरो ब्रूते तन्महिमपथविद्धुरुरयम् ।। ५

*புரங்களின் எதிரியே! பல முன் பிறவிகளின் செய்த தவங்கள் பழுத்துப் பலன் தரமுற்பட்டால் எந்த உடலுடன்*

பிறந்தாலும் அந்த உடல் ஸம்ஸாரதுக்கங்களை அழிக்கும். உம்மிடம் உள்ளம் பதிந்திருந்தால் அந்த உடலே கடைசியாகும். அது உயர்ந்த உடலே. அதன் பெருமையை உணர்ந்த நண்டு அதனைக் கூறுகிறது. அதுவே நமக்குக் குரு. (5)

धियो धानं नाम त्वयि शिव चिदानन्दपरमो-
न्मिषत्साम्राज्यश्रीकुरळरभसाकर्षकुतुकम् ।
कुळीरेण ज्ञातं कथमनधिगम्यं दिविषदां
दया ते स्वच्छन्दा प्रथयति न कस्मै किमथवा ॥ ६

சிவ! உம்மிடம் உள்ளத்தை வைப்பதென்பது, பேரறிவும் பேரானந்தமும் மேலிட்டு வெளிப்படுவதாகும். பேரரசரது லக்ஷ்மியின் கேசத்தை வேகத்துடன் பிடித்திழுப்பதில் ஆர்வமிக்கது. இது நண்டால் உணரப்பட்டது. அதை தேவர்கள் ஏன் உணரவில்லை? உமது தயை தன் விருப்பப்படி நடப்பதானதால் சிலருக்கு அதை வெளிப்படுத்தவில்லை போலும். (6)

तदुच्चत्वं नैच्यं त्वितरदिति लोकाः शिव मुधा
व्यवस्थामस्थाने विदधति च नन्दन्ति च मिथः ।
कुळीरस्त्वन्मौळिस्थितिमसुलभामेत्य स भवत्-
कृपामुच्चत्वं तद्विरहमपि नैच्यं प्रथयति ॥ ७

சிவ பெருமானே! அது மேனிலை; இது கீழ் நிலை என உலகம் தேவையற்று வீணே ஒரு ஒழுங்கு முறையைச் செய்து அதில் ஒருவருக் கொருவர் பாராட்டி மகிழ்கின்றது. நண்டோ எளிதில் கிட்டாத உம் தலை மீது அமர்வதைப் பெற்று உமது கிருபை உச்சநிலை, கிருபை பெறுதது தாழ்நிலை என உலகிற்கு பிரகடனப் படுத்துகிறது. (7)

कुळीरेशाख्यातिर्गिरिश कृपयोच्चैरुपहृता
तवेयं भक्तायोन्नतिवितरणश्रीगमनिका ।

भवद्भक्तस्युन्मीलत्फलगरिमटीकास्थितिजुषा
कुळीरस्य ख्यात्या जगति सहचर्या विहरते ।। ८

*கிரிசரே! நண்டின் ஈசன் எனத் தன்னை விளம்பரப்படுத்திக் கொண்டீர். உமது பக்தனுக்கு உயர்வை வழங்குகிற அழகின் அடையாளமாக அது உரக்க வெளிப்படுத்தப் பட்டது. நண்டிற்குக் கிட்டிய புகழ் உம்மிடம் பக்தி கொண்டதன் பயனின் சிறப்பை விளக்கும் உரை நூல் நிலை பெற்று விளையாடுகிறது. (8)*

कुळीरेश स्तोत्रं त्वदनुपधिकानुग्रहभवं
पठेयुर्ये नित्यं शृणुयुरपि वा ये पुनरिदम् ।
प्रसादात्ते तेऽमी विधुतदुरितास्त्वय्यभिरताः
भवेयुर्निर्यत्नाधिगतसकलाभीप्सितफलाः ।। ९

*நண்டின் ஈசரே! உமது இந்த ஸ்தோத்திரம் காரணம் எதையும் எதிர்பாராத உமது அருளின் விளைவு. இதனைத் தினந்தோறும் படிப்பவரும் கேட்பவரும் உமது அருளால், பாபத்தை உதறிவிட்டு உம்மிடம் ஈடுபட்டு முயற்சியின்றி எளிதில் விரும்பியதனைத்தையும் பெறுவர். (9)*

कर्कटकचन्द्रयोगः कर्कटकेशान मूर्ध्नि ते दृष्टः ।
कारय वृष्टिममोघां वारय वर्षोपरोधदुर्योगम् ।। १०

*கர்கடேசுவரரே! உமது தலையில் கர்கடகமும் சந்திரனும் இணைந்திருப்பது காணப்பட்டது.வீணாகாத (நற்பயனைத்தருகிற) மழையை உண்டாக்குவீர். மழையைத்தடுக்கிற கெட்ட (கிரஹங்கள் முதலியவற்றின்) சேர்க்கையைத் தடுப்பீர். (கடகராசியில் சந்திரன் ஸஞ்சரிக்கும் போது மழைவரும் என்பர். மழையின்றிப் பயிர் முதலானவை வாடுவதைக் கண்டு அத்துன்பம் நீங்க அய்யாவாள் இதனைப்பாடினார் என்பர்.)*

குலீரேசாஷ்டகம் முற்றிற்று.

शिवाभ्यां नमः

# १०.जम्बुनाथाष्टकम्

# 10. ஜம்புநாதாஷ்டகம்

*திருவானைக்கா, கஜாரண்யம், கரிவனம், இங்கு நாவல் மரத்தடியில் அப்புலிங்கவடிவில் ஸ்ரீஜம்புநாதர் உள்ளார். தேவி அகிலாண்டேச்வரி. இவரைப்பற்றிய துதி இது.*

**कश्चन जगतां हेतुः कपर्दकन्दलितकुमुदजीवातुः ।**
**जयति ज्ञानमहीन्दुर्जन्ममृतिक्लान्तिहरदयाबिन्दुः ।। १**

*உலகின் மூலகாரணமான ஒருவர்; சடைமுடியில் மொட்டு போன்று சந்திரனைக் கொண்டவர். ஜ்ஞானம் எனும் பூமிக்குச் சந்திரனுகக் குளிர்ச்சியும் ஆனந்தமும் தருபவர், பிறப் பிறப்புகளின் களைப்பை தயையின் திவிலையால் அகற்றுபவர். அவர் விளங்குகிறுர் (1)*

**श्रितभूतिबद्धपताकः कलितोत्पलवननवमदोद्रेकः ।**
**अखिलाण्डमातुरेकः सुखयत्वस्मांस्तपःपरीपाकः ।।**

*அண்டியவரைத் தாங்குவதற்காகக் கொடி கட்டியவர், அல்லிக் காட்டின் புதிய மதர்ப்பின் வடிவானவர் (சந்திரனைப் போன்றவர்.) அகிலாண்டேசுவரியின் தவத்தின் பயனுனவர். அவர் நமக்கு இன்பமளிக்கட்டும் (2)*

**कश्चन कारुण्यझरः कमलाकुचकलशकषणनिशितशरः ।**
**श्रीमान् दमितत्रिपुरः श्रितजम्बूपरिसरश्चकास्तु पुरः ।। ३**

*கருணையின் பேரருவி அவர். லக்ஷ்மியின் மார்பகத்தைத் தடவுகிற விஷ்ணுவை அம்பாகக் கொண்டவர். திரிபுரங்களை அடக்கியவர், நாவல்மரத்தின் அடியில் இருப்பவர். அவர் நம் முன் தோன்றட்டும். (3)*

**शमितस्मरदवविसरः शक्राद्याशास्यसेवनावसरः ।**
**करिवनघनभाग्यभरो गिरतु मलं मम मनस्सरः शफरः ।। ४**

என்மனமாகிய ஓடையில் மீனாகச் சுற்றுபவர், மன்மதன் (காமம்) எனும் காட்டுத்தீ பரவாமல் தடுப்பவர். இந்திரன் முதலானவரால் பணிவிடைக்கான நேரம் தேடப்படுபவர். ஆனைக்காவின் கனத்த பாக்கியப் பொதியானவர். அவர் என் அழுக்கை (பாபத்தை) விழுங்கட்டும். (4)

गृहिणीकृतवैकुण्ठं गेहितजम्बूमहीरुडुपकण्ठम् ।
दिव्यं किमप्यकुण्ठं तेजःस्तादस्मदवनसोत्कण्ठम् ॥ ५

விஷ்ணுவை மனைவியாக்கிக் கொண்டது. நாவல் மரத்தடியை இல்லமாக்கிக் கொண்டது. தெய்வத்தன்மை மிக்கது. குன்றாத அந்தப் பேரொளி நம்மைக் காப்பதில் ஆர்வமுள்ளதாக ஆகட்டும் (5)

कृतशमनदर्पहरणं कृतकेतरफणितिचारिरथचरणम् ।
शक्रादिश्रितचरणं शरणं जम्बूद्रुमान्तिकाभरणम् ॥ ६

நாவல் மரத்தினருகிலுள்ள அந்த ஆபரணம் எனக்குப்புகலிடமாகும். அது யமனின் செறுக்கை அடக்கியது. வேதங்களைத் தேரின் நான்கு சக்கிரங்களாகக் கொண்டது. இந்திரன் முதலியவரின் புகலிடமான திருவடிகள் கொண்டது. (6)

करुणारसवारिधये करवाणि नमः प्रणम्रसुरविधये ।
जगदानन्दथुनिधये जम्बूतरुमूलनिलयसन्निधये ॥ ७

நாவல் மரத்தடியில் குடியிருக்கிற நல்ல நிதி அது. கருணைக்கடல், தேவர்களாலும் பிரும்மாவாலும் வணங்கப் பெற்றது. உலகின் ஆனந்தத்திற்கு நிதியானது. அதற்கு நமஸ்காரம் செய்கிறேன். (7)

कञ्चन शशिचूडालं कण्ठेकालं दयौघमुत्कूलम् ।
श्रितजम्बूतरुमूलं शिक्षितकालं भजे जगन्मूलम् ॥ ८

சந்திரனைச் சூடியதும், கழுத்தில் கருமை கொண்டதும், கரையில் மோதுகிற தயையின் பிரவாகமானதும் நாவல் மரத்தடியை அண்டியிருப்பதும் யமனை சிக்ஷித்ததுமான ஜகத்தின் மூல காரணத்தை வழிபடுகிறேன். (8)

ஜம்பு நாதாஷ்டகம் முற்றிற்று.

शिवाभ्यां नमः

# ११. दोषपरिहाराष्टकम्

# 11. தோஷபரிஹாராஷ்டகம்

**अन्यस्य दोषगणनाकुतुकं ममैतद्**
**आविष्करोति नियतं मयि दोषवत्त्वम्।**
**दोषः पुनर्मयि न चेदखिले सतीशो**
**दोषग्रहः कथमुदेतु ममेश तस्मिन्॥ १**

*ஈச! பிறரது குறைகளை எண்ணுவதில் உள்ள இந்த என் ஆர்வம் நிச்சயமாக என்னிடம் குறையுள்ளதை வெளிப் படுத்துகிறது. என்னிடம் குறையில்லையேல், அனைவரும் ஈசனுகிவிடுவர். அப்போது பிறரிடம் குறை காண எப்படி இயலும்? (1)*

**एषा व्यथेतरकृतेति ममेश तस्मिन्**
**कोपो यदि स्वपरकाममुखप्रसूता।**
**सेयं व्यथेति मयि मे न कथन्नु कोपः**
**स्वस्य व्यथा स्वदुरितप्रभवा हि सर्वा॥ २**

*ஈச! இந்த வேதனை பிறரால் ஏற்பட்டது என்று எனக்கு அந்தப் பிறரிடம் கோபம். என் விருப்பமும் பிறரது விருப்பமும் மோதும் போது (என் விருப்பத்திற்கு இடமில்லாததால்) இந்த வேதனை ஏற்பட்டதென்றால் (அதில் ஒருகாரணமான) என்னிடம் ஏன் கோபம் ஏற்படவில்லை? (மேலும்) என் பாபத்தின் பின்விளைவே என் அனைத்து வேதனையு மல்லவா? (என் ஆசையும் அவனது ஆசையும் மோதின. என் ஆசை நிறைவேறவில்லை. கோபம் வந்தது. கோபத்திற்குக் காரணம் இருவரது ஆசைகளும். அப்போது அவனிடம் கோபம் வந்தது போல் என்னிடமும் கோபம் வரவேண்டுமே?) (2)*

**कामप्रभृत्यखिलदोषनिधेर्ममैष**
**मय्याह दोषमिति को नु दुराग्रहोऽस्मिन्।**

हेयत्वमालपति योऽयमलं न केन
वार्योऽथ सत्ववति सोऽयमसत् किमाह ॥ ३

*காமம் கோபம் முதலிய அத்தனை குறைகளின் இருப்பிடமான எனது குறை இது, அவன் என்னிடம் உள்ள குறையைச் சுட்டிக் காட்டினுன் என்பதால் அவனிடம் இந்த ஆத்திரம் ஏன்? தவிர்க்க வேண்டிய குறை என்னிடமுள்ளது என அவன் கூறினுன். அவனை எவர் தடுக்கமுடியும்? நிறை உள்ள இடத்திலா குறை கூறினுன்? (3)*

यः संश्रितः स्वहितधीर्व्यसनातुरस्तद्-
दोषस्य तं प्रति वचोऽस्तु तदन्यदोषम्।
यद्वच्मि तन्मम न किं क्षतये स्वदोष-
चिन्तैव मे तदपनोदफलोचिताऽतः ॥ ४

*ஒருவன் தனது நலம் விரும்பி என்னை அண்டினுன் எனில் அவனது குறையைச் சொல்லலாம். அவ்வாறின்றி பிறரது குறையைக் கூறுவது என் அழிவிற்குத் தான் பயன்படும் அல்லவா? தன் குறையைப்பற்றிய சிந்தனை தன் குறையை அகற்றிக் கொள்ளப்பயன் படுவதாலுல் உசித மானது. (4)*

दोषं परस्य ननु गृह्णति मय्यनेन
स्वात्मैष एव परगात्रसमाहृतेन।
दुर्वस्तुनेव मलिनीक्रियते तदन्य-
दोषग्रहादहह किं न निवर्तितव्यम् ॥ ५

*பிறரது குறையைக் கண்டு பிடிக்கிற எனது உள்ளம் பிறரது உடலிலிருந்து கொணர்ந்த குறைகளைச்சுமந்து அதன் அழுக்கால் தானும் அழுக்காகிவிடுகிறது. அதனுலும் பிறரிடம் குறை காண்பதைத் தவிர்க்க வேண்டுமல்லவா?*

निर्दोषभावमितरस्य सदोषभावं
स्वस्यापि संविदधती परदोषधीर्मे।
आस्तामियं तदितरा तु परार्तिमात्र-
हेतुर्व्यनक्तु न कथं मम तुच्छभावम् ॥ ६

*பிறரிடம் குறை காண்கிற என் புத்தி பிறரிடம் குறையில்லை என்னிடம் குறையுள்ளது என்ற நிலைக்குக் கொண்டுவிடுகிறது. இது இருக்கட்டும். என்னிடம் குறை யில்லை; அவனிடம் தான் குறையுள்ளது என்ற நிலை கொண்டால் அது (அவனது குறையைச் சுட்டிக் காட்டி) அவனுக்கு வேதனை தருவதாக மட்டும் அமையும். அது எனது அற்பத்தனத்தை வெளிக் காட்டாதா? (6)*

**पद्मादिसौरभ इव भ्रमरस्य हर्षं**
**हित्वाऽन्यदीयसुगुणे पुनरन्यदोषे ।**
**हर्षो दुरर्थ इव गेहकिटेः किमास्ते**
**हा मे कदेश कृपया विगळेत्स एषः ॥ ७**

*பிறரது சிறப்பைக் காணும் போது, தாமரையின் நறு மணத்தை உணர்ந்த வண்டிற்கு மகிழ்ச்சி ஏற்படுவது போல், எனக்கும் மகிழ்ச்சி ஏற்படும். பிறரது குறையைக் காணும் போதோ, வீட்டுப்பன்றிக்கு துர்நாற்றத்தில் மகிழ்ச்சிபோல் எனக்கு மகிழ்ச்சி ஏற்படும். ஈச! இந்நிலை (கெட்டதைக் கண்டு மகிழ்வது) உன்கிருபையால் எப்போது விலகும்? (7)*

**दोषे स्वभाजि मतिकौशलमन्यभाजि**
**मौढ्यं गुणेऽन्यजुषि हर्षभरः स्वभाजि ।**
**अस्तप्रसक्तिरखिलेषु दयात्युदार-**
**वृत्त्योर्जितो मम कदास्तु हरानुरागः ॥ ८**

*தன்னிடமுள்ள குறையை உணர்வதில் அறிவின் திறமை இருக்கட்டும். பிறரது குறையைக் காண இயலாமை இருக்கட்டும். பிறரிடம் சிறப்பைக் கண்டால் மகிழ்ச்சி வரட்டும். சிறப்பு தன்னிடமிருப்பின் அதில் ஒட்டுதல் வேண்டாம். எல்லோரிடமும் பரிவு இருக்கட்டும். இந்த உயர்ந்த மனப்போக்கால் எனக்குச் சிவனிடம் அன்பு நிலைபெறுவது எப்போது? (8)*

**தோஷபரிஹாராஷ்டகம் முற்றிற்று**

शिवाभ्यां नमः

# १२. कृष्णद्वादशमञ्जरी

## 12. கிருஷ்ணதுவாதசமஞ்ஜரீ

दुराशान्धोऽमुष्मिन् विषयविसरावर्तजठरे
तृणच्छन्ने कूपे तृणकबळलुब्धः पशुरिव।
पतित्वा खिद्येऽसावगतिरित उद्धृत्य कलये:
कदा मां कृष्ण त्वत्पदकमललाभेन सुखितम्॥ १

*கெட்ட ஆசையால் பார்வை இழந்த நான் வெளிப் பொருள் நாட்டமென்ற சுழலின் நடுவே, புதரால் மூடப்பட்ட பாழுங்கிணற்றில் ஒருபிடி புல்லிற்கு ஆசைப்பட்ட ஆடுமாடு விழுவதுபோல் விழுந்து துன்புறுகிறேன். இவன் வேறு போக்கற்றவன் எனக்கருதி என்னை இதிலிருந்து தூக்கிமேலே கொணர்ந்து, உமது திருவடித்தாமரையை பற்றச் செய்து எப்போது இன்புறச் செய்வீர்? (1)*

कथञ्चिद्यच्चित्ते कमलभवकामान्तकमुखाः
वहन्तो मज्जन्ति स्वयमनवधौ हर्षजलधौ।
क तद्दिव्यश्रीमच्चरणकमलं कृष्ण भवतः
क चाहं तत्रेहा मम शुन इवाखण्डलपदे॥ २

*க்ருஷ்ண! பிரும்மா சிவன் முதலானோர் தம் சித்தத்தில் எப்படியோ உமது திருவடித் தாமரைகளைச் சுமந்து எல்லையற்ற ஆனந்தக் கடலில் மூழ்கின்றனர். அந்த உமது திருவடி எங்கே! நான் எங்கே! இந்திர பதவிக்கு நாய் ஆசைப்படுவது போல் உமது திருவடியில் எனக்கு ஆசை. (2)*

दुरापस्त्वं कृष्ण स्मरहरमुखानां तदपि ते
क्षतिः का कारुण्यादगतिरिति मां लालयसि चेत्।
प्रपश्यन् रथ्यायां शिशुमगतिमुद्दामरुदितं
न सम्राडप्यङ्के दधदुरुदयस्सान्त्वयति किम्॥ ३

கிருஷ்ண! சிவன் முதலானோருக்கு நீர் எளிதில் கிட்டாதவர். கருணையால் என்னை லாலனை செய்வீரேயாகில் உமக்கு என்ன நஷ்டம்? ஆதரவற்ற ஒரு குழந்தை வீதியில் விசித்து விசித்து அழுகிறது. அரசனாயினும் அதைக் கண்டவன் பரிவுடன் மடியிலிட்டு ஸமாதானப்படுத்துவதில்லையா? (3)

प्रतिश्वासं नेतुं प्रयतनधुरीणः पितृपतिः
विपत्तीनां व्यक्तं विहरणमिदं तु प्रतिपदम्।
तथा हेयव्यूहा तनुरियमिहाथाप्यभिरमे
हतात्मा कृष्णैतां कुमतिमपहन्या मम कदा॥ ४

கிருஷ்ண! யமன் ஒவ்வொரு மூச்சின் இடையிலும் கொண்டு செல்ல முயல்வதில் முன் நிற்கிறான். ஒவ்வொரு அடியிலும் விபத்துகள் வெளிப்படையாக விளையாடுகின்றன. இந்த உடலும் தன் கூட்டைப் பிரித்துக் கொள்ள ஆயத்தமாயுள்ளது. அப்போதும் விஷய சுகம் நாடி என்னை அழித்துக் கொள்கிறேன். இந்தத்தவறான பாதையில் செல்கிற புத்தியை எப்போது தடுத்து நிறுத்துவீர். (4)

विधीशाराध्यस्त्वं प्रणयविनयाभ्यां भजसि यान्
प्रियस्ते यत्सेवी विमत इतरस्तेषु तृणधीः।
किमन्यत्सर्वाऽपि त्वदनभिमतैव स्थितिरहो
दुरात्मैवं ते स्यां यदुवर दयार्हः कथमहम्॥ ५

யதுக்களில் சிறந்தவரே! நீர் பிரும்மாவாலும் ஈசனாலும் வழிபடத்தக்கவர். நீர் அன்புடனும் அடக்கத்துடனும் அவர் களுடன் பழகுகிறீர். அவர்களை வழிபடுபவன் உமக்குப் பிரியமானவன். அவர்களைப் பொருட்படுத்தாதவன் உமக்கு எதிரி. இங்கோ எல்லா நடைமுறைகளும் நீர் விரும்பாதவை. உம் கண்களில் கெட்ட எண்ணம் கொண்டவனாகப்படுவேன். நான் உமது பரிவிற்கு உரியவனாவது எப்படி? (5)

विनिन्द्यत्वे तुल्याधिकविरहिता ये खलु खलाः
तथाभूतं कृत्यं यदपि सह तैरेव वसतिः।

तदेवानुष्ठेयं मम भवति नेहास्त्यरुचिर-
प्यहो धिङ्मां कुर्वे किमिव न दया कृष्ण मयि ते ॥ ६

*நான் யாருடன் கூடி வாழ்கிறேனோ அந்த போக்கிரிகள் நிந்திக்கத்தக்கவர் என்பதில் ஈடிணையற்றவர். அவ்வாறு எமது செயல் முறை. அதே தொடர்ந்து பின்பற்றப் படுகிறது. அதில் அருசி ஏற்படவில்லை. நான் ஒன்றுக்கும் உதவாதவன். என்ன செய்வேன்! கிருஷ்ணா! என்னிடம் உமக்குப் பரிவில்லையா? (6)*

त्वदाख्याभिख्यानत्वदमलगुणास्वादनभवत्-
सपर्याद्यासक्ता जगति कति वाऽऽनन्दजलधौ ।
न खेलन्त्येवं दुर्व्यसनहुतभुग्गर्भपतित-
स्त्वहं सीदाम्येको यदुवर दयेथा मम कदा ॥ ७

*யதுக்களில் சிறந்தவரே! உமது பெயரை உரக்கக் கூறுதல், உமது தூய குணங்களைச் சுவைத்தல், உம்மை வழிபடுதல் இவற்றில் ஈடுபட்டுப் பலர் உலகில் ஆனந்தக் கடலில் விளையாடுகிறார்கள். நானோ கெட்டபழக்கங்கள் என்ற தீயின் நடுவில் விழுந்து தனித்து வாடுகிறேன். நீர் எப்போது பரிவு காட்டுவீர். (7)*

कदा वा निर्हेतून्मिषितकरुणालिङ्गितभवत्-
कटाक्षालम्बेन व्यसनगहनान्निर्गत इतः ।
हताशेषग्लानिन्यमृतरसनिष्यन्दशिशिरे
सुखं पादाम्भोजे यदुवर कदाऽसानि विहरन् ॥ ८

*யதுக்களில் சிறந்தவரே! காரணமின்றி வெளிப்பட்ட கருணையால் அணைக்கப் பெற்று உமது கடாட்சத்தைப் பிடித்துக் கொண்டு, கெட்டபழக்கங்களாகிற அடர்ந்த காட்டிலிருந்து வெளிப்பட்டு களைப்பனைத்தையும் அகற்றுவதும், அமுத நீர்ப்பெருக்கால் குளிர்ந்ததுமான உமதுதிருவடிகளில் இனிது எப்போது பொழுது போக்கிக் கொண்டிருப்பேன் (8)*

अनित्यत्वं जानन्नतिदृढमदर्पः सविनयः
स्वके दोषेऽभिज्ञः परजुषि तु मूढस्सकरुणः ।

